# திருப்புகழ்
# முத்திக்கொரு வித்து



திருப்புகழ்மாமணி மு. அருணகிரி

# திருப்புகழ் முத்திக்கொரு வித்து

"திருப்புகழ் மாமணி"

மு. அருணகிரி

புத்தகம் கிடைக்குமிடம் :

அருணகிரி பதிப்பகம்

நெ.26, கந்தசாமி கோவில் தெரு,

பெரம்பூர் பேரக்ஸ், சென்னை-600 012.

## நூல் விவர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூல் பெயர் | : | திருப்புகழ் முத்திக்கொரு வித்து |
| ஆசிரியர் | : | திருப்புகழ் மாமணி மு. அருணகிரி |
| மொழி | : | தமிழ் |
| முதற்பதிப்பு | : | ஆகஸ்ட், 2006 |
| தாள் | : | 11.6 கி.கி. வெள்ளைத்தாள் |
| நூல் அளவு | : | 1 X 8 கிரவுன் |
| பக்கங்கள் | : | 192 பக்கங்கள் |
| விலை | : | ரூ.75.00 |
| எழுத்து | : | 11 புள்ளி |
| கணினி | : | சாய் விஷ்ணு ஜெராக்ஸ்<br>சூளை, சென்னை-112.<br>போன் : 2669 0272 |
| வெளியிடுபவர் & உரிமை | : | அருணகிரி பதிப்பகம்<br>நெ.26, கந்தசாமி கோயில் தெரு,<br>பெரம்பூர் பேரக்ஸ்,<br>சென்னை-600 012. |
| அச்சிட்டோர் | : | மூவேந்தர் அச்சகம்<br>இராயப்பேட்டை, சென்னை-14.<br>போன் : 28351189 |



இந்நூல்

திருமலை - திருப்பதி தேவஸ்தான

நிதி உதவியுடன் அச்சிட்டு வெளியிடப்படுகிறது.

- நன்றி! -

This Book

is Printed and Published with the Financial Assistance

of Tirumala - Tirupati Devasthanams.

Thanks and Hail to

LORD VENKATESWARA.

கயிலை மாமுனிவர்
**திருவளர்திரு காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்**
அதிபர், காசித்திருமடம்.
திருப்பனந்தாள் - 612 504
(தஞ்சை மாவட்டம்)
போன் : 56655

தேதி : 21-04-06

## வாழ்த்துரை

*திருப்புகழ்மாமணி மு. அருணகிரி அவர்கள் எழுதித் தொகுத்த 'திருப்புகழ் முத்திக்கொரு வித்து' எனும் நூல் கணினிப்படி கிடைக்கப் பெறலாயிற்று. 'வேல்மாறல்' முதலாக 'மூர்த்தியும் கீர்த்தியும்' முடிய 33 தலைப்புக்களின் தொகுப்பாக நூல் அமைந்துள்ளது.*

*கந்தப்பெருமானின் விந்தைப் புகழைப் பயில்வோர் கேட்போர் சிந்தை இனிக்கச் சந்தத் தமிழால் பாடியருளியவர் அருணகிரியார். அவர் பாடியருளிய திருப்புகழ்ப்பாடல்களில் ஆசிரியரது பரந்த பயிற்சியும், நீங்காத பற்றும் கட்டுரைகளில் காணக்கிடக்கின்றன. காலை எழுந்தது முதல் இரவு படுக்கப்போகும் வரை ஓத வேண்டிய பாடல்களின் தொகுப்பு அன்பர்கட்குப் பெரும் பயன் தருவதாகும். "மனத்திற்கும் அறிவிற்கும் இடையே உரையாடல்" கட்டுரையில் உள்ள விளக்கம் பயனுடையதாகும். திருக்கடவூர் பற்றிய திருப்புகழ்ப்பகுதி சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. அருணகிரியார் கையாண்ட பன்மொழித் தொடர்கள் ஒரு கட்டுரையில் தெளிவாக்கப்பட்டுள்ளன. "ஆறுபடையா ஆற்றுப்படையா" எனும் கட்டுரை சிறப்பு. திருமூலரும், அருணகிரியாரும் பற்றிய செய்திகள் விளக்கமாகத் தரப்பட்டுள்ளன. தை, மாசி, பங்குனி மாதங்களின் சிறப்புகள் சிறப்பாகக் கட்டுரைகள் மூலம் விளக்கப்பட்டுள்ளன.*

*ஆசிரியரது குரு பக்தியும், அனுபவ அறிவும், திருப்புகழில் அவருக்குள்ள பரந்த அறிவும், கட்டுரைகளில் பிரதிபலிக்கின்றன. அரிதின்முயன்று அரிய கருத்துக்களைப் பலரும் பயன்பெறும் வண்ணம் கட்டுரையாக்கித் தரும் ஆசிரியர் முயற்சி பாராட்டிற்குரியது.*

*ஆசிரியர் நலமுடன் பன்னாள் வாழ்ந்து இத்தகு உயரிய பணிகளில் மென்மேலும் ஈடுபட்டுப்பலருக்கும் பயன்படுமாறு தொண்டாற்றத் திருவருள் புரியுமாறு செந்திலாண்டவன் திருவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.*

**டாக்டர். டி. செல்வராஜ்**
M.A., M.Phil.,
தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு)

நெ.5, ஆண்டாள் தெரு,
என்.ஜி.ஓ. நகர்,
பொன்னேரி - 601 204
தொலைப்பேசி : 27974545

## அணிந்துரை

"திருப்புகழ் முத்திகொரு வித்து" என்ற இந்த அருமையான ஆராய்ச்சி நூல், பெருமை மிக்க தமிழ்க் களஞ்சியம், பக்திக் கருவூலம், பற்பல போக்குகளிலும், நோக்குகளிலும் திருப்புகழை தலைமையாக, மற்ற இலக்கியங்களை இணைத்து, ஒப்பிட்டு, நுணுக நுணுக ஆராயும் ஒருமூலம்.

வாடும் மலர்களால் தொடுத்த பூ மாலை அன்று. என்றும் மணக்கும் பஞ்சரத்ன பாமாலை என்றே கூறலாம்.

"திருப்புகழ் முத்திக்கொருவித்து" - "வித்து" என்பது வேறு, "விதை" என்பது வேறு. இரண்டும் ஒன்றாகாது வெவ்வேறானவை.

வித்தில் அடங்கி இருக்கும் மற்றொரு நுண்ணிய உறுப்பே விதை. "விதை" என்பது வளர்வது. அது செழிப்புடன் வளர்வதற்குரிய ஊட்டச்சத்துகளை அளிப்பது "வித்து".

வித்து - விதை என்ற இந்த இரட்டை உறுப்புகளை வேர்க்கடலையிலும் காணமுடியும்.

சான்று : "வித்தில் அடங்கும் விதை போல்", காளமேகப் புலவர் இயற்றிய திருவானைக்கா உலா ஆசிரியரால் குறிக்கப்பட்ட வித்தில் அடங்கியிருக்கும் விதைகளோ ஏராளம். இவை பக்தர்களின் மன வயல்களில் பதிகின்றன. பக்திப் பயிராய் பண்புற வளர்த்த தமிழ்ப் பயிராய் வளர்கின்றன. பயிர்கள் சிலவற்றை அறுவடை செய்து பக்திச் சுவை அறுசுவை, எண் சுவைப் பயன்களை அனுபவிக்கலாம்.

இந்நூலாசிரியர் மு. அருணகிரி அவர்கள் 36ம் பக்கத்தில் "எந்த ஒரு கருத்தையும், திருப்புகழைக் கொண்டே விளக்கம் எழுதுவது அடியேனது வழக்கம்" என்று பெருமிதப் பணிவுடன் எழுதுகின்றார். உண்மைதான்.

இவ்வாசிரியர், வள்ளிமலைத் திருப்புகழ் சுவாமிகளின் சீடர் அல்லவா. சீடர், குரு சுட்டிக்காட்டிய நெறிமுறைகளைப் பற்றித் திருப்புகழ்ப் பெருங்கடலின் அகலம், ஆழம், பரப்பு, கடல்படுபொருள்கள் முதலியவற்றை திட்பநுட்பத்துடன் ஆராய்கிறார். இது இவருக்கே கை வந்த கலை எனலாம்.

**நா. மகாலிங்கம்,** பி.எஸ்.சி., எப்.ஐ.இ.
தலைவர்
சக்தி நிறுவனங்கள்

74, மவுண்ட் ரோடு,
கிண்டி, சென்னை-32.
போன் : 22350814

# அணிந்துரை

முத்திக்கொரு வித்து குருபரன் என்று திருப்புகழ் முழங்குகிறது. கருவியாக விளங்கும் திருப்புகழைப்பயனாக இருக்கும் குருபரனாகவே மதித்து முருகன் அடியார்கள் வணங்குவார்கள்.

திருப்புகழ் முத்திக்கொரு வித்து என்ற தலைப்பைக் கொண்டு வெளிவந்துள்ள இந்த நூல் அத்தகைய அன்பர்களுள் ஒருவராகிய மு. அருணகிரி அவர்களால் எழுதப்பெற்றது. அவருடைய பெயரும் பரமாசிரியர் ஆகிய அருணகிரி வள்ளலுடைய திருப்பெயராக அமைந்தது. அவரோ அப்பரமாசிரியருடைய வழியை இத்தமிழுலகில் நிலை நிறுத்திய மகான்களுள் ஒருவராகிய வள்ளிமலை சச்சிதானந்த சுவாமிகளுடைய சீடர் என்பது மிக மேம்பாடு உடைய செய்தியாகும்.

திருப்புகழ் என்பது என்ன?

நிலையா வாழ்க்கையை உடைய மனிதரைப் புகழ்வது கருப்புகழ். அது பிறவியை மேலும் மேலும் கொடுப்பதால் கருப்புகழ் எனப்படும். இறைவனுடைய புகழ் திருப்புகழ். அது முத்தியைக் **கொடுக்கும். பொல்லாக் கருப்புகழைக் கேட்குமோ - கானமயில் வீரன் திருப்புகழைக் கேட்கும் செவி என்று பெரியோர்கள் கூறுவார்கள்.**

**"நினைத்ததும் அளிக்கும்**
**மனத்தையும் உருக்கும், நிசிக்கருவறுக்கும் - பிறவாமல்**
**நெருப்பையும் எரிக்கும், பொருப்பையும் இடிக்கும்**
**நிறைப்புகழ் உரைக்கும் செயல்தாராய்"**

என்று அருணகிரி வள்ளலே திருப்புகழின் ஏற்றத்தை இயம்புவார்.

இனி ஸ்ரீ வள்ளிமலை சுவாமிகள் திருப்புகழே வேதமாக - சாத்திரமாக - பாராயண நூலாகக் கொண்டவர். அதைவிட மேலாக ஒரு நூலை அவர் ஏற்றுக் கொண்டதில்லை.

அதன்படி அவர் தமிழ்நாட்டின் தலைநகர்ப் பகுதியில் ஏற்படுத்திய திருப்புகழ்ச் சங்கங்களுக்குக் கணக்கில்லை. அதன்மூலம் உருவான திருப்புகழ் மெய்யடியார்களுக்கும் கணக்கில்லை.

இதன் பயனாகத் தமிழகத்தில் தேவார கோஷ்டிகள் தொன்றுதொட்டு அமைந்ததுபோலத் திருப்புகழ் பாராயண முறையும் திருப்புகழ் கோஷ்டிகளும் கணக்கிலடங்காமல் அமைந்துள்ளன. இவர்கள் இந்திய நாட்டின் தில்லித் தலைநகர், மும்பை, கோல்கொத்தா, சென்னை முதலிய பெருநகரங்களிலும், இந்திய மக்கள் சென்று வாழ்கின்ற உலகப் பெருநகரங்களிலும் திருப்புகழ் பஜனை அமைப்புகளை உருவாக்கி உலகத்தையே ஒரு திருமுருகன் உலகமாக மாற்றி அமைத்துள்ளனர். இனிய இசையில் ஆடவரும் மகளிரும் கூடியிசைக்கும் திருப்புகழ் கோஷ்டிகானம் தெள்ளமுதத் தெய்விக அனுபவத்தை யாவர்க்கும் தந்து வருகின்றது.

இனி, இந்த நூலின் அமைப்பினைப் பார்க்கும்போது ஸ்ரீவள்ளிமலை சுவாமிகள் அமைத்துத் தந்த சகலகாரிய சித்தி அனுபவ நூலாகிய வேல்வகுப்பு - வேல்மாறல் முதலில் தொகுக்கப்பட்டுள்ளது படிப்பவர்களுக்கு ஒரு வரப்பிரசாதமாகும்.

களிம்பேறிய பாத்திரங்களில் நவசாரப் பொடியைத் தூவினால்தான் உருக்கிய ஈயம் ஒட்டும். அதுபோல் மும்மலக்களிம் பேறிய உயிர்களின்மேல் ஞானவடிவாகிய இறைவன் கலக்க வேண்டுமானால் அவனது அருளாகிய நவசாரம் தேவைப்படுகிறது என்று முதல் கட்டுரையில் ஆசிரியர் கூறுவது நல்ல உவமை.

அறிவுக்கும் மனத்துக்கும் இடையே நிகழும் உரையாடலாகத் திருப்புகழ் அடிகளையே அமைத்துள்ள உத்தி பாராட்டத்தக்கது.

வாரியாரடிகளின் பாணியில் திருப்புகழ் வரிகளுக்கு அரிய விளக்கங்களைக் கதைகள் மூலம் தந்துள்ள பகுதிகள் அருமை. திருப்புகழில் வடசொற்கள், உருது, பாரசிகச் சொற்கள் கலந்துள்ளதையும் ஆசிரியர் எடுத்துக்காட்டுகிறார். ஆனால் நிமிஷம் என்னுஞ்சொல் ஆசிரியர் குறிப்பதுபோல் ஆங்கிலச் சொல்தானா என்பதையும் ஆராயலாம்.

நிமிஷம் வடசொல் - அது நிமிடம் என மருவி மிநிட் என்று ஆங்கிலத்தில் சென்றது. "உந்மேஷ நிமிஷோத் பந்ந விபிந்ந புவநாவளி" என்று ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமப் பெயர்களில் வடசொல்லாகிய நிமிஷம் பயில்வதைக் காணலாம்.

துரை என்பது துரத்தல் - தூண்டுதல், இயக்குதல், மேலாண்மை செய்தல் என்னும் அடிப்படையில் எழுந்தசொல் தான். வள்ளற்பெருமானும் என்துரையே என்று பாடுகிறார். அறுநூறு ஆண்டுகளுக்கு முன் பிரஞ்சுச்சொல் ஆட்சிக்கு வந்துவிட்டதா என்பது ஆய்வுக்குரியது. திருமுறைகள் திவ்வியப் பிரபந்தம் உவமைக் கதைகள், திருஞானசம்பந்தர் திருமண நிகழ்ச்சி பற்றிய நல்லூர்ப் பெருமனத் தலபுராணம் போன்ற புராணக் கதைகள் முதலியவைகளில் ஆசிரியர்க்கு உள்ள பயிற்சி அபாரமானது.

தமது இலக்கணப் புலமையையும் ஆங்காங்கே எடுத்துக்காட்டுகிறார். நவக்கிரகங்களுக்குப் பயப்பட வேண்டாம். பிராயச்சித்த வழிபாடுகள் பயனளிக்கமாட்டா. இறை நம்பிக்கை ஒன்றே நம்மைக் காப்பாற்றும். இதையறியாமல் குருக்கள்மாரும் தவறிழைக்கின்றார்கள் என்று இரங்குவது ஆசிரியரின் அறிவியலின் பாற்பட்ட சமயச் சிந்தனையாகும்.

வாழைமரம் பற்றிய கருத்துரைகள், இந்த இப்பிறவிக்கு இருமாதர் என்ற கம்பராமாயணத் தொடர்க்கு உரிய விளக்கம் முதலியவை படித்து மகிழ்ந்து போற்றத்தக்கவை.

**சுகி. சிவம்** B.A., B.L.,
செல் : 98422 84984
போன் : 24984177, 24995358

அலுவலகம் :
131/9, ஜனனி ஃப்ளாட்ஸ்,
டி.டி.கே. சாலை, ஆழ்வார்பேட்,
சென்னை-600 018.

## அணிந்துரை

அறுமுகக் கடவுள் ஆறுமுகம் கொண்ட காரணமே அருணகிரி நாதர் அருளிய ஆறு நூல்களையும் தனித்தனியே - தொடர்ச்சியாக அனுபவிக்கத்தான்.

அந்தத் திருப்புகழ் விருப்பன் முருகக்கடவுளை நெருங்க உயர்தனிச் செவ்வழி திருப்புகழை உணர்ந்து கற்றலே. இந்நூலாசிரியர் திருப்புகழ் மாமணி. மு. அருணகிரி அவர்கள் திருப்புகழ் நன்கு கற்றவர். பல்வேறு இலக்கிய நூற் பயிற்சியும் உடையவர் என்பதை இந்நூல் புலப்படுத்துகிறது.

வள்ளிமலை சுவாமிகள் போன்ற முருகன் சீர் பரவுவார்பால் பக்தி மிக்க நூலாசிரியர் அருமையான கட்டுரைகள் 33 மூலம் ஞானத்தமிழை நல்கியிருக்கிறார். வள்ளியின் தந்தை நம்பிராஜன் உபேந்திரன் என்பது போன்ற நுட்பமான ஆய்வுகள் பல இடங்களில் உள்ளன.

வள்ளலார் கூறிய வாழையடி வாழையென என்ற வரிகளை விளக்க ஒரு கட்டுரை பயன்படுகிறது. மகிழ்ச்சி. ஆயின் கட்டுரை ஆசிரியர் இவ்வாறு எழுதும்போது எந்தச் செய்தி யார்மூலம் கேட்டோம் என்று பதிவு செய்திருந்தால் அது இன்னும் நலம் தரும். ஒளி சேர்க்கும். நேர்மையாய் இருக்கும்.

தன் கடன் பணி செய்யும் நவக்கிரகங்கள் என்ற கட்டுரையில் பரிகாரங்கள், தோஷ நிவர்த்திகள் பற்றிய பகுத்தறிவுச் சிந்தனை பளிச்சிடுகிறது. பரம்பொருளைப் பற்று நவக்கிரகங்களை விட்டு என்கிற உண்மைச்சமய நெறியை அக்கட்டுரை புலப்படுத்துகிறது.

ஒவ்வொரு கட்டுரை ஒவ்வொரு வகையில் சிறப்பாக இருப்பது மகிழ்ச்சி தருகிறது. நூலாசிரியருக்கு என் வாழ்த்து. பாராட்டு.

“வேல்மாறல்” - அருணகிரியார் அருளிய நூல் ‘வேல் வகுப்பு”. இதனை வள்ளிமலைத் திருப்புகழ்ச் சுவாமிகள் “வேல்மாறல்” என்ற இயந்திர நூலாகச் செப்பனிட்டு அருளினார். இந்நூலுக்கு “வேல்மாறல்” ஒரு காப்பாக அமைந்திருப்பது பொருத்தமே.

அனுஷ்டான திருப்புகழ் எனும் தலைப்பில் அடியார்கள் அனுதினமும் காலை எழுந்தது முதல் இரவு படுக்கைக்குச் செல்லும் வரை துதி செய்யத்தகுந்த சிறந்த தேர்ந்த திருப்புகழ்ப்பாடல்களின் தொகுப்பு இக்கட்டுரை ஆசிரியரது ஆராய்ச்சித்திறன் நன்கு பளிச்சிடுகிறது.

உரையாடல் : “மனமும், அறிவும்” அடிக்கடி முரண்பட்டு மோதிக் கொள்ளும் இயல்புடைய நுண்ணிய உறுப்புகளாம். இவை இரண்டும் ஒத்து உரையாடும் போக்கில் “விடமும், அமுதமும்” எனத் தொடங்கும் பாடலுக்கு உரைவிளக்கம் தரும் அற்புதமான கட்டுரை.

உறவுமுறை : தெய்வங்களுக்கிடையே அமைந்த உறவு முறைகளைச் சுட்டிக்காட்டுவதில் அருணகிரியார் ஒரு சமர்த்தர் என்றே கருத முடிகிறது.

“இலக்குமியின் மைத்துனரான உபேந்திரனின் (நம்பிராஜன்) அல்லது இந்திரனின் மருமகனே முருகன்” என புனைந்துரைத்து இதுகாலும் எந்த சொற்பொழிவாளர்களும் விளக்காத அறிய கருத்தை சுவைக்கலாம்.

நாயன்மார்கள் : இந்நூலாசிரியர், திருப்புகழை அடிப்படையாக அமைத்து, திருக்கண்ணப்பர், திருமூலர், காரைக்காலம்மையார், பூசலார் நாயணார் போன்றோர்களது வரலாறுகளை வரைந்து இடைஇடையே புதுப்புது விளக்கங்களை அளிக்கின்றார்.

சொல்வாய்வுகள் : தெய்வீகத்திலும், ஆன்மீகத்திலும் சொல்லாய்வுகள் நிச்சயம் தேவைப்படுகின்றன. ஆறுபடையா ? ஆற்றுப்படையா ? வெற்றிலை, ஒன்பது, தொண்ணூறு தொள்ளாயிரம் எனும் கட்டுரைகள் சிறந்த சொல்லாய்வுக் கட்டுரைகளாக திகழ்கின்றன. பிறமொழிச் சொற்கள் மிகமிகச் சில, தமிழ் ஒலிக்கும், இசைக்கும், யாப்புக்கும் ஒரு குறைவும் ஏற்படாமல் விரவி வருவதை நயம்பட ஆசிரியர் எடுத்துக்காட்டுகின்றார்.

“இந்நூலில் காணலாகும் அரிய கருத்துகளை வேறு எந்த நூலிலும் காணமுடியாது” என்ற ஒரே வரியில் அமைந்த அணிந்துரை மிகைபடக் கூறலன்று, தன்மை நவிற்சி.

# முகவுரை

*"கலக்குண்டாகு புரிவிதனில் எனக்குண்டாகு பணிவிடை*
*கணக்குண்டாதல் திருவுளம் அறியாதோ"*

என்று அருணகிரியார் தமது பாடலில், முருகனிடம் விண்ணப்பம் செய்தார். அதனை நினைவில் கொண்டே திருப்புகழிலிந்தே ஆனாத ஞான புத்தியை கொடுக்கவும், ஆராயும் நூல்களில் கருத்துக்களை அளிக்கவும் கருணை புரிய அருணகிரியாரிடம் இறைஞ்சுகிறேன்.

இன்றைய காலகட்டத்தில் செய்யுட் நூல்கள் அருகி வசன நடையில் நூல்கள் வெளிவருவதைக் காணலாம். காரணம் செய்யுட் நூல்களை விட, வசன நடை மூலமாக கருத்துக்களை எளிதாக புரிந்து கொள்ள இயல்வதுதான்.

அடியேன், இளமையில், குருநாதரின் ஆசியால் திருப்புகழ் பாடுவதிலேயே கழித்தமையால், பாடல்களில் பொதிந்துள்ள ஆழ்ந்த அரிய கருத்துக்களில் என் மனம் நாடியதில்லை.

"உமக்கு திருப்புகழே நிரந்தர பொக்கிஷம்" என அடியேனுக்கு குருநாதர் வழங்கிய ஆசி, முதுமையில்தான் உருப்பெற்றது. திருப்புகழாகிய கடலில் முத்துக்குளிக்க அடியேனது மனம் விழைந்ததில் ஆச்சர்யமில்லை. வாசகர்கள் யாவரும் அனுபவிக்கும் வகையில், அடியேன் திருப்புகழிலிருந்தே, வசன நடையில் கட்டுரைகளை எழுதலானேன். 2004ம் ஆண்டில், அடியேனது கட்டுரைகளை திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் ஒப்புதலோடு, "மதுரங்கனிந்த திருப்புகழ் பாமாலை" எனும் தலைப்பில் புத்தக வடிவில் வெளியிடப்பட்டது. இந்நூலைப் பற்றி இந்து பத்திரிகை, தினமணி, தினமலர் பத்திரிகைகளிலும், திருக்கோயில், கலைமகள், அம்மன் தரிசனம், ஆலயம் போன்ற மாத இதழ்களிலும் வெளிவந்துள்ள பாராட்டுகளைக் கண்ட வாசகர்கள் பலர் அடியேனது கருத்துக்களைப் பாராட்டி கடிதங்கள் பல எழுதியுள்ளனர். வாசகர்கள் திருப்புகழிலிருந்தே பல அரிய கருத்துக்களை மீண்டும் தொகுத்து வெளியிட விருப்பம் தெரிவித்த அடியேனை மேலும் கட்டுரைகளை எழுத ஊக்குவித்தது. வாசகர்களும் வசன நடை நூல்களையே ஆவலுடன் படிக்கிறார்கள் என்பதையும் அறியலானேன். இதனடிப்படையிலே, மேலும் திருப்புகழிலிருந்தே பல அரிய கட்டுரைகளை எழுதி முடித்ததும், திருமலை திருப்பதி

தேவஸ்தானத்தாரையே அணுகினேன். குசேலர் கிருஷ்ணனுக்கு முதலில் கொடுத்த ஒரு பிடி அவலை ருசித்து உண்டதும், மறுபடியும் அவலை கேட்டதுபோன்று, வெங்கடாசலபதியே தன் மருமகனாகிய முருகனின் பெருமைகளை அருணகிரியாரின் பாடலின் வாயிலாக ரசிக்கவே திருவுள்ளம் கொண்டான் போலும் என கருதுகிறேன்.

இப்புத்தகத்திற்கு, கயிலை மாமுனிவர், திருவாளர். திரு. காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அதிபர், காசித்திருமடம், அவர்களால் வழங்கிய அணிந்துரை இமயத்தைவிட உயர்ந்ததாக கருத முடிகிறது.

இன்றைய காலகட்டத்தில் வாரியார் சுவாமிகளுக்குப் பிறகு சைவப் பயிர் செழித்திட உரமூட்டும் வகையில் தொண்டாற்றிவரும், திரு. சுகி. சிவம், B.A., B.L., அவர்களது அணிந்துரை கடலை விட ஆழமான கருத்துக்களை பொதிந்துள்ளதாக உள்ளது. விஞ்ஞானம் முதிர்ச்சியைடந்து வரும் கால கட்டத்தில் மெய் ஞானத்தை ஒளியூட்டும் வகையில் தொண்டாற்றி வரும், திரு. நா. மகாலிங்கம், பி.எஸ்சி., எப்,ஐ.இ., (தலைவர், சக்தி நிறுவனங்கள்) அவர்களது அணிந்துரை, முருகனை அருட்பிரகாச வடிவமாக காட்சி அளிக்கும் விதத்தில் அமைந்துள்ளதை வர்ணிக்க வார்த்தைகளே, தோன்றவில்லை.

அடியேனது பாசத்திற்கு உரிய, திரு. டி. செல்வராஜ், M.A., Ph.D., பேராசிரியர், (ஓய்வு) பொன்னேரி, அவர்களது பேனாவின் துளி மையிலிருந்து பிறக்கும் அரிய கருத்துக்கள் வாசகர்களை சிந்திக்க வைக்கும் விதத்தில் அமைந்துள்ளது பாராட்டத்தக்கது. கட்டுரைகள் அனைத்தையும் பிழை திருத்தி தக்க தலைப்புகளை பொருத்தித்தந்த எனது அன்பிற்குரிய திரு. M.R. சொக்கலிங்கம், M.Sc., அவர்களுக்கு அடியேனது நன்றி உரித்தாகுக. கட்டுரைகளை கணினி மூலம் ஊக்கத்துடன் பதிவு செய்துதந்த, சாய் விஷ்ணு ஜெராக்ஸ் நிறுவனத்தார்க்கும் என் முதற்கண் வணக்கத்தை தெரிவித்துக் கொள்கிறேன். யாவராலும் பாராட்டும் விதத்தில், சிறப்பான முறையில் இப்புத்தகத்தை, குறித்த நேரத்தில் அச்சிட்டுதந்த திரு. மூவேந்தர்முத்து அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் பொருந்தும். அன்னாரது நிறுவனம் மென்மேலும் பயனுள்ள அரிய கருத்துக்களை புத்தக வாயிலாக வெளியிட இறைவனிடம் இறைஞ்சுகின்றேன்.

இப்படிக்கு,

*திருப்புகழ் மாமணி மு. அருணகிரி*

(ஸ்ரீ வள்ளிமலை குருநாதரின் சீடர்)



# பொருளடக்கம்

உ

சித்திவிநாயகர் துணை



# கணபதியின் வாகனமாகிய கயாசுரன்

அடியேன் ஆலங்குடி எனும் குருஸ்தலத்துக்கு செல்ல நேர்ந்தது. ஆலயத்துக்கு, எதிரேயுள்ள கணபதியை துதி செய்யலானேன். இக்கணபதிக்கு "கலங்காமல் காத்த கணபதி' எனும் திருநாமம் பெயரிட்டுள்ளதை சிறிது சிந்திக்கலானேன். ஓர் இடத்தில் அமர்ந்து, கணபதிக்கு ஏன் இந்த நூதனப் பெயர் வழங்கப் படுகிறது என என் மனம் அசை போட ஆரம்பித்தது.

ஓதுவாமூர்த்திகளின் வாயிலாக வரலாற்று செய்தினையும், இத்தலம் பாடல் பெற்ற தலம் என்பதாகவும் அறியலானேன்.

கயமுகாசுரன் எனும் கொடிய அரக்கன் வாழ்ந்த நாளில் தேவர்களையும், முனிவர்களையும், தன் தவப்பயனால் இன்னல் விளைவிக்கலானான். இவன் பெயரைக் கேட்டாலே நடுங்குவர். நேரில் காண நேர்ந்தால் தங்களுடைய மேல் துண்டை இடுப்பில் கட்டிக் கொண்டு இரு கையால் இடம் மாறி செவிகளில் பொருத்தித் தோப்புக்கரணமிட்டு பின்னர் தலையில் குட்டிக் கொண்டும் வணக்கம் செலுத்தலாயினர்.

இவனது கொடுமையைத் தாளாத தேவர்களும் முனிவர்களும் ஆலயத்தில் வீற்றிருக்கும் கணபதியிடம் பயபக்தியோடு துதி செய்து, கொடிய அசுரனின் துன்பங்களின்றும் உய்வு பெற கருணை புரிய வேண்டும் என வேண்டினர்.

அவர்களது வேண்டுகோளை ஏற்று, கணபதியே தனது தந்தத்தால் அசுரனின் மார்பை பிளந்தார். மாண்டவன் போலாகி, தனது கூடு விட்டு கூடு பாயும் வகையில் (பெருச்சாளியாகி) மறுமுறை தாக்க வந்தான். கணபதி அப்பெருச்சாளியின் முதுகில் தாவி ஏறி வீற்றிருந்து என்னை சுமக்குதி என்றார். அன்று தொட்டு விநாயகருக்கு பெருச்சாளியாக கயமுகாசுரன் தாங்கி வரலானான். இதனைக் குறித்து கந்தபுராணம் (6-14-252)

நீ நம்மை சுமத்தி; என்று மேக்குயர் பிடரில்
தாவி வீற்றிருந்தூர்தல் உற்றான் (6-11-252)

கூறுகிறது.

கைவேழமுகத்தவனைப் படைத்தார் போலும்
கயாசுரனை அவனாற்கொல் வித்தார்போலும் (6-53-40)

அப்பர் தேவாரம் (6-53-4)

கூறி உள்ளது.

கயமுகாசுரனை வணங்கி வந்த பாணியிலேயே விநாயகப் பெருமானும் தன்னையும் வணங்கி வர அடியார்களுக்கு அருளிச் செய்தார்.

கயமுகாசுரனாகிய பெருச்சாளியின் மேல் அமர்ந்த நிலையில் காட்சி தருவதைக் குறித்து அருணகிரியார் தாம் பாடிய கந்தரனுபூதியில் துவக்கத்திலேயே,

ஆடும்பரி வேல் அணிசேவலெனப்
பாடும்பணியே பணியா. . யருள்வாய்
<u>தேடும் கயமாமுகனைச் செருவில்</u>
<u>சாடும் தனியானை</u>

எனப் பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

இதனைக் குறித்து நம் முன்னோர்கள் அனைத்து மூர்த்திகளையும் ஒரே பாணியில் வணங்க வழிவகுத்த போதிலும், மாறாக வினாயகரை மட்டும் வணங்கும் விதத்தினை குறித்து அருணகிரியார் தெள்ளத் தெளிவாக திருப்புகழ் <u>"நினது திருவடி"</u> எனத் துவங்கும் பாடலில் 3வது 4வது அடியில் பாடியுள்ளது, மிகவும்போற்றத்தக்கதாகும்.

பாடலைப் பார்ப்போம்.

"மனது மகிழ்வொடு தொட்டக்கரத்தொரு,
மகரஜலநிதி வைத்ததுதிக்கர
வளருகரிமுக, ஒற்றை மருப்பனை - வலமாக
மருவுமலர் புனை தொத்திர சொற்கொடு
வளர் கை குழைபிடி தொப்பணகுட்டொடு
வனஜபரிபுர பொற்பத அர்ச்சனை - மறவேனே"

என்பதாகும்.

இதுபோன்று வேறு எவரும் பாடியுள்ளதாக குறிப்புகள் காணவில்லை.

இத்தலத்தில், பூளைச் செடிகள் காடாக வளர்ந்துள்ளதால், பூளை வனம் என வழங்கலாயிற்று. பின்னாளில் ஆலங்குடி என மருவி வழங்கப்பட்டது.

இத்தலம், கும்பகோணத்திலிருந்து 17கி.மீ தூரத்தில் மன்னார்குடி செல்லும் பாதையில் அமைந்துள்ளது. பேருந்து வசதியுள்ளது. குருஸ்தலம் என சொன்னால் தான் பேருந்தை நிறுத்துவர்.

# 1. வேல்மாறல்

முருகன் திருவருளைப் பெற்ற அருணகிரிப் பெருமானால் அருளிச் செய்யப்பட்ட 5 கவிகளுள், திருவகுப்பு என்பது ஒன்றாகும். முருகனின் திருக்கரத்து வேலாயுதத்தின் கீர்த்தியை விரிவாகக் கூறும் கவிகள்-வேல் வகுப்பும், வேல்வாங்கு வகுப்பும் என்பனவாகும்.

வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகள், முதன் முதலில் வேல்மாறல் எனும் தலைப்பில், வேல்வகுப்பு பாடலை, இயந்திர நூலாக அமைத்து அடியார்களின் குறைகளைக் களையவே தொகுத்தருளிச் செய்தார்.
வேல்வகுப்பின், கடைசி அடியான "திருத்தணியில் உதித்தருளும்..வேலே" என்பதனை 12 முறை ஓதிவிட்டு பாடல்களை பாடத் தொடங்க வேண்டும். வேல்வகுப்பில் கூறப்பட்ட 16 அடிகளையே, ஆதாரமாகக் கொண்டு மேலிருந்து கீழும், கீழிருந்து மேலும் பாகுபடுத்தி அடியார்களின் மனக்குறையை களையவே, வேல்மாறல் எனும் தலைப்பில் வள்ளிமலை திருப்புகழ் ஞானிகளால் வெளியிட்டது, அடியார்கள் யாவரும் செய்த புண்ணிய மேயாகும்.

16 அடிகளைக் கொண்ட வேல் வகுப்பில், 16வது அடியாகிய "திருத்தணியில் உதித்தருளும்....வேலே" என்பதனை 12 முறை ஓதிவிட்டு, பின்னர் ஏனைய அடிகள் ஒவ்வொன்றின் முடிவில், 'திருத்தணியில் உதித்தருளும் எனும் அடியைக் கூறுதல் வேண்டும்.

தினமும் காலையிலோ. மாலையிலோ ஓதுவதால் அடையும் பயனை அடியார்கள் உணரும் பொருட்டு, கந்தர் அலங்காரம், கந்தர் அந்தாதி பாடல்களையும் சேர்த்து தொகுக்கப்பட்டுள்ளது. வேல்மாறலை இருபாலரும்,

அனைத்து சமயத்தவரும் பாராயணம் செய்யலாம். தினமும் இதனை ஓதிவரும் அடியார்களுக்கு பற்பல வியாதிகளால் ஏற்படும் உபாதைகளையும், பில்லி, சூன்யம், பைத்தியம், பிரேமை, மயக்கம், திகில் போன்ற மன நோய்களையும், அஞ்ஞான இருளையும் நீக்க வல்ல சர்வரோக நிவாரணியாகும். திருமணம் நிறைவேறவும், சந்தான பாக்யம் பெறவும், வியாபாரத்தில் முன்னேற்றம் அடையவும், மனச்சாந்தி பெறவும் அருள வல்லது.

பாடல்களைப் படிக்க இயலாதவர்கள் தனியாக பாடல்களைச் சேர்த்து அச்சிடப்பட்ட வேல்மாறல் படத்தை, உரியவர்களிடம் பெற்று, கண்ணாடி படம் போட்டு பூஜை அறையில் வைத்து காலையில் குளித்துவிட்டு, படத்துக்கு மலரிட்டு, ஊதுவத்தியினால் ஆர்த்தி காட்டி துதித்தாலே போதும். வேல்மாறல் பாடல்களை இராக தாளம் அமைத்துத்தான் பாடவேண்டும் எனும் நியதியில்லை. பொருள் உணர்ந்து ஓதினாலே சிறப்புடையதாகும். இதனை மெய்யன்பர்கள் படித்தும், ஓதியும் முருகப் பெருமான் பேரருளைப் பெற்று உய்ய வேண்டும் எனும் கருத்திலே இந்நூல் வெளியிடப்பட்டது.

வேல்மாறல் எனும் நூலை தினமும், கண்மலராலும், மனமலராலும், கைம்மலராலும் துதிசெய்வோர், வேலன் வாய்த்த திருப்புகழ் கற்றவர் சீலமேத்திய சித்தப் பிரசித்தராக விளங்குவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

வேல்மாறல் பாடலை, ஒலி நாடாவில் பதிவு செய்யப்பட்டு விற்பனைக்குள்ளது. படிக்க இயலாதவர் களும், ஓத நேரம் வாய்க்காதவர்களும், பதிவு செய்யப்பட்ட ஒலி நாடாவை உரியவர்களிடம் பெற்று, அவரவர்கள் இல்லத்தில் பூஜை அறையில் ஒலிக்கச் செய்தாலே எந்த ஒரு தீவினையும் நாடாது.

## ஸ்ரீ வள்ளிமலைத் திருப்புகழ் சுவாமி
# சச்சிதாநந்தா
## அவர்களால் தொகுக்கப்பட்டது

### வேலும் மயிலும் துணை

ஓலையும் தூதரும் கண்டுதிண் டாடல் ஒழித்தெனக்கு
காலையும் மாலையும் முன்னிற்கு மேகந்த வேள்மருங்கிற்
சேலையும் கட்டிய சீராவும் கையிற் சிவந்தசெச்சை
மாலையும் சேவற் பதாகையும் தோகையும் வாகையுமே.

### வேலும் மயிலும் துணை

விழிக்குத் துணை திருமென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணை முரு காஎனும் நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணை அவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங் கோடன் மயூரமுமே.

## வேல்மாறல்

### வேலும் மயிலும் துணை

திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை
விருத்தன் என துளத்திலுறை கருத்தன்மயில்
நடத்துகுகன் வே லே

(இதையே பன்னிருமுறை சொல்லவும்)

பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தஇதழ் மறச்சிறுமி
விழிக்குநிக ராகும் -திருத்

திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை
விருத்தன் என துளத்திலுறை கருத்தன்மயில்
நடத்துகுகன் வேலே -திருத்

சொலற்கரிய திருப்புகழை உரைத்தவரை
அடுத்தபகை அறுத்தெறிய வுறுக்கிஎழு
மறத்தைநிலை காணும் -திருத்

தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தஇறை
கழற்குநிக ராகும் -திருத்

பனைக்கைமுக படக்கரட மதத்தவள
கஜக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை
தெறிக்கவர மாகும் -திருத்

சினத்தவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும் -திருத்

துதிக்கும்அடி யவர்க்கொருவர் கெடுக்கஇடர்
நினைக்கின்அவர் குலத்தைமுத லறக்களையும்
எனக்கொர்துணை யாகும் -திருத்

தலத்திலுள கணத்தொகுதி களிப்பினுண
வழைப்பதென மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை வாகும் -திருத்

பழுத்தமுது தமிழ்ப்பலகை இருக்கும்ஒரு
கவிப்புலவன் இசைக்குருகி வரைக்குகையை
இடித்துவழி காணும் -திருத்

திசைக்கிரியை முதற்குலிசன் அறுத்தசிறை
முளைத்ததென முகட்டினிடை பறக்கஅற
விசைத்ததிர ஓடும் -திருத்

சுடர்ப்பரிதி ஒளிப்பநில வொழுக்குமதி
ஒளிப்பஅலை அடக்குதழல் ஒளிப்பஒளிர்
ஒளிப்பிரபை வீசும் -திருத்

தனித்துவழி நடக்கும்என திடத்தும்ஒரு
வலத்தும் இருபுறத்தும் அரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும் -திருத்

பசித்தலகை முசித்தழுது முறைப்படுதல்
ஒழித்தவுணர் உரத்து திர நிணத்தசைகள்
புசிக்கஅருள்நேரும் -திருத்

திரைக்கடலை யுடைத்துநிறை புனற்கடிது
குடித்துடையும் உடைப்படைய அடைத்துதிரம்
நிறைத்துவிளை யாடும் -திருத்

சுரர்க்குமுநி வரர்க்குமக பதிக்கும்விதி
தனக்கும்அரி தனக்கும்நரர் தமக்குமுறும்
இடுக்கண்வினைசாடும் -திருத்

சலத்துவரும் அரக்கருடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை யெனச்சிகையில்
விருப்பமொடு சூடும்! -திருத்

சுரர்க்குமுநி வரர்க்குமக பதிக்கும்விதி
தனக்கும்அரி தனக்கும்நரர் தமக்குமுறும்
இடுக்கண்வினைசாடும் -திருத்

சலத்துவரும் அரக்கருடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை யெனச்சிகையில்
விருப்பமொடு சூடும்! -திருத்

பசித்தலகை முசித்தழுது முறைப்படுதல்
ஒழித்தவுணர் உரத்து திர நிணத்தசைகள்
புசிக்கஅருள்நேரும் -திருத்

திரைக்கடலை யுடைத்துநிறை புனற்கடிது
குடித்துடையும் உடைப்படைய அடைத்துதிரம்
நிறைத்துவிளை யாடும் -திருத்

சுடர்ப்பரிதி ஒளிப்பநில வெழுக்குமதி
ஒளிப்பஅலை அடக்குதழல் ஒளிப்பஒளிர்
ஒளிப்பிரபை வீசும் -திருத்

தனித்துவழி நடக்கும்என திடத்தும்ஒரு
வலத்தும் இருபுறத்தும் அரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும் -திருத்

பழுத்தமுது தமிழ்ப்பலகை இருக்கும்ஒரு
கவிப்புலவன் இசைக்குருகி வரைக்குகையை
இடித்துவழி காணும் -திருத்

திசைக்கிரியை முதற்குலிசன் அறுத்தசிறை
முறைத்ததென முகட்டினிடை பறக்கஅற
விசைத்ததிர ஓடும் -திருத்

துதிக்கும்அடி யவர்க்கொருவர் கெடுக்கஇடர்
நினைக்கின்அவர் குலத்தைமுத லறக்களையும்
எனக்கொர்துணை யாகும் -திருத்

தலத்திலுள கணத்தொகுதி களிப்பினுண
வழைப்பதென மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை வாகும் -திருத்

பனைக்கைமுக படக்கரட மதத்தவள
கஜக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை
தெறிக்கவரா மாகும் -திருத்

சினத்தவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும் -திருத்

சொலற்கரிய திருப்புகழை உரைத்தவரை
அடுத்தபகை அறுத்தெறிய வுறுக்கிஎழு
மறத்தைநிலை காணும் -திருத்

தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தஇறை
கழற்குநிக ராகும் -திருத்

பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தஇதழ் மறச்சிறுமி
விழிக்குநிக ராகும் -திருத்

திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை
விருத்தன் என துளத்திலுறை கருத்தன்மயில்
நடத்துகுகன் வேலே -திருத்

தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தஇறை
கழற்குநிக ராகும் -திருத்

சொலற்கரிய திருப்புகழை உரைத்தவரை
அடுத்தபகை அறுத்தெறிய வுறுக்கிஎழு
மறத்தைநிலை காணும் -திருத்

திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை
விருத்தன் என துளத்திலுறை கருத்தன்மயில்
நடத்துகுகன் வேலே -திருத்

பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தஇதழ் மறச்சிறுமி
விழிக்குநிக ராகும் -திருத்

தலத்திலுள கணத்தொகுதி களிப்பினுண
வழைப்பதென மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை வாகும் -திருத்

துதிக்கும்அடி யவர்க்கொருவர் கெடுக்கஇடர்
நினைக்கின்அவர் குலத்தைமுத லறக்களையும்
எனக்கொர்துணை யாகும் -திருத்

சினத்தவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும் -திருத்

பனைக்கமுக படக்கரட மதத்தவள
கஜக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை
தெறிக்கவர மாகும் -திருத்

தனித்துவழி நடக்கும்என திடத்தும்ஒரு
வலத்தும் இருபுறத்தும் அரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும் -திருத்

சுடர்ப்பரிதி ஒளிப்பநில வொழுக்குமதி
ஒளிப்பஅலை அடக்குதழல் ஒளிப்பஒளிர்
ஒளிப்பிரபை வீசும் -திருத்

திசைக்கிரியை முதற்குலிசன் அறுத்தசிறை
முளைத்ததென முகட்டினிடை பறக்கஅற
விசைத்ததிர ஓடும் -திருத்

பழுத்தமுது தமிழ்ப்பலகை இருக்கும்ஒரு
கவிப்புலவன் இசைக்குருகி வரைக்குகையை
இடித்துவழி காணும் -திருத்

சலத்துவரும் அரக்கருடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை யெனச்சிகையில்
விருப்பமொடு சூடும் -திருத்

சுரர்க்குமுநி வரர்க்குமக பதிக்கும்விதி
தனக்கும்அரி தனக்கும்நரர் தமக்குமுறும்
இடுக்கண்வினைசாடும் -திருத்

திரைக்கடலை யுடைத்துநிறை புனற்கடிது
குடித்துடையும் உடைப்படைய அடைத்துதிரம்
நிறைத்துவிளை யாடும் -திருத்

பசித்தலகை முசித்தழுது முறைப்படுதல்
ஒழித்தவுணர் உரத்து திர நிணத்தசைகள்
புசிக்கஅருள்நேரும் -திருத்

திரைக்கடலை யுடைத்துநிறை புனற்கடிது
குடித்துடையும் உடைப்படைய அடைத்துதிர
நிறைத்துவிளை யாடும் -திருத்

பசித்தலகை முசித்தழுது முறைப்படுதல்
ஒழித்தவுணர் உரத்து திர நிணத்தசைகள்
புசிக்கஅருள்நேரும் -திருத்

சலத்துவரும் அரக்கருடல் கொழுத்துவளர்
பெருத்தகுடர் சிவத்ததொடை யெனச்சிகையில்
விருப்பமொடு சூடும்! -திருத்

சுரர்க்குமுநி வரர்க்குமக பதிக்கும்விதி
தனக்கும்அரி தனக்கும்நரர் தமக்குமுறும்
இடுக்கண்வினைசாடும் -திருத்

திசைக்கிரியை முதற்குலிசன் அறுத்தசிறை
முளைத்ததென முகட்டினிடை பறக்கஅற
விசைத்ததிர ஓடும் -திருத்

பழுத்தமுது தமிழ்ப்பலகை இருக்கும்ஒரு
கவிப்புலவன் இசைக்குருகி வரைக்குகையை
இடித்துவழி காணும் -திருத்

தனித்துவழி நடக்கும்என திடத்தும்ஒரு
வலத்தும் இருபுறத்தும் அரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும் -திருத்

சுடர்ப்பரிதி ஒளிப்பநில வெழுக்குமதி
ஒளிப்பஅலை அடக்குதழல் ஒளிப்பஒளிர்
ஒளிப்பிரபை வீசும் -திருத்

சினத்தவுணர் எதிர்த்தரண களத்தில்வெகு
குறைத்தலைகள் சிரித்தெயிறு கடித்துவிழி
விழித்தலற மோதும் -திருத்

பனைக்கைமுக படக்கரட மதத்தவள
கஜக்கடவுள் பதத்திடுநி களத்துமுளை
தெறிக்கவர மாகும் -திருத்

தலத்திலுள கணத்தொகுதி களிப்பினுண
வழைப்பதென மலர்க்கமல கரத்தின்முனை
விதிர்க்கவளை வாகும் -திருத்

துதிக்கும்அடி யவர்க்கொருவர் கெடுக்கஇடர்
நினைக்கின்அவர் குலத்தைமுத லறக்களையும்
எனக்கொர்துணை யாகும் -திருத்

திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை
விருத்தன் என துளத்திலுறை கருத்தன்மயில்
நடத்துகுகன் வேலே -திருத்

பருத்தமுலை சிறுத்தஇடை வெளுத்தநகை
கறுத்தகுழல் சிவத்தஇதழ் மறச்சிறுமி
விழிக்குநிக ராகும் -திருத்

தருக்கிநமன் முருக்கவரின் எருக்குமதி
தரித்தமுடி படைத்தவிறல் படைத்தஇறை
கழற்குநிக ராகும் -திருத்

சொலற்கரிய திருப்புகழை உரைத்தவரை
அடுத்தபகை அறுத்தெறிய வுறுக்கிஎழு
மறத்தைநிலை காணும் -திருத்

திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை
விருத்தன் என துளத்திலுறை கருத்தன்மயில்
நடத்துகுகன் வேலே

(இதையே பன்னிருமுறை சொல்லவும்)

(வேல்மாறல் முற்றிற்று)

ஒவ்வொரு அடியிலும் "திருத்" என்ற இடத்தில் "திருத்தணியில் உதித்தருளும் ஒருத்தன்மலை விருத்தன் என துளத்திலுறை கருத்தன்மயில் நடத்துகன் வேலே" என முழு அடியையும் கூறல் வேண்டும்.

**வேலும் மயிலும் துணை**

தடக்கொற்ற வேள்மயி லேஇடர் தீரத் தனிவிடில்நீ
வடக்கிற் கிரிக்கப் புறத்துநின் றோகையின் வட்டமிட்டுக்
கடற்கப் புறத்துங் கதிர்க்கப் புறத்துங்க கனகசக்ரத்
திடர்க்கப் புறத்துந் திசைக்கப் புறத்துந் திரிகுவையே.

**வேலும் மயிலும் துணை**

சலங்காணும் வேந்தர் தமக்கும் அஞ்சார்யமன் சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழியணு கார்துட்ட நோயணுகார்
கலங்கார் புலிக்குடம் கரடிக்கும் யானைக்கும் கந்தனன்னூல்
அலங்காரம் நூற்றுள் ஒருகவி தான்கற் றறிந்தவரே.

**வேலும் மயிலும் துணை**

மடங்கல் நடுங்கும் தனைச்சுடும் ஈதென்று மாதிரத்தோர்
அடங்கி நடுங்குவர் சூலா யுதம்என் றசுரர்கடல்
ஒடுங்கி நடுங்குவர் வேலா யுதம் என்றுரகனும்கீழ்க்
கிடங்கில் நடுங்கும் மயிலோன் திருப்புகழ் கேட்டளவே.



"ஆடும்பரி வேல் அணிசேவல்"

# 2. மாக்ருதா புஷ்பமாலை (திருப்புகழ்)

## விளக்கவுரை

அருணகிரியார், திருவருணைக் கோபுரத்தில் முருகனை நேரில் தரிசித்த பிறகே அவனருளால் பாடப்பட்ட பாடல்களே, திருப்புகழ், கந்தர் அந்தாதி, கந்தர் அலங்காரம், கந்தரனுபூதி, திருவகுப்பு போன்றவை களாகும்.

அத்தகைய அருளைப் பெற்றதனால், எவ்வாறு வேண்டுமானாலும் பாடி விடலாம் என எண்ணம் கொண்டாரில்லை. இதற்கு எடுத்துக்காட்டாக இவரால் 'ஆசைக்கூர் பத்தனேன்' எனப் பாடிய பாடல் ஒன்றை ஆராய்ந்தாலே போதும். பாடலைப் பார்ப்போம்.

### ஞான பூஜை

ஆசைகூர் பத்தனேன் மனோ பத்ம
மானபூ வைத்து நடுவே அன்-
பான நூ லிட்டு நாவிலே சித்ர
மாகவே கட்டி ஒருஞாந ;
வாசம்வீ சிப்ர காசியா நிற்ப
மாசில்லோர் புத்தி அளிபாட -
மாக்ருதா புஷ்ப மாலைகோ லப்ர
வாளபா தத்தில் அணிவேனோ ;
மூசுகா னத்து மீதுவாழ் முத்த
மூரல்வே டிச்சி தனபாரம் -
மூழ்குநீ பப்ர தாபமார் பத்த
மூரிவே ழத்தின் மயில்வாழ்வே ;
வீசுமீ னப்ப யோதிவாய் விட்டு
வேகவே தித்து வருமாசூர் -
வீழமோ திப்ப ராரைநா கத்து
வீரவேல் கொட்ட பெருமாளே.

மனமாகிய தாமரையைக் குஞ்சமாக வைத்து, சொல் மலர்களை அன்பாகிய நூலினாலே அழகாக நாவினாலே தொடுத்து, அதில் ஞானமாகிய மணம் வீச, அம்மணத்திலே புண்ணிய சீலர்களின் உள்ளங்களாகிய வண்டுகள் மொய்க்க வேண்டும். அத்தகைய பாமாலையை உன் பவளம் போன்ற திருவடிக்குச் சாற்ற வேண்டும். இதுதான் இப்பாடலில் முதல் நான்கடிகளில் கூறியுள்ள கருத்தாகும்.

அருணகிரியார், முருகனிடத்தில் உள்ள பக்தியின் மேலீட்டால் தன் மனதில் தோன்றிய விருப்பத்தைச் சமர்ப்பிக்கும் விதத்தில் பாடியதாகக் கருதப்படுகிறது. அத்துடன் இப்பாடல் பொதுவாக யாவர்க்கும் பொருந்தும் விதத்தில் பாடியுள்ளதில் இவருடைய சமரச நோக்கை அறிய முடிகிறது. இந்நோக்கத்தின் அடிப்படையிலேதான் சான்றோர், புலமையுள்ளோர், அறிவுள்ளோர் கூறிய நூல்களில் பரக்கக் காணலாம்.

இறைவா, அடியேன் இயற்றிய இப்பாடல் என்ன அற்புதமாக அமைந்துள்ளது எனப் பாராட்டாது, குற்றமற்ற ஞானிகள் தங்கள் அறிவின் திறனால் நன்கு ஆராய்ந்து, இது நன்று, இது மிக நன்று எனப் பகர வேண்டும் என்று உன்னிடம் சமர்ப்பிக்கிறேன்.

அருணகிரியார் மானசீகமாக, குஞ்சமான தன் மனதில் தாமரைப்பூவை நடுவில் வைத்து, சொற்களாலேயே பாமாலை கட்ட எண்ணினார். இறைவனுடைய புகழைப் பாடும்பொழுது உள்ளம் நெகிழப் பாட வேண்டும் என்னும் கருத்தைத்தான் இவ்விடத்தில் உருவகமாக எடுத்தியம்பி உள்ளார்.

பொதுவாக, மாலை தொடுக்க இரு பொருள்கள் தேவை. ஒன்று வாழை நார், மற்றவை உதிரி மலர்கள்.

இவர் தொடுக்கப் போகும் பாமாலைக்கு எந்த நாரைக் கொண்டு தொடுக்கப் போகிறார்! 'மனோ பத்மமான பூ வைத்து, நடுவே அன்பான நூலிட்டு' எனப் பாடியதிலிருந்து மனத்திலே செருக்கின்றி இறைவனிடம் அன்போடு கூடிய எல்லாச் சொல்களுக்கும் இடையே சுருதி போல இழைய வேண்டும். அதுபோன்று அன்பையே நாராகப் பொருத்திப் பாடியுள்ளார்.

கையினாலே கட்டும் பூமாலை அன்று. நாவினாலே கட்டுகின்ற இப்பாமாலையை மிகப் பொலிவுடன் விளங்க வேண்டும் என நினைத்துப் பாடலைத் தொடர்ந்தார். 'நாவிலே சித்திரமாகவே கட்டி' என வர்ணித்துப் பாடியதிலிருந்து அறிய முடிகிறது. மானசீகமாக, மாலையைத் தொடுத்துக் கட்டியதும் மாலைக்கு மணம் வீசவேண்டும் என நினைத்த அருணகிரியார் மேலும் பாடலைத் தொடர்ந்தார். 'ஒரு ஞான வாசம் வீசி பிரகாசியா நிற்ப' எனப் பாடியதிலுள்ள கருத்தை நோக்கின் உள்ளத்தையே தொடும் விதத்தில் உள்ளது.

ரோஜாவிலே அதற்கென தனி வாசனை உண்டு. மல்லிகையில் மாறுபட்ட தனி வாசனை உண்டு. மகிழம்பூவில் அதற்கென சிறப்பான மணமுண்டு. இவருடைய சொல்மாலையிலே என்ன மணம் வீசும்? இறைவனுடைய திருவருள் நினைவாகிய ஞான மணம் வீசும்படி மாலை மிளிர வேண்டும் அல்லவா? பாமாலைக்கு மணமும் அவசியம், நேர்த்தியும் அவசியம். இறைவனது திருவுருவமே ஞான மணம் வீசும் தன்மையது. இறைவனால் படைக்கப்பட்ட பூக்களின் மணத்தை ஆய்ந்தறிய நம்மைக் காட்டிலும் வன்மையுடைய பிராணியான வண்டுகளைப் படைத்தபோதிலும்

அவைகளைக் கொண்டு ஞான மணத்தினை எவ்வாறு அறிவது? இவரது சொல்மாலையில் ஞான மணம் இருக்கிறது என்பதை உணர்த்த, குற்றமற்ற தூய நிர்க்குணத்தர் (புத்தி) அறிவாகிய வண்டுகள் ரீங்காரம் செய்ய வேண்டும் எனக் கருதிய அருணகிரியார் 'மாசிலோர் புத்தி அளிபாட' என அற்புதமாக உருவகப்படுத்திப் பாடியுள்ளது மிகவும் பெருமைப்படக் கூடியதாகும்.

இறைவனது திருவுருவம் முழுவதும் ஞான சொரூபம் எனப் பண்டைய பாடல்கள் தெரிவிக்கின்றன. அத்தகைய ஞானம் அவனிடத்திலே இருந்தால் மட்டும் போதாது. அது உலகத்தாருக்குப் பயன்பட வேண்டுமல்லவா? அதற்கு முக்கியம் அவனது அருள் வேண்டும். இதையே 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என மணிவாசகர் கூறியுள்ளதை இங்கு நினைவு கொள்வது அவசியம் எனக் கருத வாய்ப்புள்ளது.

எத்தனை ஈயக் கட்டியைக் கொண்டு உருக்கினாலும், களிம்பேறிய பாத்திரங்களின் மேல் பூச உதவாது. அத்துடன் கொஞ்சம் நவாச்சாரப் பொடியைத் தூவினால்தான் உருக்கிய ஈயம் களிம்பேறிய பாத்திரத்தில் ஒட்டும். அதுபோன்று, நல்ல ஈயம் போல ஞான சொரூபமான இறைவன் நம்மோடு கலந்து நிற்பதற்கு அவனது அருளாகிய நவாச்சாரம் தேவைப்படுகிறது. அதுதான் அருளாளர்களால் அருளிச் செய்யப்பட்ட பாடல்களான தேவாரம், திருப்புகழ், திருவாசகம், பிரபந்தம் போன்றவை.

களிம்பேறிய பாத்திரத்திற்கு நிகராக மும்மலத்தால் அவதியுறும் ஆத்மாவிற்கு அருளாகிய நவாச்சாரப் பொடியைக் கொண்டு ஞான சொரூபமாக விளங்கும்

இறைவனாகிய ஈயத்தோடு கலந்து இறுகும் நிலையினையை,

'நீராளக நீர்மஞ் சனத்த நீள்தாரக வேதண்ட மத்த
நீநான் அற வேறின்றி நிற்க நியமாக -
நீவாஎன நீஇங் கழைத்து பாராவர ஆநந்த சித்தி
நேரேபர மாநந்த முத்தி தரவேணும்!'

என அருணகிரியார் திருப்புகழ் பாடல் ஒன்றில் பாடியுள்ளார்.



# 3. அநுஷ்டானத் திருப்புகழ்

**1. அதிகாலையில் நித்திரை கலைந்ததும் :** படுக்கையில் அமர்ந்தபடியே கந்தர் அநுபூதியில் வரும் பாடலாகிய

'முருகன் குமரன் குகனென்று மொழிந்து
உருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்
பொரு புங்கவரும்புவியும் பரவுங்
குருபுங்கவ எண்குண பஞ் சரனே'.

இதனை மும்முறை ஓதி, திருப்புகழில் 'மாலைதனில் வந்து' எனத் தொடங்கும் பாடலின் பின்பகுதியாகிய

'காலையிலெ ழுந்துன் நாமமதைமொ ழிந்து
காதலுமை மைந்த என வோதிக்
காலமும்உ ணர்ந்து ஞானவெளி கண்கள்
காணஅரு ளென்று பெறுவேனோ:'

எனும் வாக்கியத்தைக் கூறிப் பணிந்து எழுந்திருக்கவும்.

**2. பல் துலக்கி முகம் கழுவித் திருநீறு இடும்பொழுது :** கந்தர் அந்தாதி பாடலாகிய

'திகழு மலங்கற் கழல் பணி வார்சொற் படிசெய்யவோ
திகழு மலங்கற் பகவூர் செருத்தணி செப்பிவெண்பூ
திகழு மலங்கற் பருளுமென்னாவமண் சேனையுபா
திகழு மலங்கற் குரைத்தோ னலதில்லை தெய்வங்களே"

இப்பாடலை ஓதி, அடுத்து திருப்புகழ் பாடலின் வரிகளாகிய

"ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்
ஆறுமுகம் ஆறுமுகம்"

என ஆறு முறைக் கூறல் வேண்டும். திருப்புகழ் "ஓலையிட்ட குழைச்சிகள்" எனும் பாடலின் கடைசி அடியாகிய,

'நீற திட்டுநி னைப்பவர் புத்தியில்
நேச மெத்த அளித்தருள் சற்குரு
நீல முற்றதி ருத்தணி வெற்புறை பெருமாளே

என்று திருநீறிடும் பொழுதெல்லாம் இங்ஙனம் ஓதிடவும்.

**3. குளிக்கும்பொழுது திருப்புகழ் பாடலாகிய :**

"பாட்டி லுருகிலை கேட்டு முருகிலை"

என்பதில் வரும் கடைசி அடியாகிய

"தீர்த்த எனதக மேட்டை யுடைனினை
ஏத்த அருளுட னோக்கி அருளுதி
தீர்த்த மலைநகர் காத்த சசிமகள் பெருமாளே".

எனக் கூறி ஸ்நானம் செய்யவும். குளித்த பிறகு மேற்கூறிய 2-வது தலைப்பில் சொல்லியபடி திருநீற்று மந்திரங்களைச் சொல்லி திருநீறு இட்டு இறைவன் முன்பு

"சிந்திக் கிலேனின்று சேவிக் கிலேன்தண்டைச் சிற்றடியை
வந்திக் கிலேனென்றும் வாழ்த்து கிலேன்மயில் வாகனனைச்
சந்திக் கிலேன் பொய்யை நிந்திக்கி லேனுண்மை சாதிக்கிலேன்
புந்திக கிலேசமுங் காயக் கிலேசமும் போக்குதற்கே".

என்னும் ஆத்ம சுத்தி பாடலை ஓதிப் பணியவும்.

**4. உணவு உட்கொள்ளும் பொழுதும் பருகும் பொழுதும் :**
கந்தர் அலங்கார பாடலாகிய

"பொருபிடி யுங்களி றும்விளை யாடும் புனச்சிறுமான்
தருபிடி காவல சண்முக வாவெனச் சாற்றிநித்தம்
இருபிடி சோறுகொண் டிட்டுண் டிருவினை யோமிறந்தால்
ஒருபிடி சாம்பருங் காணாது மாய வுடம்பிதுவே".

என்பதில் வரும் "பொரு பிடியுங்களிறும் புனச் சிறுமான் தருபிடி காவல சண்முகா" எனச் சாற்றி உணவு உட்கொள்ளல் வேண்டும்.

**5. நித்திரைக்குச் செல்லும் முன் :** திருப்புகழ் முதலடியில் தொடங்கும் பாடலாகிய

"தவர்வாட் டோமர சூலந் தரியாக்காதிய சூருந்
தணியாச் சாகர மேழுங் கிரியேழுஞ்
சருகாக் காய்கதிர் வேலும் பொருகாற் சேவலு நீலந்
தரிகூத் தாடிய மாவுந் தினைக்காவல்;
துவர்வாய்க் கானவர் மானுஞ் சுரநாட் டாளொரு தேனுந்
துணையாத் தாழ்வற வாழும் பெரியோனே
துணையாய் காவல்செய் வாய்"

எனப் பாடித் துதித்து விட்டு உறங்க வேண்டும்.

**6. நோய் வந்தால் :** திருப்புகழ் பாடலாகிய

"இருமலுரோக முயலகன் வாத
மெரிகுண நாசி விடமேநீ -
ரிழிவுவி டாத தலைவலி சோகை
யெழுகள மாலை யிவையோடே;
பெருவயிறீளை யெரிகுலை சூலை
பெருவலி வேறு முளநோய்கள் -
பிறவிக டோறு மெனைநலி யாத
படியுன தாள்க ளருள்வாயே ;
வருமொரு கோடி யசுரர்ப தாதி
மடியஅ நேக இசைபாடி -
வருமொரு கால வயிரவ ராட
வடிசுடர் வேலை விடுவோனே ;
தருநிழல் மீதி லுறைமுகி லூர்தி
தருதிரு மாதின் மணவாளா -
சலமிடை பூவி னடுவினில் வீறு
தணிமலைமேவும் பெருமாளே".

என்னும் பாடலை முப்போதும் சொல்லித் திருநீறு இட்டுக் கொள்ளவும்.

**7. தும்மினும், இருமினும், கொட்டாவி விடினும், ஏப்பம் ஏற்படினும் :** கந்தர் அந்தாதிப் பாடலாகிய

"சிறுமிக் குமர நிகர்வீர் பகிரச் சிதையுயிர்த்துச்
சிறுமிக் குமர சரணமென் னீருய்வீர் செந்தினைமேற்
சிறுமிக் குமர புரைத்துநின் றோன் சிலை வேட்டுவனெச்
சிறுமிக் குமர வணிமுடி யான்மகன் சீறடிக்கே".

என்பதில் கோடிட்ட பதமாகிய "குமர சரணம்" என ஓதுதல் வேண்டும்.

**8. தனிவழிச் செல்லுமிடத்து அஞ்சாதிருக்க :** கந்தர்-அலங்கார பாடலாகிய

"விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்றா
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கள் முன்பு செய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங் கோடன் மயூரமுமே".

என்ற பாடலை முழுவதும் ஓதி அத்துடன் வேல் வகுப்பில் வரும் கீழே கொடுத்துள்ள அடிகளைச் சொல்லிக் கொண்டே வழி நடக்கவும். பாடல் 'வேல் வகுப்பில்"

"தனித்துவழி நடக்குமென திடத்துமொரு
வலத்துமிரு புறத்துமரு கடுத்திரவு
பகற்றுணைய தாகும்.
திருத்தணியி லுதித்தருளு மொருத்தன்மலை
விருத்தனென துளத்திலுறை கருத்தன்மயில்
நடத் துகுகன் வேலே".

என மனதில் துதித்துக் கொண்டே வழி நடக்கவும்.

**9. மனக்கலக்கம் வருமிடத்து :** திருப்புகழ் பாடலாகிய "வேலொத்து வென்றிய" என தொடங்கும் பாடலில் கடைசி அடியாகிய

"ஆலித்தெ ழுந்த டர்ந்த ஆலத்தை யுண்ட கண்ட
ராகத்தில் மங்கை பங்கர் நடமாடும் -
ஆதிக்கு மைந்த னென்று நீதிக்குள் நின்ற அன்பர்
ஆபத்தி லஞ்ச லென்ற பெருமாளே

என ஓதி அடுத்து திருப்புகழிலிருந்து வரும் பாடலாகிய

அதிருங் கழல்ப ணிந்து னடியேனுன் -
அபயம்புகுவதென்று நிலைகாண ;
இதயந் தனிலிருந்து க்ருபையாகி -
இடர்சங் கைகள்க லங்க அருள்வாயே

எனத் துதித்து, அடுத்து கந்தர் அந்தாதியில்

"சேயவன் புந்தி வனவாச மாதுடன் சேர்ந்தசெந்திற்
சேயவன் புந்தி கனிசா சராந்தக சேந்த வென்னிற்
சேயவன் புந்தி பனிப்பானு வெள்ளி பொன் செங்கதிரோன்
சேயவன் புந்தி தடுமாற வேதருஞ்சேதமின்றே"

என வரும் பாடலைத் துதிக்கவும்.

**10. பெரிய ஆபத்துக் காலங்களில் :** "மங்காதிங் காக்குஞ்" என தொடங்கும் **திருப்புகழில் கடைசி** அடியாகிய

"அன்பால் அம்தாள் **கும்பிடுபவர்**
தம்பாவந் தீர்த்தம் புவியிடை
அஞ்சாநெஞ் சாக்கந் தரவல பெருமாளே".

என்பதனை மனதில் தியானித்துக் கொண்டு, அடுத்து

"நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங் கொடுங்கூற்றென்செயும் கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையும் சண்முகமும்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே".

என்னும் கந்தர் அலங்காரப் பாடலை ஓத வேண்டும்.

**11. பயணம் புறப்படும்போது :** மேலே சொன்ன "நாளென் செயும் வினை தானென் செய்யும்" என்னும் பாடலையே கோளறு பதிகமாகக் கருதி ஓதிடல் அவசியம்.

**12. எண்ணிய காரியம் அநுகூலமாக :** திருப்புகழ் "விலைக்கு மேனியிலினி" என்னும் பாடலில், "நினைத்தகாரியம் அநுக்கூலமேபுரி - பெருமாளே"

என்பதனையும், 'ஒருவழிப்படாது மாயை' என்பதன் கடைசிய அடியாகிய

"முருகபொரு சூரர் சேனை முறியவட மேரு வீழ
முகரசல ராசி வேக முனிவோனே -
மொழியமடி யார்கள் கோடி குறைகருதி னாலும் வேறு
முனி அறி யாத தேவர் பெருமாளே".

என்றும்".

"வேண்டியபோது அடியர் வேண்டிய போகமது
வேண்டவெறாதுதவும் பெருமாளே".
என்று ஓதிடல் வேண்டும்.

**13. கண் பார்வை மங்காமல் இருக்க :** திருப்புகழ் பாடலில் வரும் அடியாகிய

"இடர்கள் படுகுருடனெனை அடிமைகொள
மகிழ்வொடுனது இரு நயனக்கருணை சிறிது - அருள்வாயே"
எனத் தினமும் துதித்து வருதல் அவசியம்.



# 4. மனதிற்கும் அறிவுக்கும் இடையே ஒரு உரையாடல் (திருப்புகழிலிருந்து)

அடியேன் என் தந்தையின் அன்புக் கட்டளைக் கிணங்கி, வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகளிடம் திருப்புகழ் பாடம்கேட்டு வருவது வழக்கம். ஒரு சமயம், திருவண்ணாமலைத் திருப்புகழ் "விடமும் அமுதமும்" எனத் தொடங்கும் பாடலை தேவகாந்தாரி ராகத்தில் கற்றுத் தந்தார். அதில் முதல் 4 அடிகளில் பொதிந்துள்ள கருத்துகளை ஆராய்ச்சி செய்ததின் பயனை எங்களுக்கு "மனதுக்கும் அறிவுக்கும் உரையாடல்" எனும் தலைப்பில் கற்றுத் தந்தது அடியேனது வாழ்நாளில் மறக்க முடியாத ஒரு பெரிய திசைத் திருப்பத்திற்கு வழிகோலியதை நினைக்கும்தோறும் உடல் புல்லரிக்கச் செய்கிறது.

இந்த அருமைத் திருப்புகழில் முதல் நான்கு அடிகள் விலக்கணியின்பாற்படும். "கடுவும் அமிர்தமும் விரவிய விழியினர்" என மற்றொரு திருப்புகழ் பாடல் இதற்கு அணி சேர்க்கிறது. அருணகிரியார் பாடிய பாடல்களில், அமரர் வ.த. சுப்பிரமணியப்பிள்ளை அவர்களால் புத்தக வாயிலாக இன்று நமக்கு கிடைத்த பாடல்கள் 1303, மேற்கூறிய "விடமும் அமுதமும்" பாடல் ஒன்று மட்டுமே மணிவாசகர் பாடி அருளிய திருச்சாழல் பதிகத்திற்கு ஏற்ப அமைந்துள்ளதைப் பார்க்கலாம். இப்பாடலில் காம வலையில் வீழ்த்தும் பதியிலாரை மக்கள் உணரவேண்டும் என்னும் கருத்தில் அமைத்துப் பாடி உள்ளதை, எங்கள் குருநாதர் எந்த அளவு திருப்புகழ் பாக்களை ஆராய்ச்சி செய்திருந்தால் இப்பாடலை மட்டுமே தேர்வு செய்து அதனை 'மனதுக்கும் அறிவுக்கும் இடையே ஒரு உரையாடல்" என்னும் தலைப்பில் விரிவாக்கம் செய்திருப்பார்? குருநாதருக்கு திருப்புகழில்

உள்ள ஆழ்ந்த பக்தியும் ஆராய்ச்சி திறனும் இதனால் சிறப்புற விளங்குகின்றது.

எத்தனையோ அறிவுள்ளோர், புலமையுள்ளோர் பலரும் திருப்புகழ் பாடல்களுக்கு விளக்கம் தந்துள்ள போதிலும், இதனை அன்றும் இன்றும் சரி யாவராலும் நினைக்க முடியாத ஓர் எளிய முறையில் மக்கள் யாவரும் உணரும் வகையில் தொகுத்துள்ள வகையினை வார்த்தைகளால் வர்ணிக்க இயலாது எனலாம்.

முதற்கண் கீழே கொடுத்துள்ள பாடல் முழுவதையும் ஒருமுறை பார்க்கலாம்.

விடமும் அமுதமும் மிளிர்வன இணைவிழி
வசை மல தழல் முழுகிய சரமென
விரைசெய் ம்ருகமத அளகமு முகிலல வொருஞான
விழியின் வழிகெட இருள்வதொ ரிருளென
மொழியு மமுதல வுயிர்கவர் வலயென
விழையு மிளநகை தளவல களவென வியனாபித்

தடமு மடுவல படுகுழி யென இடை
துடியு மல் மத னுருவென வனமுலை
சயில மலகொலை யமனென முலைமிசை பரன்
கோவை

தரள மணியல யமன் விடு கயிறென
மகளிர் மகளிரு மலபல வினைகொடு
சமையு முருவென வுணர்வோடு புணர்வது மொரு
- நானே

அடவி வனிதையார் தனதிரு பரிபுர
சரண மலரடி மலர்கொடு வழிபட
அசல மிசைவினை புனமதி லினிதுறை தனிமானுட
அமர ரிவையு மிருபுடை யினும்வர
முகர முகபட கவள தவளகர
அசல மிசைவரு மபிநவ கலவியும் விளையாடுங்;
கடக புளகித புயகிரி சமுகவி

கடக கசரத துரகத நிசிசரர்
கடக பயிரவ கயிரவ மலர்களும் எரிதீயுங் -
கருக வொளிவிடு தனுபர கவுதம்
புநித முநிதொழ அருணையி லறம்வளர்
கருணை யுமைதரு சரவண சுரபதி-பெருமாளே

இப்பாடலின் முதல் நான்கு அடிகளின் கருத்துகளை மட்டும் இனி பார்ப்போம்.

விஷமும் அமுதமும் இரண்டும் கொண்டு விளங்குகின்ற இரு விழிகளும் (குளிர்ந்த) தாமரையல்ல, நெருப்பில் தோய்ந்த அம்புகளாம் என்றும்; நறுமணம் கமழும் கஸ்தூரி வாசனை கொண்ட கூந்தலும் மேகம் அன்று ஒப்பற்ற ஞான விழிநாடும் வழியை மறைக்கும் இருளைத்தரும் தனி இருளாம் என்றும், பேச்சும் அமுதம் அன்று, உயிரையே கவரும் வலையாம் என்றும், விரும்பும் காமத்தை ஊட்டும் பற்கள் (தள வன்று களவாம் என்றும்) முல்லையரும்பு அன்று திருட்டுத்தனத்தை தம்மாட்டு ஒளித்து வைத்துள்ளவைகளாம் என்றும்; வியப்பைத் தரும் தொப்புள் என்னும் இடமும் மடு (ஆற்றிடைப்பள்ளம்) அன்று, படுகுழியாம் என்றும், இடையானது துடி அன்று மன்மதனது உருவமாம் என்றும், அழகிய கொங்கை மலையன்று கொலை செய்யும் யமனே என்றும் கொங்கையின் மேல்புரளுகின்ற கோத்த வடம், முத்துமாலை - ரத்னமாலை அன்று யமன் விட்ட பாசக்கயிறே ஆம் என்றும், மாதர்கள் மாதர்கள் அல்ல பல வினைகள் சேர்ந்து அமைந்த உருவமே என்றும், காணவல்ல ஞான உணர்ச்சியுடன் கூடும் ஒருநாள் எனக்குக் கிடைக்குமா?

மேலே கூறிய கருத்துகளுக்கேற்ப வள்ளிமலை சுவாமிகள் “மனதுக்கும் அறிவுக்கும்” எனும் தலைப்பில் அமைத்து பாடம் கற்றுத் தந்தார்.

மனம் : விடமும் அமுதமும் மிளிர்வன இணை விழி வனசம் - அது வனசம்.

அறிவு : விடமும் அமுதமும் மிளிர்வன இணை விழி வனசம் அல்லவே - விழி வனசம் அல்லவே

மனம் : மற்ற அது எதுவோ? விழி எதுவோ?

அறிவு : விடமும் அமுதமும்மிளிர்வன இணைவிழி வனசமல்ல தழல் முழுகிய சரமே - செந்தழல் முழுகிய சரமே.

மனம் : சரிசரி சரிசரி சரியே அது சரியே

அறிவு : மற்றதைச் சொல்வாய், உன் அனுபவம் சொல்வாய்

மனம் : விரை செய் ம்ருகமத அளகமும் முகிலே - கரு முகிலே

அறிவு : விரை செய் ம்ருகமத அளகமும் முகில் அல்லவே அது முகில் அல்லவே.

மனம் : மற்ற அது எதுவோ? அளகம் எதுவோ?

அறிவு : ஞான விழியின் வழிகெட இருள்வதோர் இருளே - - காரிருளே

மனம் : சரி சரிசரியே அது சரியே

அறிவு : மற்றதைச் சொல்வாய். உன் அநுபவம் சொல்வாய்

மனம் : மொழியும் அமுதம் (மகளிர்) மொழியு அமுதம்

அறிவு : மொழியும் அமுதம் அல்லவே. மொழியும் அமுதம் அல்லவே.

மனம் : மற்ற அது எதுவோ? மொழி எதுவோ?

அறிவு : மொழியூம் அமுது அல உன் உயிாகவா் வலையே (உன் உயிர் கவர்) பாசவலையே.

மனம் : சரி சரி சரி சரியே அது சரியே

அறிவு : மற்றதைச் சொல்வாய், உன் அநுபவம் சொல்வாய்

மனம் : விழையும் இளநகை தளவே - நகை தளவே

அறிவு : விழையும் இளநகை தளவல்லவே, நகை தளவல்லயே

மனம் : மற்ற அது எதுவோ? நகை எதுவோ?

அறிவு : விழையும் இளநகை தளவல தகளவே - பொய் களவே

மனம் : சரி சரி சரி சரியே அது சரியே

அறிவு : மற்றதைச் சொல்வாய், உன் அநுபவம் சொல்வாய்.

மனம் : வியன்நாபித் தடமும் மடுவே - காம மடுவே

அறிவு : வியன் நாபித் தடமும் மடுவ(ல்)லவே - தடம் மடுவல்லவே

மனம் : மற்ற அது எதுவோ? மடு எதுவோ?

அறிவு : வியன் நாபித் தடமும் மடுவல - படுகுழியே உனை வீழ்த்தும் படு குழியே

மனம் : சரி சரி சரி சரியே அது சரியே

அறிவு : மற்றதை சொல்வாய் உன் அநுபவம் சொல்வாய்

மனம் : இடை துடியே - மகளிர் இடை துடியே

அறிவு : இடை துடியல்லவே - துடி அல்லவே

மனம் : மற்ற அது எதுவோ? இடை எதுவோ?

அறிவு : இடை துடியுமல - மத உருவே, மன்மதன் உருவே

மனம் : சரி சரி சரியே அது சரியே

அறிவு : மற்றதைச் சொல்வாய், உன் அநுபவம் சொல்வாய்

மனம் : வனமுலை சயிலம் முலை சயிலம்

அறிவு : வனமுலை சயிலமல்லவே - சயிலம் அல்லவே

மனம் : மற்ற அது எதுவோ - முலை எதுவோ?

அறிவு : வன முலை சயிலமல - கொலை எமனே, உன்னை கொல்ல வந்த எமனே.

மனம் : சரி சரி சரியே. அது சரியே

அறிவு : மற்றதைச் சொல்வாய். உன் அநுபவம் சொல்வாய்

மனம் : முலைமிசை புரள் கோவை தரள மணியே - ரத்ன மணியே

அறிவு : முலைமிசை புரள் கோவை தரள மணியல்லவே, தரள மணியல்லவே

மனம் : மற்ற அது எதுவோ? மணி எதுவோ,

அறிவு : முலைமிசை புரள் கோவை தரள மணியல - எமன் விடு கயிறே! பாசக் கயிறே!

மனம் : சரி சரி சரியே அது சரியே

அறிவு : மற்றதைச் சொல்வாய், உன் அநுபவம் சொல்வாய்

மனம் : மகளிர் மகளிர் நல்ல மகளிர்

அறிவு : மகளிர் மகளிரும் அல்லவே - நல்ல மகளிர் அல்லவே

மனம் : மற்ற அவர் எவரோ? அம் மகளிர் எவரோ?

அறிவு : மகளிர் மகளிரும் அல பல வினைகொடு சமையும் உருவே! மாயை உருவே!

அறிவு : மற்றதைச் சொல்வாய் உன் அநுபவம் சொல்வாய்

மனம் : என் அநுபவத்தை சொல்வேன்.

"மூலமந்திரம் ஓதலிங்கிலை; ஈவதிங்கிலை நேயமிங்கிலை
மோனமிங்கிலை ஞானமிங்கிலை"
- இதுவே என் அனுபவம்"

அறிவு : அப்படியானால் எதில்தான் ஈடுபாடு?

மனம் : மடவர்கள் மோகமுண்டு அதிதாகமுண்டு அபசாரமுண்டு, முகன் என்றொரு பேருமுண்டு.

அறிவு : அறிந்தேன் உன் அனுபவம் அறிந்தேன் அந்தோ மனமே நமதாக்கையை நம்பாதே

மனம் : நம்பாமல் என்ன செய்வது; நான் என்ன செய்வது

அறிவு: இனி ஞான உணர்வோடு புணர முயல்வாய் புணர முயல்வாய்.

மனம் : ஞான உணர்வோடு புணர வழி புகல்வாய் எனக்கு புகல்வாய்.

அறிவு : இந்தா மயில் வாகனர் சீட்டும் (திருப்புகழ்) சிவ நீறும்.

மனம் : திருப்புகழால் ஞான உணர்வொடு புணர்ந்தேன் - நான் உணர்ந்தேன்.

அறிவு : நீ சகல துக்கமுமற, சகலசற்குணமும் வர தரணியில் புகழ்பெற, தகைமை பெற்று அவன் பொற்கசரணம் எப்பொழுதும் நட்பொடு நினைத்திட அருள் பெறுவாய் - மெய்ச் சிந்தை வர அவன் தரிசனம் பெறுவாய்.

நாம் இருவம் இனி சேர்ந்து முருகனை துதிப்போமா? மனமும் அறிவும் இணைந்து முருகனைத் துதிக்கின்ற விதத்தில்

பிறவியலையாற்றினிற் - புகுதாதே
பிரகிருதிமார்க்கமுற்று- அலையாதே
உறுதிகுருவாக்கியப் பொருளாலே
உனது பதகாட்சியைத் தருவாயே
அறுசமய சாத்திரப் பொருளானே
அறிவுளறிவாக்க குணக் கடலோனே
குறுமுனிவன் ஏத்துமுத் தமிழோனே!
குமரகுருகார்த்திகைப் பெருமாளே! (திருப்புகழ்)

உருவாய் அருவாய் உளவாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய அருள்வாய் குகனே

(கந்தர் அனுபூதி)

வள்ளிமலை சுவாமிகளான சச்சிதானந்தர் இவ்வாறு பாடிக் காண்பித்ததும், பாம்பாட்டியின் மகுட வாசிப்பில் கட்டுண்ட பாம்பைப் போல் சிறிது நேரம் வியப்பினால் செயலற்றுப்போனேன்.

இப்பாடலில் வரும் சிற்றின்ப வர்ணனைகள் அனைத்தும் வேசியரை குறித்து பாடப்பட்டதென உணர்தல் வேண்டும்.

இதனை அடியார்கள் யாவரும் உணரும் பொருட்டு வள்ளிமலை சுவாமிகளின் கட்டளைக்கு ஏற்ப வழங்கப் பட்டுள்ளது.

சிற்றின்ப வழியில் மனம் செல்ல முற்பட்டாலும், அதனை ஞானநல்ல அறிவால் தடுத்து முருகப் பெருமானின் திருவடிகள் பற்றி உய்ய முற்படல் வேண்டும். அதுவே இத்திருப்புகழால் வள்ளிமலை சுவாமிகள் நமக்கு உணர்த்தும் ஞானப்படமாகும்.



# 5. இலட்சுமியின் மைத்துனன் விக்ரமன் - மருகோனே

இறைவனால் தோற்றுவிக்கப்பட்ட சகல ஜீவராசிகளான மிருகங்கள், பறவைகள், தாவரங்கள், யாவையும் ஐந்து அறிவோடு படைத்ததின் பயனே. உறவின் அடிப்படையில், பாகுபாடுபிரித்து வாழவகை அறியாது போனபோதிலும், மானிடப்பிறவிக்கு மட்டும் ஆறறிவு படைத்துவாழ வகுத்துள்ளதின் அடிப்படையிலே உண்டானது தான் இனம், உறவு, பருவம் போன்றவைகளாகும். பொதுவாகவே, மக்கள் யாவரும் உணரும் பொருட்டு பண்டைக்காலம் தொட்டு இறை அனுபவத்தில் தோய்ந்து முதிர்ச்சியைடைந்தோர்கள் முதன் முதலில் இறைவன் முகமாக உறவு முறைகளைப் பொருத்தி அனுபவித்த பேரானந்தத்தை வெளிப்படுத்தவே கலைஞர்களும் கவிஞர்களும் அரும்பாடு பட்டு உருவச்சிலைகள் மூலமாகவும், அவைகளுக்கு ஏற்ப அருட்கவிகளையும் இயற்றி பக்திமான்கள் உள்ளத்தில் அழுத்தமாகப் பதியும் விதத்தில் விளக்கியுள்ளார்.

தெய்வங்களுக்கென வகுக்கப்பட்ட உறவு முறை களைப் பற்றி எல்லா அருளாளர்களும், பொதுவாக தாங்கள் அருளிச் செய்த பாடல்கள் மூலம் ஒருமித்த கருத்தோடு பாடியிருந்த போதிலும், இவர்களை எல்லாம் விஞ்சிவிட்டார் அருணகிரிநாதர் என்றே கூறலாம். தாம் பாடிய திருப்புகழாகிய பாடல்களில் முருகனது உறவு முறைகளைப் பற்றி பாட வந்தபோது, வினோதமுறையில் கையாண்ட விதம் அன்றும் சரி. இன்றும் சரி யாவராலும் இது போன்று முருகனுக்கு உறவுமுறைகளைப் பொருத்தி எந்தக் கவிகளிலும் பாடினதாகத் தெரியவில்லை.

இனி இதன் சம்பந்தமாக அருணகிரியார் அருளிச்செய்த "முத்தமுலாவு" எனத் தொடங்கும் திருப்புகழ் பாடலின் 5-வது அடியில் பின்வருமாறு பாடியுள்ளதைச் சிறிது சிந்தித்தல் அவசியமாகும்.

"மத்தகயானை யுரித்தவர் பெற்ற குமார, இலட்சுமி,
மைத்துனனாகிய விக்ரமன் - மருகோனே"

**பாடலின் கருத்து :** கும்பத்தை உடைய யானையை உரித்தவரான சிவபிரான் பெற்ற குமாரனே! இலக்குமிக்கு மைத்துன முறையில் உள்ள பராக்ரம சாலியின் - மருகோனே - என்பதாகும்.

**இலட்சுமி மைத்துனன் ஆகிய விக்ரமன் - இலட்சுமி கணவன் திருமால்**

மைத்துனன் - திருமாலின் பேதமாகிய உபேந்திரன் எனக் கொள்ளலாம். உபேந்திரனே நம்பிராஜனான வேடன். அவன் மகள் வள்ளி ஆதலினால் "விக்ரமன்" என்றது நம்பிராஜன் எனக் கொண்டு அவனது மருமகனே என்றபடி ஒருமுறை திருமாலும், இலக்குமியும், உபேந்திரனும் உரையாடிக் கொண்டிருந்த சமயம், அப்போது அங்கு கண்ணுவமுனிவர் வர, அவரை இவர்கள் யாவரும் கவனிக்காது உரையாடிக் கொண்டிருந்ததைக் கண்டு கண்ணுவமுனிவர் சபித்தார். அச்சாபத்தின் விளைவே நாராயணன் சினமுனிவராய்த் தோன்றி தவம் செய்தார். உபேந்திரன் வேடராஜன் ஆனான். இலக்குமி மானாகத் தோன்றினாள். சிவமுனிவருக்கும் மானுக்கும் பிறந்தவள் வள்ளி. வள்ளியை வளர்த்தவன் உபேந்திரனான வேடராஜன். ஆகையினால் வேடராஜனுக்கு மருமகனாகத் தோன்றியதைக் குறித்து,

"நெடுமால் அருஞ்சில முனிவனாய் உதித்தான்;
திருவுமான் தோன்றிப் பாவுகான்அடைந்தனள்;
உபேந்திரன் ............மூரிவில் வேடர்பால் உதித்தான்"

ஞான உபதேச (1880- 1881)

இனி இந்திரன் பிறந்தபின்பு, அவனுக்குத் தம்பியாய் உபேந்திரன் (திருமாலின் அம்சம்) தோன்றினன். ஆகவே இலக்குமியின் மைத்துனன் இந்திரன் எனவும் கொள்ளலாம்.

"யான் முதல் தோன்றினன் எனது பின்னவள்
கான் முளையாகிய காம!" கந்தபுராணம் - குமாரபுரி44

"யான் - இந்திரன்; பின்னவன் - திருமால்"

இதைக் குறித்து,

"ஏகும் எல்லையில் அமுதமாமென் கொடிஎன்பாள்
பாகசாதனன் - முன்னமோர் குழவியாய் படர்ந்து
மாகமன்ன, நின்னுடன் வரும் உபேந்திரன் மகள்யான்
ஆகையால் எனை.பேணுதி தந்தை என்றடைந்தாள் -
"தெய்வயானை அம்மை திருமணப்படலம்"

பாகதாசனன் - தேவேந்திரன்

உபேந்திரனாயநமஹ - விஷ்ணு சஹஸ்ரநாமத்தில் வருகிறது. மேலும் சில - ஆதாரங்கள்)

அடியேனது அனுபவவாயிலாக அறிவித்த கருத்துகள் யாவும் வாசகப் பெருமக்களுக்கு, உபயோகப்படும் வகையில் அமைந்திருப்பின், அதுவே முயற்சியின் பலன் கிட்டியதாக மகிழ்வேன்.



# 6. திருப்புகழில் திருக்கடவூர் வீரட்டணார்

எனது நண்பரின் வேண்டுகோளுக்கு இணங்கி, அன்னாரது ஷஷ்டியப்தபூர்த்தி விழாவில் கலந்து கொள்ள திருக்கடவூர் சென்றேன்.

இத்தலத்தில் அருள்பாலிக்கும் அமிர்தகடேஸ்வரரையும் அன்னை அபிராமியையும் தரிசிக்கும் பேறுபெற்றேன்.

மார்கண்டேயனுக்கு 16 வயது என நிர்ணயித்து சிவனே. 16 வயது பூர்த்தியானதும், தன் கடமையை நிறைவேற்ற வந்த எமதர்மராஜனை காலால் கடிந்தது எவ்விதத்தில் நியாயம்? தங்களது கடமைகளை நிறைவேற்றும் கோள்களின் நிலைமைக்கு ஏன் இந்த அவல நிலை ஏற்படுகிறது.

இதனை அறிந்திருந்தும், எனது நண்பர் மட்டும்அன்றி அனைத்து 60 வயது பூர்த்தியான ஆன்மாக்கள் யாவரும், தங்களது சாதகக் குறிப்பில் அறிவிக்கப்பட்ட தோஷங்களை நிவர்த்திச் செய்து கொள்ள, திருக்கடவூருக்கு வருவது எனக்கு ஒரு புதிராகவே தோன்றிற்று,

60வயது நிரம்பிய ஆன்மீகத் தம்பதிகள், யாவரும் மூதூரைச் சேர்ந்த ஆலயத்தில் வீற்றிருக்கும் எம்பெருமானை, பஞ்சாட்சரத்தை ஓதிக் கொண்டோ அல்லது நீலகண்டம் எனும் நாமத்தை உள்ளன்போடு ஜபித்துக் கொண்டோ, நீலகண்டரையும், அவர் மனைவியாரையும் இளமையாக்கிய இல்வாலய திருக்குளத்தில் மூழ்கி எழுவதே சாலப் பொருத்தம் என்பது அடியேனின் கருத்து.

16 வயது நிரம்பிய இளைஞர்கள், மார்கண்டேயனைப் போல் அமிர்தகடேஸ்வரரை தழுவிக் கொண்டு துதி செய்ய முடியாது போயினும், "அவனருளாலே அவன்தாள் வணங்கி" எனும் வாசகத்தின் அடிப்படையில், இதயத்திலாவது எம்பெருமானை பூசலார் நாயனாரைப்போல், அமரச் செய்யும் கருத்தோடு பிரார்த்தனை செய்வதில் அர்த்தமுள்ளது என்பதே அடியேனது கருத்து. அடியேனது கருத்துக்கு வேறுபாடு தோன்றிடின், அதனை எனது முதுமையின் பிதற்றல் எனக் கொள்ளல் வேண்டுகிறேன். ஏற்றுக்கொள்ளும் விதத்தில் அமையின் இறைவனின் திருவுள்ளம் என்றே கருத வேண்டுகிறேன்.

சுந்தரர், சங்கிலியாரிடம் கொடுத்த வாக்கை மீறி குற்றத்திற்கே, தன் தோழனாக இருப்பினும் கண் பார்வையை இழக்கச் செய்தார் இறைவன், எக்குற்றமும் புரியாது, தன் கடன் பணி செய்து கிடப்பதே எனும் நோக்கத்தில் எமன் மார்கண்டேயனுக்கு 16 வயது நிரம்பியதும் உயிரைப் பறிக்கச் செய்த போது, காலனைக் காலால் உதைத்தது எவ்விதத்தில் நியாயம் எனக் கேட்கத் தோன்றலாம். இது யாவர்க்குப் இயல்பேயாகும்.

எமன் விட்ட பாசக்கயிறு, மார்கண்டேயனால் தழுவப்பட்ட அமிர்தகடேஸ்வரர் மேல் விழுந்ததும், சிவனே காலனைக் கோபித்து, தனது இடதுகாலால் உதைக்கலானார். அதோடு மார்கண்டேயனது ஆயுளையும் நீடித்தாக அங்குள்ள ஆன்மீகப் பெரியயோர்கள் வாயிலாகக் கூறக் கேட்டேன்.

"மார்கண்டர்க்காக அன்று காலனை உதைப்பர் போலும் கடவூர் வீரட்டனாரே" (4:11:9) என அப்பர் பாடலினால் அறியப்படுகிறது.

"கறுவி வீழ்காலன் மார்பிற் சேவடிக் கமலஞ்சாத்திச்
சிறுவனுக்கு ஆயுள் ஈந்த சேவகப் பெருமான் மேய
அறை புனற்பழன மூதூர்- திருவிளைஅருச்சனை"

எனப் பாடியுள்ளதையும் கோடிட்டுக் காட்டினர் அங்குள்ளோர்.

மேலே கூறப்பட்ட பாடல்களில், உள் கருத்தின் சுவையைக் கூறாது மேலோட்டமாகப் பாடியுள்ளதைக் காண முடிந்தது, அடியேன் என்றும் கருவில் உதித்தத் திருவாகவே திருப்புகழைத் துதி செய்து வருபவன். அருணகிரியாரது வாக்கில் எங்காவது மார்கண்டேயனது வரலாற்றுக்கு விரிவான விளக்கம் தந்துள்ள பாடல்கள் வந்துள்ளதா என ஆராயத் தொடங்கினேன். எந்த ஒரு கருத்தையும் திருப்புகழைக் கொண்டே விளக்கம் எழுதுவது அடியேனது வழக்கம்.

திருக்கடவூர் தலத்தைக் குறித்து திருப்புகழில் இரு பாடல்களே வெளிவந்துள்ளன. அதில் ஒரு பாடலாகிய 'ஏட்டின் விதிப்படியே" எனத் தொடங்கும் பாடலின் இறுதி அடியாகிய,

"கூற்று மரித்திடவேயுதை பார்வதியார்க்கும்
இனித்த பெணாகிய மான்கள் கோட்டுமுலைக்கு
அதிபா கடவூருறை - பெருமாளே'

இதன் கருத்து : எமன் மரித்துப் போகும்படி உதைத்த பார்வதியார்க்கு இனிமைதரும் பெண்ணாகிய மான் மகளின் (வள்ளியின்) மலையன்ன கொங்கைக்கு உரிய தலைவனே திருக்கடவூரில் வீற்றிருக்கும் - பெருமாளே - என்பதாகும்.

இப்பாடலின் கடைசி அடியில் பொதிந்துள்ள ஆணித்தரமான கருத்தை முதலில் வெறும் பொதுவான கருத்தாகவே கருதினேன். பின்னர் கடவூர் சென்ற சமயம்,

இதில் பொதிந்துள்ள உட்கருத்தை என் சிற்றறிவைக் கொண்டு அசைபோட ஆரம்பித்தேன்.

பாடலின் கடைசி அடி ஒன்றினாலே, மார்கண்டேயனது வரலாற்றினை சுருங்கச் சொல்லி விளங்க வைத்தது கருமேகத்துக்கு நிகரான என் மனத்திரையில் மின்னலைப் போன்று தோன்றி மறைந்தது.

இப்பாடலே என் அறிவுக்கு உணவளித்தது போன்ற பிரேமையை உண்டாக்கிற்று. என் கண்களை அகல விரிக்கச் செய்ததோடு ஆச்சரியத்தைத் தொட்டு நின்றதில் வியப்பொன்றுமில்லை.

இப்பாடலின் கடைசி அடியே, ஊசலாடிய என் மனப்பூட்டை திறக்கும் திறவுகோலாக விளங்கிற்று.

மற்று வேறெவர் பாடல்களிலும் இத்தகு ஆழமான கருத்தைக் கொண்டு பாடியதாக அடியேனால் அறிய முடியவில்லை.

மார்கண்டேயனுக்கு 16 வயது என நிர்ணயித்தது சிவனேயாகும் இது முற்றிலும் உண்மை. அவ்வாறிருக்க சிலர், ஏன் காலனைக் காலால் கடிந்தார். தாம் அளித்த வாக்கை நிறைவேற்றாதது எவ்விதத்தில் ஏற்க முடியும், இச்செயல் சைவ சமயத்துக்கே ஒரு இழுக்காக அமைய வாய்ப்புள்ளது எனக் கருதுவாரும் இருக்கலாம்.

இறைவன் தான் அளித்த 16 வயது மார்கண்டே யனுக்கு பூர்த்தியானதும், காலன் அவன் மேல் பாசக்கயிறு வீசியதும் உண்மையே.

இறைவனே, எமனைக் காலால் உதைத்திருந்தால் சைவ சயமத்துக்கே ஒரு இழுக்காக அமைந்துவிடக் கூடும் எனக் கருதினார். அதனால்தான் வலதுகாலால் உதைக்காது, தனது உருவில் இடப்பாகத்தை பெற்றிருக்கும் உமாதேவி

யாரையே, எமனுக்கு பாடம் கற்பிக்க அவளது இடது காலால் உதைக்கச் செய்தார்.

காலனை உதைத்த திருவடி - இடது திருவடி- அதாவது தேவியின் திருவடி. இதனை யாவரும் முதற்கண் தெளிவாகப் புரிந்து கொள்ளும் விதத்தில், அருணகிரியார் பாடிய பாடலைப் பார்ப்போம்.

'சதுரத்தை நீக்கி" எனும் பாடலில்6வது அடியில்

"சிவபத்தினி கூற்றுவறை மோதிய
பதசத்தினி, மூத்த விநாயகி
செகமிப்படி தோற்றிய பார்வதி"

என்பதாகப் பாடியுள்ளது, யாவரது சந்தேகமும் தீரும் விதத்தில் முத்தாய்ப்பு வைத்தாற் போல் முற்றுப்புள்ளி பொருத்தியுள்ளது மிகவும் போற்றத்தக்கது.

"கூற்றுவனை மோதிய பதசத்தினி" எனத்தெள்ளத் தெளிவாகப் பாடியுள்ளது. கவனிக்கற்பாலது.

"சிதைத்தான் வாமச் சேவடி தன்னால்" எனக் கந்தபுராணத்திலும் கூறிவுள்ளது யாவருடைய மனதுக்கும் நிறைவளிக்கும் மேலும் மற்றொரு திருப்புகழில் "கூற்றுவனைக் காய்ந்த அபிராமி" எனும் வார்த்தை யாவர்க்கும் மன நிறைவு அளிக்கும்.

எந்த வரலாற்றாக இருப்பினும், அதில் பொதிந்துள்ள கருத்து நயத்தை எடுத்துரைப்பது அருணகிரியாருக்கே கை வந்த கலை என்றே சொல்லலாம்.

பற்றற்றான் பற்றை யார் ஒருவர் பற்றுகிறார்களோ, அவர்களுக்கு நாளும் கோளும் ஒன்று செய்யாது, நல்லனவாகவே அமையும் என்பது தான் மேற்கூறிய வரலாறு உணர்த்தும் நீதியாகும்.

# 7. திருப்புகழில் கண் கொடுத்த கண்ணப்பர்

அறுபத்துமூன்று நாயன்மார்களில் செயற்கரிய செய்தவர்கள் மூவர் எனப் பட்டினத்தடிகளே தேர்வு செய்த பின்னர், வாதம் தேவையில்லை.

**1. சிறுத்தொண்டர் நாயனார் :**

தன் மகனையே அரிந்து கறிசமைத்து இறைவனுக்கு உணவளித்தச் செயலில், "எதுவும் எனக்கு அரியது அன்று" எனக் கூறிய சொல்லில், ஆணவம் சிறிது கலந்துவிடுகிறது. தன் மகன் தன்னைவிட்டு நீங்கினாலும், மற்றுமொரு பிள்ளைப்பேரடைய தனக்கு உரிய மனைவி மூலம் பெற வாய்ப்புள்ளது எனும் காரணம் பற்றியே, இவரது தியாகம் சிறந்ததெனக் கருத இடமளிக்கவில்லை.

**2. திருநீலகண்ட நாயனார் :**

இளமை மீதூற இன்பத்துறையில் எளியரான நீலகண்டர் தன் பக்தி உறுதியில் நிலைத்து நிற்பதற்கு அவரது துணைவியாரே இறைவன் பேரிலேயே ஆணையிட வேண்டியிருந்தது. அதனால் இவரது பக்தி சிறந்ததென கூறுவதற்கில்லை.

**3. கண்ணப்ப நாயனார்**

திண்ணன் எனப்படும் கண்ணப்பர் ஒருவர்தான் பிறரது தூண்டுதலோ, அறிவுரையோ இல்லாமல் அயல் அறியா அன்பை இவைனிடம் செலுத்தினார். அதனால் அவரது அன்பின் பக்தியே, மேலே கூறிய இருவரது அன்பினுக்கும் மேலாகக் கருத வாய்ப்புள்ளது. பட்டினத்தடிகளால் புகழ்ந்துப் பாடப்பட்ட மூவரில், கடைசியாக கண்ணப்பரைக் குறித்து பாடிவிட்டு மேலும்

எந்த சிவனடியார்களையும் ஒப்பிட்டு கூறுவதை நிறுத்திக் கொண்டார்போலும்.

குற்றம் சத்தியம் போன்றவற்றினை சிறிதும் சிந்தியாது சங்கிலியரை விட்டுப் பிரிந்ததலால், சிவன் தன் தோழன் என்றும் பாராது, சுந்தரரது கண் பார்வையை இழக்கச் செய்தார். இது ஒருவிதத்தில் நியாயமே.

எந்தக் குற்றமும் புரியாது தூய உள்ளன்போடு இறைவன்பால் துதி செய்த திண்ணனது கண்ணை பறிக்கச் செய்தது எவ்விதத்தில் நியாயம் எனக் கேட்கத் தோன்றும். இது இயல்பே.

அவ்வடியார்களின் பக்தியைச் சோதிக்க, உலகோர் உணரும் வகையில் ஆட்கொள்வதே இறைவனுக்கு கைவந்த கலை என்பதை, பெரியபுராணம் உணர்த்துகிறது.

எந்த உலோகத்தையும் நெருப்பில் காய்ச்சிய பிறகே விரும்பும் வண்ணம் உருவமைத்துக் கொடுப்பதைப் போன்றேதேயாகும். கண்ணப்பரிடம் இறைவன் ஆடிய விளையாட்டு.

மிருகங்களையே வேட்டையாடி கொலைத் தொழிலே புரியும் வேடுவக்குலத்திலே பிறந்தவரே திண்ணன் என்பார். இவரை நன்னெறிப்படுத்தியவர், காளத்தி மலைமீதுள்ள குடுமித் தேவரேயாவார்.

தமக்கே உரிய இயல்பான முறையில் வழிபட்டு, நின்றவர். குடுமித் தேவருக்கு, தன் வாயினாலே நீரை அடக்கி வைத்துக் கொண்டும் வேட்டையாடிய மிருகங்களின் மாமிசத் துண்டுகளில் பக்குவமானதைத் தீயினால் சுட்டு வாயினால் ருசி பார்த்து இறைவனுக்கு உணவாக அளித்து மகிழ்ந்தவர்.

திண்ணனாலே பெருமை பெற்றவர்தான் காளத்தியப்பர். திண்ணன் எனப் படும் கண்ணப்பர், அப்பர்,

மாணிக்கவாசகர், ஞானசம்பந்தர் போன்றோர்களால் புகழ்ந்து பாடப்பெற்றவர்.

அப்பர் பாடிய தேவாரத்தில், "மனத்தகத்தான், தலைமேலான்" எனத் தொடங்கும் குறுந்தொகையில் கடைசியாக, "காளத்தியானவன் என் கண்ணுளானே" எனப் புகழ்ந்துள்ளார்.

மணிவாசகரோ, கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு தம்மிடம் இல்லையே என அகங்கரைந்து உருகுகிறார்.

ஞானசம்பந்தர், "வாய் கலசமாக வழிபாடு செயும் வேடன் மலராகுநயனம் காய் கணையினாவிடந்த ஈசனை கூடுகாளத்தி மலையே" என "வேயனைய தோளுமை யொர்பாக" எனும் பாடலின் பின் 3,4 அடிகளில் திண்ணனது பக்தியை வெளிக்காட்டும் விதத்தில் அமைந்துள்ளதைக் காணமுடிகிறது.

கண்ணப்பரைப் பற்றி தாம் பாடிய திருப்புகழில், மேற்கூறிய மூவரது பாடல்களையும் விஞ்சிவிடும் விதத்தில், பாடியள்ளதைப் படித்தாலே கல்நெஞ்சமும் கரையச் செய்யும். வாகர்களின் மனநிறைவிற்கு சில பாடல்களை கீழே அளித்துள்ளேன்.

"வதனசரோருக நயனசிலீமுக" எனத் தொடங்கும் திருப்புகழில் 3வது அடியில்.

"இதவிய காணிவை தகையெனவே டுவன்எய்திடும்
எச்சில் தின்று லீலாசலாமாடும் தூயவன்மைந்த"....

என நிந்தா துதியில் பாடியுள்ளது, அகக் கண்கொண்டு பொருளை உணர்ந்து அனுபவிப்பதே சிறப்பதாகும் எனக் கருதுகிறேன். கருத்தைப் பார்ப்போம்... இவை நிறைய ருசியுள்ளவை என, வாயினால் ருசி பார்த்துக் கொடுத்த உணவைத்தின்று பொய்மையான விளையாடலை நிகழ்த்திக் காட்டிய பரிசுத்த மூர்த்தியாம் சிவனின் மைந்தனே என்பதாகும். இதுபோன்று நிந்தாதுதியாக மற்ற

சிவனடியார்களும், கண்ணபரைக் குறித்துப் பாடிய பாடல்கள் உள்ளதாக அறியமுடியவில்லை.

வாசகர்களின் மனநிறைவுக்கு மற்றுமோர் பாடலைப் பார்ப்போம். "மச்ச மெச்சுசூத்ரம்" எனும் திருப்புகழ் பாடல்.

"பொக்க ணத்து நீற்றை யிடடொருத்தனார்க்கு
புத்தி மெத்த காட்டு .... புனவேடன்
பச்சிலைக்கும் வாய்க்கு ளெச்சிலுக்கும் வீக்கு
பைச்சிலைக்கு மாட்கொ ளரன்"

கருத்தைப் பார்ப்போம். விபூதி அணிந்த சிவகோசரியார் எனும் அர்ச்சகருக்கு அன்பே பிரதானம் எனும் உண்மையைப் புகட்டின வேடனாம் கண்ணப்பர் தந்த பச்சிலைகளை பூஜைக்கும், வாயில் இருந்து உமிழ்ந்த எச்சிலாம் அபிஷேகத்துக்கும், அவர் கட்டியிருந்த அம்பறாத் துணிப்பைக்கும் வில்லுக்கும் உகந்து அவரை ஆட்கொண்டருளிய சிவபெருமானே எனக் கூறியதிலிருந்து கண்ணப்பரின் உயரிய பக்தியை அறிய முடிகிறது.

சிலர் கண்ணப்பரை விவரிக்கும் இப்பாடலை குறிக்க விட்டுவிட்டீரே எனக் கேட்கும் நண்பர்களுக்கு, எவற்றையும் குறித்தளவில் சொல்லுவதில் தவறியதில்லை. இருப்பினும் தாங்கள் திருப்புகழை ஆழ்ந்து படித்துள்ளீர் என்பது புலனாகிறது. இதனால் உங்களது மனக்குறையை நீக்க மற்றொரு பாடலைக் கீழே கொடுத்துள்ளேன்.

"ஆசாரவீனன் அறிவிலி கோபா பராதி" எனத் தொடங்கும் திருப்புகழில், 7வது 8வது அடிகளில் கீழ்வருமாறு கண்ணப்பரைப் புகழ்ந்து பாடியுள்ளது மிகவும் அருமையிலும் அருமை எனலாம்.

"கூசாது வேடன் உமிழ்தரு நீராடி யூனுணெனுமுறை
கூறாமனீ அவனுகர் --- தருசேடம்
கோதாமெனாம லமுதுசெய் வேதாக மாதிமுதல்தரு
கோலோகநாத குறமகள்- தேருமாளே"

எனப் பாடியுள்ளதுபோல், ஒரளவு ஞானசம்பந்தரைத் தவிர்த்து, ஏனைய நாயன்மார்கள் விரிவுப்படுத்தி பாடியுள்ளதாகத் தெரியவில்லை.

இதன் கருத்து.....கூசாமல் கண்ணப்பன் வாயிலிருந்து உமிழ்ந்த நீரால் அபிஷேகம் பெற்று, இந்த மாமிசம் சுவையுள்ளது, இதை உண்டருள் எனக் கூறி நிறையக் கொடுக்க, அவ்வேடன் எச்சில் செய்து கொடுத்த மாமிசத்தை தகாது எனக் கூறாமல் உண்டவரும், வேத ஆகமங்களுக்கும் ஆதி முதலவருமான சிவன் என்பதாகும்.

இனி தலத்தின் புகழையும், திண்ணனின் பக்தி வெளிப்பட்ட விதத்தினையும் சிறிது ஆராயப்புகுவோம்.

சீகாளத்தி = சீ+காளம்+அத்தி (சிலந்தி, பாம்பு, யானை) மூன்றும் வழிப்பட்டத்தலம் எனும் காரணத்தால், சீகாளத்தி என வழங்கப் பெற்றது. அர்ச்சகரை, விளக்கிட்டு காண்பிக்கச் சொன்னால், லிங்கத் திருமேனியில் சிலந்தி, நாகம், யானைத் தந்தங்களோடு, கண்ணப்பரது ஒரு கண்ணும் காணலாம்.

இக்கோயில் 12ம் நூற்றாண்டுக்கு முன்பே, காளத்தியப்பருக்கு கட்டப் பட்டிருக்கக் கூடும். இக்கோயில் பழுதுற்றிருந்ததை, தேவக்கோட்டை, அருணா. ராமநாதன் செட்டியார் குடும்பத்தினர் பத்து லட்சம் ரூபாய் செலவில் புதுப்பித்துள்ளது, அக்குடும்பத்தாரின் தர்ம சிந்தனையை பளிச்சிடச் செய்கிறது.

பொன்முகலியாற்றுக்கு செல்லும் படிக்கட்டில், ஒரு சிறு மண்டபத்தில் இவருக்கு ஒரு சிலை நிறுவியுள்ளனர்.

அடுத்து, குடுமித் தேவர் திண்ணனிடம் நிகழ்த்திய வரலாற்றினை சிறிது பார்ப்போம்.

குடுமித் தேவர் தனது வலது கண்ணில் உதிரம் கொட்டச் செய்தபோது திண்ணன் தனது வலது கண்ணை

அவ்விடத்தில் அப்பியபோது, உதிரம் வடிவது நின்றுவிட்டதைக் கண்டு திண்ணன் உளம் மகிழ்ந்தார். அடுத்து, இடது கண்ணில் உதிரம் வந்ததும் திண்ணன் தனது இடது கண்ணை பெயர்த்து எடுக்க முயன்றதும், இடக்கண் உமாதேவியுடையது. அதற்கு ஒரு தீங்கும் நேரிடக்கூடாது எனக் கருதிய இறைவன் வலக் கண்ணை பொருத்தியபோது ஒன்றும் கூறாது, இடது கண்ணை பெயர்த்து எடுக்க முயற்சித்ததும, "நில்லு கண்ணப்ப, நில்லு கண்ணப்ப" எனத் தடுத்தாட் கொண்டதின் சிறப்பு வெளிப்படுகிறது.

இங்கு ஒரே ஒரு அதிசயம் ..... சீகாளத்தியில் வீற்றிருக்கும் இறைவனுக்கு சொந்தமாக ஒருகண் கூட இல்லை. இடது கண்ணோ உமையவளுக்கு உரியது. வலது கண்ணோ திண்ணனுக்கு உரியது. இரு கண்களையும் இழந்து நிற்கும் இவரது நிலைமையை நினைத்தால் வருந்த நேரிடும். கண்ணப்பனை நினைக்கும்தோறும், காளத்திவாழ்கண்டனை நிக்கத் தோன்றும் என்பதில் ஐயமில்லை.

யார் ஒருவர் மும்மலங்களையும் அறவே களைந்து ஒரே குறிக்கோளுடன் இறைவன்பால் அன்பைச் செலுத்துகிறார்களோ, அவர்களுக்கு தனது கண்ணையும் பொருட்படுத்தாது, தானே வலிய வந்து தடுத்தாட் கொள்வான் எனும் உண்மைப் பொருளை கண்ணப்பர் வரலாறு உணர்த்துகிறது.

இதே காலத்தில் நிகழ்ந்த மற்றுமொரு வரலாற்று நிகழ்ச்சி உண்டு. மதுரைச் சொக்கேசரிடத்தில், "குற்றம் குற்றமே" என வாதாடிய சங்கப் புலவருள் ஒருவரான நக்கீரர் சாப விமோசனமடைந்து, கயிலாய தரிசனம் பெற்ற இடமும் இதுவேயாகும். ஆதலால் இத்தலம் "தட்சிண கயிலாயம்" எனவும் அழைக்கப்படுகிறது. நக்கீரரே, கயிலைப்பாதி---காளத்திப்பாதி என்று அந்தாதி

பாடியுள்ளது இத்தலத்தில்தான். காளத்தியை தரிசித்தால் கயிலையைத் தரிசித்தப் பலன் உண்டு.

இறக்கும் தருவாயில் உள்ள ஒருவரை, சீகாளத்திக்குக் கொணர்ந்து வலப் பக்கமாக ஒருக்களித்துச் சாய்த்துக் கிடத்தினால், உயிர் பிரியும்போது, உடல் திரும்பி வலது காது வழியாகவே உயிர் பிரிந்து செல்லும் என்கிறார்கள். இன்னும் மக்களிடம் இந்த நம்பிக்கை உள்ளது என அறிந்தேன்.

திண்ணனைப் போன்று இறைவனிடம் கண் · களை அர்ப்பணம் செய்து வணங்காது போயினும், இறைவனால் நமக்கு அளிக்கப்பட்ட கண்களைக் கொண்டே அவனது அழகைக் கண்டு ரசிக்க இனியும் காலந்தாழ்த்தாமல் புறப்படுவோம் காளத்திக்கு வாருங்களேன்!



கண் கொடுத்த கண்ணப்பர்

# 8. பஞ்சரத்தின மதாணிக் கவிகள்

அருணகிரிப் பெருமான் திருவருணையில் முருகனால் ஆட்கொள்ளப்பட்ட பிறகே, அவனருளால் பாடிய திருப்புகழ், கந்தரலங்காரம், கந்தரந்தாதி, கந்தரனுபூதி, திருவகுப்பு போன்றனவாகும்.

அமிர்தம் எங்ஙனம் மிருத்துவை (இறப்பை) விலக்க வல்லதோ அவ்வாறே திருப்புகழ் ஓதுதல் இறவாத இன்ப நிலையைத் தந்து உதவுமாதலின், அதனை அமுது என்றே கருதலாயினர்.

இவரால் அருளிச் செய்யப்பட்ட 5 கவிதைகளையும் 5 புனித தீர்த்தங்களில் ஆடிப்பாடி பயனடைதற்கு ஒப்பாகும் எனக் கொள்ளுதல் சிறப்பாகும்.

**1. திருப்புகழ் :** தன்னை ஆட்கொண்ட முருகவேளை நடுநாயகமாக வைத்து கணபதி, சிவன், பார்வதி, திருமால் ஆகிய அனைத்து மூர்த்தங்களையும், ஒப்பிலா வகையில் புகழ்ந்து பாடி, ஏற்ற உறவு முறையினை சமரச நோக்கில் பாடி யுள்ளது பாராட்டத்தக்கது. அதனால் இவரது திருப்புகழ் பாடல்கள் அனைவரையும் ஈர்க்கச் செய்ததில் வியப்பொன்றுமில்லை. இத்தகு எண்ணிலா சந்தப்பாக் களின் விரிவையும், பொதிந்துள்ள அரிய ஆழ்ந்த கருத்துகளையும் கருதி, திருப்புகழ் பாடல்களை ஓதுதல், உலகெங்கும் பெரும்பரப்பினைக் கொண்டதும், மற்றெல்லா நீர்நிலைகளையும் விட மிக்க ஆழத்தையும் கொண்டதுமான சமுத்திரத்தில் ஆடிப்பாடி ஸ்நானம் செய்வதற்கு ஒப்பிட சிறப்பாகும். உதாரணம் - "பகிரநினைவொரு தினையளவிலுமிலி" எனத் தொடங்கும் பாடலில் 8-வது வரியில் (கடைசி) இன்றும் விஞ்ஞான முறையில் ஏற்றுக் கொள்ளும் விதத்தில்

"உதய தினகர இமகரன் வலம்வரும்
உலகமுழுதொரு நொடியினில் வலம்வரு-பெருமாளே"

எனவும்,

"கும்பகோணமோடாரூர் சிதம்பரம்
உம்பர் வாழ்வுறு சீகாழி நின்றிடு
கொன்றை வேணியர் மாயூரம் அம்பெறு சிவகாசி"

எனத் தொடங்கும் பாடலின் கடைசி அடியில்

"உலகெங்கும் மேவிய தேவாலயந்தொரு-பெருமாளே"

எனப்பாடியதில் உலகில் முருகன் எங்ஙெனும் வீற்றிருக்கிறான் என்பதை அறிய முடிகிறது.

**2. கந்தரங்காரம் :** பொதுவாக முருகனை பூமாலையால் அலங்கரிப்பது வழக்கம், பூமாலையைவிட, வாடாத மலரான பாமாலையை முருகனுக்கு அணிவித்து அழகு பார்க்கக் கருதி அருணகிரியார் கந்தரலங்காரம் எனும் தலைப்பில் பாடியருளினார். இக்கவியில் பிரம்மாவையும் காலனையும் கோள்களையும் குறைகூறும் விதத்தில் பாடியுள்ளதைப் பார்க்கலாம். மக்களுக்கு 4 அரிய உபதேச வாசகங்களைக் கூறியதோடு, யார் ஒருவர் அவற்றினை பின்பற்றுகிறார்களோ அவர்களுக்கு இறைவன் தானே வந்து காட்சியளிப்பார் என உறுதிப் பத்திரம் வழங்கியுள்ளார்.

முருகனிடம் மானசீகமாக என்றும் வாடா பாமாலையாகிய கந்தரலங்காரத்தை ஓதுதல் தூய்மையும் அழகையும் தண்ணிய நடையையும் கொண்டுள்ள ஏழ்தலம் புகழ் காவேரியில் ஆடிப்பாடி ஸ்நானம் செய்வதற்கு ஒப்பாகும் எனக் கருதலாம்.

இந்நூலுக்கு உயிர்நிலைப் பாக்கள் "நாளென்செயும் வினைதானென்செயும்". "விழிக்குத் துணை திருமென் மலர்ப் பாதங்கள்" என ஆரம்பிக்கும் பாடல்களாகும்.

**3. கந்தரந்தாதி :** இப்பாடல்கள் வில்லிபுத்தூராரிடம் வாதிட்டபோது பாடின நூலாகும். பலாப்பழத்தின்

கரடுமுரடான மேல்பாகத்தை நீக்கி உள்ளேயிருக்கும் தேனினும் இனிய பலாச்சுளைகளை உண்டால் எவ்வாறு இருக்குமோ அவ்விதம் பாடல்களின் மேல்நோக்கில் கடினமாகவும், எளிதில் சிறிதும் விளங்கா வகையில் இருப்பினும், பாடல்களைப் பதம் பிரித்து கருத்துக்களை ஊன்றி உணரும்போது தெவிட்டாத சுவையினை உணர முடியும். வேண்டும் வரத்தினையும் அளிக்க வல்லது.

ஒரு பாடலின் அந்தத்தையே அடுத்த பாடலுக்கு ஆதியாக வைத்துப் பாடுவது அந்தாதி எனப்படும். அதனடிப்படையில் அருணகிரியார் இப்பாடல்களைப் பாடியுள்ளதால் இதற்கு கந்தரந்தாதி எனப்பெயர் போந்தது. இப்பாடல்களை ஓதுதல் இராமேஸ்வரத்திலுள்ள கோடி தீர்த்தத்தில் ஆடிப்பாடி ஸ்நானம் செய்வதற்கு ஒப்பாகும் எனக்கருதலாம்.

இந்நூலுக்கு உயிர்நிலைப் பாக்கள் “சேயவன்புந்தி வனவாசமாதுடன் சேந்த செந்தில் சேய” எனும் பாடலும்.

“திதத்தித்தத்திதிதாதை” என தகர வார்க்கத்திலேயே பாடிய பாடலும் ஆகும். இப்பாடலே வில்லிபுத்தூராருக்கு பொருள் விளங்காது தடுமாறச் செய்தது.

அருணகிரியாரே இப்பாடலுக்குப் பொருள் கூறியதாகவும் வரலாறு தெரிவிக்கிறது.

**4. கந்தரனுபூதி :** முருகப்பெருமான் அருளிய உபதேசச் சிறப்பையும் அவனது திருவருட் பிரசாதத்தின் பெருமையையும் கூறும் நூல் ஆதலின் இதற்கு கந்தரனுபூதி எனப் பெயர் பெற்றது. (அனுபூதி=திருவருட் பிரசாதம்). முருகன் அருணகிரியாரைத் தடுத்தாட் கொண்டு, திருவடி சூட்டி, மவுன உபதேசம் செய்த பின்னரே இந்நூலை ஆசிரியர் மானுட தேகத்தில் இருக்கும்போதே இயற்றியிருத்தல் வேண்டுமென்பது அன்னாரது பாடலில் அகச்சான்றுகள் கூறுகின்றன.

அருணகிரியார் கிளியாய் மாறிய பிறகு முருகனது திருக்கரத்திலிருந்து பாடியதாகக் கொள்வது பொருந்தா. இவரது பாடல்களை அகக்கண் கொண்டு நோக்கின் விளங்கும். திருக்குற்றால தலத்துப் பாடல் ஒன்றில் அருணகிரியாரே

"அடைக்கலப் பொருளாம் நாயெனை அழைத்து
முத்தியதாம் அனுபூதி என் அருட்திருப்புகழ்
ஓதுக வேல்மயில் - அருள்வோனே"

பாடியதிலிருந்து கந்தரனுபூதியை மானுட தேகத்திலிருந்து தான் பாடியிருத்தல் வேண்டும் எனக் கருத வாய்ப்பளிக்கிறது.

தமது குறைகளை எடுத்துக் கூறியும் தவ முதிர்ச்சியினால் பெற்ற பேற்றினை ஓதியும், மவுன நிலையின் பெருஞ்சிறப்பைக் குறித்தும் பாடிய நூலே கந்தரனுபூதியாகும். கந்தரனுபூதிப் பாடல்களை ஒரு மந்திரமாலை எனக் கொள்ளலாம். எளிய நடையும் யாவராலும் எளிதில் அறியவும், ஆசாரமாய் உடனே உதவக் கூடியதாயும், பாராயணத்துக்கு ஏற்றதாய் விளங்கும் தன்மையுடையது.

கந்தரனுபூதிப் பாடல்களை நித்திய பாராயணம் செய்வது அவரவர் வாசம் செய்யும் இல்லத்திற்கு அருகிலுள்ள நீரோடைகளிலோ அல்லது அருகிலுள்ள ஆலயக்குளத்திலோ ஆடிப்பாடி ஸ்நானம் செய்வதற்கு ஒப்பாகும் எனக்கருதலாம்.

**5. திருவகுப்பு :** இக்கவிதைகள் அனைத்தும் அருணகிரியார் கிளி சொரூபம் அடைந்த பிறகு முருகனது திருக்கரத்தில் இருந்தே பாடியதாக அவரது பாடல்களை அகக்கண் கொண்டு பார்த்தால் விளங்கும். அன்னார் மானுட தேகத்தில் இருக்கும்போதே தாம் பாடிய திருப்புகழில்

"நின்பதயுகப்பிரசித்தி என்பன வகுத்துரைக்க
நின்பணி தமிழ்த்ரயத்தை-அருள்வாயே"

என முருகனிடம் தனக்கு (சுக) கிளிப் பதம் அருள வேண்டிய பல பாடல்களில் விண்ணப்பித்துள்ளதைக் காணலாம். முருகப் பெருமானும் இவருக்கு கிளி சொரூபம் அளித்துள்ளதை அவரது பாடலிலிருந்து அறியலாம்.

"உறை பெற வகுத்தருணை நகரினொரு பத்தனிடும்
ஒளிவளர் திருப்புகழ் மதாணிக் - கிருபாகரனும்"

எனப் படர்க்கை வினையில் திருவேளைக்கார வகுப்பில் பாடியதிலிருந்து தாம் முற்பிறவியில் இருந்த நிலை தெரிந்திருக்க வாய்ப்பின்றி கிளியாய் மாறியதும் யாரோ ஒரு பக்தனிடம் திருப்புகழ்-பற்றிய கிளி பாடியுள்ளது மிகவும் உணரற்பாலது.

அவரால் பாடிய திருவகுப்பு பாடல்கள் அனைத்திலும் எவ்வித சிற்றின்ப வர்ணனையோ நோயினால் ஏற்படும் வேதனைகளையோ வறுமையினால் வாடும் துன்பங்களைப் பற்றியோ எவ்வித வர்ணனையுமின்றி சுக சொரூபத்தில் முருகனது திருக்கரத்திலிருந்தே பாடியதாகக் கருத வேண்டியுள்ளது. "எனதுரை தனதுரையாக" என ஞானசம்பந்தர் பாடியதுபோன்று முருகனே கிளியின் வாயிலாகப் பாடுவித்ததால் எவ்வித உலக பந்தபாசங்கள் சிறிதும் கலவாது திருமந்திரத்தின் திறத்தினை உடையதான வேதாகமங்களின் சாரத்தையும் பிரபஞ்ச மாயையை சிறிதும் கலவாது கூறும் புனிதத் தன்மையைக் கருதியும் திருவகுப்பு பாடல்களை ஓதுதல் புனிதமான கங்கையில் ஆடிப்பாடி ஸ்நானம் செய்வதற்கு ஒப்பாகும் என கருதலாம்.

தாம் பாடிய திருப்புகழினை நடுவே அமைத்து ஏனைய நான்கு கவிதைகளையும் அதைச் சுற்றிலும்

பொருத்தி முருகனது மார்பில் மதாணியாய் திகழும் விதத்தில் பாடியதற்கு ஏற்ப தமிழ் பன்னீராய் முருகன்மேல் வீழ்ந்த துளிகள் யாவும் ஈற்றில் பஞ்ரத்ன மதானியாக அமைந்தன போலும். இதனைக் குறித்து

"பலப்பல பைம் பொற்பதக்க ஆரமும்
அடிமைசொலும் சொற்றமிழ்ப் பனீரொடு
பரிமள மிஞ்ச கடப்பமாலையும் - அணிவோனே"

எனப் பழநிதலத்து, "மலரணிகொண்டை சொருகி" எனும் பாடலில் பாடியுள்ளதைக் கவனத்தில் கொள்ளுவது சிறப்பு.



# 9. அருணகிரியார் பன்மொழியில் பரவிப்பாடிய பாடல்கள்

ஸ்ரீ அருணகிரிப் பெருமான் திருவண்ணாமலையில் தோன்றினார் என்பதில் வாதம் இல்லாது போனாலும், அவருடைய வாழ்க்கையைப் பற்றி எவ்விதத்தில் கூறினும் அவை ஆதாரமற்றவையாகும். ஞானிகள், அருளாளர்கள் போன்றோர்கள் முற்காலத்தில் பொதுவாக தங்களைப் பற்றி கூறுவது சிறப்பாகாது என நினைத்து வாழ்ந்ததே காரணம். புறக்கண் கொண்டு அவரது பாடலை ஆதாரமாக வைத்துக் கருதுவோரின் எடுத்துக்காட்டு எவ்வகையிலும் பொருந்தா. அவருடைய பாடல்களை அகக்கண்கொண்டு, கவனித்தால் இதன் உண்மை விளங்கும்.

தமிழில் பிற மொழிகளின் சொற்கள் கலந்தால் தமிழ் மங்க வழிவகுத்துவிடும்; அதன் ஒப்பற்ற தன்மையும், தூய்மையும் அழிந்துவிடும் எனக் கூறுவோர் உண்டு. இவர்கள் கூற்று, மொழி வளர்ச்சியின் தத்துவத்தை அறியாதார், அறிந்தும் அதை ஏற்றுக் கொள்ளாதவர் கூற்று என்றேதான் சொல்லவேண்டும். பல மொழி / மக்கள் / தமிழர் போல் கூடிப் பழகுவோரின் தாய்மொழியிலே, பிறமொழிச் சொற்கள், அவர்களுடன் பழகுவோர் மொழியில் உள்ள வார்த்தைகள் கலந்துதான் தீரும். பல மொழிகளிலும் ஆங்கிலம் கலந்ததாலே அதன் இலக்கியம் அழிந்துவிடவில்லை. ஆங்கிலேயர் ஆட்சி போய் விட்டாலும், அந்த ஆட்சியில் இருந்த இடங்களிலெல் லாம், ஆங்கில பாஷை நிலைத்துநின்று உலவி வருவதைக் காணலாம். மேலும் ஆங்கிலம் தான் உலகமொழி எனும் சிறப்பையும் பெற்றுவிட்டது. பிறமொழிக்கலப்பால் ஆங்கிலத்தின் தன்மையும், மதிப்பும் குறைந்துவிட வில்லை என்பதை மட்டும் உணர்ந்தாலே போதும், மேலும்

குறைகாண்போருக்கு )தனையே உதாரணத்திற்கும் கொள்ளலாம்.

அதே போன்று திருப்புகழில் பல பாஷைகள் கலந்திருப்பினும், வடமொழிச் சொற்கள் கொஞ்சம் கூடுதலாக உள்ளதைக் காணமுடிகிறது - இதனால் நாளதுவரை தமிழோ, திருப்புகழோ தன் பெருமையில் சிறுமை அடையவில்லை என்பது கண்கூடாகக் காணலாம். அருணகிரிநாதரும் இதனைக் கருத்தில் கொண்டே, உலக மக்களின் நன்மையைக் கருதி சமரச நோக்குடன் பல மொழிகளாகிய ஆங்கிலம், தெலுங்கு, முகமதிய பாஷை, சமஸ்கிருதம் போன்ற மொழிகளை தம் பாடலில் சேர்த்துப் பாடியிருக்கிறார். இதேபோன்று, குமர குருபரர், நால்வர் போன்ற ஞானிகளின் வாக்குகளிலும் திறம்படப் பாடியுள்ளதைக் காணலாம். பண்டைய தொல்காப்பிய காலத்திலிருந்தே வடமொழி சொற்கள் ஏற்றுள்ளது. சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காவியங்களிலும் வடசொற்கள் வழங்கி வந்துள்ளன. வடமொழிக்கும், தென்மொழிக்கும் ஏற்பட்ட ஒற்றுமை - கூட்டுறவு இவைகள்தான் காரணம் எனச் சொல்லலாம். நாலாயிர திவ்யப்ரபந்தத்திலும், திருப்புகழில் வருவதுபோல அதிகம் இராது போனாலும், வடமொழி கையாளப்பட்டுள்ளது. இந்த முறையில் பாடிய அருணகிரியாரது பாடல்களை வெறுப்போர், தமிழின் பெருமையை அறியாதவர்கள், தமிழ்ப்பற்று இல்லாதவர்கள் என்றே கருத்தில் கொள்ளலாம். இன்றைய நாளிலும், பிறமொழிகள் கையாளப்பட்டுப் பாடிய அருட்பாடல்கள், பக்தர்களால் அப்பாடல்களை மனம் உருகி பாடியும் ஆன்மீகப் பக்தர்களாக மாறி விடுகின்றனர். இச்சக்தித் தன்மை திருப்புகழ் பாடல்களுக்கு உள்ளது என்பதை எவரும் மறைக்கவோ, மறுக்கவோ, மறக்கவோ முடியாது. இதனால் பாட்டின் பொருள் உணர்ந்து பாடுகின்றவர்களுக்கு,

மொழியைப் பற்றி விருப்போ, வெறுப்போ, கசப்போ தோன்ற வாய்ப்பிருக்காது. இதுவரை சமரச நோக்கில், மொழிகளைப் பற்றிய கருத்துக்களை அறிய முடிந்தது. இனி, அதன் அடிப்படையில் அருணகிரியாரால் பாடப்பட்ட பாடல்களில் பலமொழிகள் புகுத்தப்பட்ட விதத்தினை சிறிது ஆராய்வோம்.

அருணகிரியாரது கவிகளாகிய திருப்புகழ் சந்தரலங்காரப் பாடல்கள் போன்றவைகளில், இவரைப் போன்று, பல மொழிகளையும் தம் பாடல்களில் புகுத்திக்கையாண்ட விதம், ஏனையோர் கவிகளைக் காட்டிலும் இவரது பாடல்களுக்கு ஏற்றமும் தோற்றமும் தோன்றலாயிற்று. மேற்கூறிய கருத்தினை அறிய, இவரால் பாடப் பெற்ற பாடல்கள் சிலவற்றை ஆராய்வோம்.

கந்தரலங்காரப்பாடல், "மரணப்ரமாதம் எமக்கில்லை யாம்" எனும் பாடலின் பின் பகுதி முழுவதுமே வடமொழியிலேயே பாடியுள்ளதைக் கவனிக்கலாம்.

"கிண்கிணிமுகுள சரணப்ரதாப சசிதேவி மங்கல்ய தந்து
ரக்ஷாபரண க்ருபாகர ஞானாகர சுரபாஸ்கரனே" - எனவும்,

"நிகராட்சமபட்ச பட்சி துரங்கக்ருபகுமரா
குகராட்சசபட்ச விட்சோப தீரகுண துங்கனே" - என

"சிகராத்ரி கூறிட்ட" எனும் பாடலிலும் பாடியுள்ளதில் வடமொழிச் சொற்கள் அற்புதமான வகையில் புகுத்தி பாடியுள்ளதை அறியலாம்.

"இடையித்தனை" எனத்தொடங்கும் திருப்புகழ் பாடலில், 7-வது அடியில் "தெதிபட்சண, க்ருதபட்சண, செகப்பட்சணனன் - எனவோதும் விட்பட்சணர் திருமைத்துனன்' எனப்பாடியுள்ளதில் வரும் வடமொழிச் சொற்களின் ப்ரவாகம், இது போன்று மற்ற அருளாளர் களாலும் கையாளப்படாத விதத்தில் அமைந்துள்ளது,

அருணகிரியாரின் புலமை மட்டுமன்றி, ஏனைய மொழிகள் மேல் கொண்டுள்ள உயரிய பண்பையும் அறிய முடிகிறது.

"அலகில் அவுணரை" எனத் தொடங்கும் திருப்புகழில்

"இலகு கடலை கற்கண்டு தேனொடு
மிரதமுறு தினைப்பிண்டி பாகுடன்
இனிமையில் நுகருற்றெம் பிரானொரு - கொம்பினாலே"

என வினாயகருக்கு படைக்கும் நிவேதனப் பொருள்களை கூற வந்ததில் பிண்டி எனும்வார்த்தை, ெலுங்கு பாஷையில் வழங்கப்படும் ஒருவித பட்சணம் என அறியப்படுவதால், தெலுங்கு மொழியையும், தமது பாடலில் புகுத்தியுள்ளது அறியப்படுகிறது. விநாயகரைப் பாடவந்த ஔவையாரும் "பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும் இவை நாலும் கலந்துனக்கு நான் தருவேன்" எனக் கூறியுள்ள போதிலும், முதன் முதலில், விநாயகப் பெருமானுக்கு நிவேதனப் பொருள்களின் பட்டியலைத் தயாரித்து அருளிய பெருமை இன்னாரையே சாரும் என்பதில் ஐயமொன்றுமில்லை.

"விடமும் வடிவேலுமதன" னனும் திருப்புகழில்

"அடையலர்கள் மாளவொரு நிமிடந்தனி
றுலகை வலமாக நொடியினில் வந்துயர்
அழகிய சுவாமிமலையில்அமர்ந்தருள் - பெருமாளே"

என்பதில், நிமிடத்தையும், நொடியையும் சேர்த்து பாடியள்ளதையும், மற்றோர் திருப்புகழில், "மலரணி கொண்டை" எனும் பாடலில்

"ஒருநிமிஷம் இணங்கிக் கணத்திலே வெகுமதி கேடாய்" என்பதில் நிமிடம் எனும் சொற் பிரயோகம் ஆங்கிலேயர் காலத்தில் வழக்கத்தில் உள்ளது என்பது அறியப்படுகிறது. தமிழர்களால் நாழிகை, வினாடி என வழங்கிய காலத்தில், இதனையே, நிமிடம், மணி, செகண்ட் என்பனவாக வழக்கத்தில் வந்த சொற்களாகும்.

இதேபோன்று, "சரணகமலாலயத்தை அரை நிமிட நேரமட்டில் தவமுறை தியானம் வைக்க அறியாத" எனப்பாடிய அருணகிரியார் நிமிடம் எனும் வர்த்தையை உபயோகித்திருப்பதைக் காணலாம்.

நமது நாட்டில் துரை என்று கூறுவது பொதுவாக ஆங்கிலேயரை விளக்கும் சொல்லாக வழக்கத்தில் கொண்டுள்ளது என்பது அறியப்படுகிறது. இக் கருத்தினைக் கருத்தில் கொண்ட அருணகிரியார் பாடிய திருப்புகழில்,

"தஞ்சம் தஞ்சம் சிறியேன் மதி
கொஞ்சம் கொஞ்சம் துரையேயருள்
தந்தின்று இன்பம் தருவீடது - தருவாயே"

எனும் சீரில் "துரையே" எனும் பதம் உபயோகித்துள்ளதையும், மற்றொரு திருப்புகழில் மன்மதனைக் குறித்து ஞ்காமதுரைவேள்" என, இதுகாறும் எந்த புலவர்களாலும் மன்மதனை கூறப்படாத விதத்தினில் பாடியயுள்ளது பாராட்டத்தக்கது.

திருப்புகழ் "அவாமருவினாவ" எனும் சுவாமிமலைப் பாடலில்,

சுராதிபதி மாலயனு மாலொரு சலாமிடு
சுவாமிமலை வாழும் - பெருமாளே" என்றும்,

"பசைசையொண்கிரி" எனும் திருப்புகழில்,

'கற்பகந்திரு நாடுயர் வாழ்வுற
சித்தர் விஞ்ஞையர் மாகர் சபாசென
கட்ட வெங்கொடு சூர்கிளை வேரற - விடும்வேலா'

என்றதில், கோடிட்ட வார்த்தைகளான, சலாமிடு, 'சபாசென' எனும் சொற்களின் ப்ரயோகம், மொகலாயர்களின் வழக்கில் இருந்த சொல் ஆகையால், துலுக்க பாஷையிலும் திருப்புகழ் பாட விரும்பியவர் என்பது தெள்ளத் தெளிவாக விளங்குகிறது.

மேலும் பலபாஷைகளில் சொற்களை, இவரது பாடல்களிலிருந்தே விளக்கம் கொடுப்பதானால், கட்டுரை விரியும் என மனத்தில் கொண்டே இத்துடன் நிறைவு செய்வதே உசிதம் ஆகும். இது போன்ற பிற மொழிகளைத் தமது கவிகளில் ஒருசேர இணைத்துக் கொண்டு, பாகுபாடு பாராது, அருணகிரியார் பாடியுள்ளது மிகவும் பாராட்டுதலுக்கு மட்டுமன்றி, யாவரும் எல்லா மதத்தினராலும் போற்றப்படும் விதத்திலே எடுத்துக் காட்டிய மூல புருஷர் அருணகிரிப் பெருமான் என்றால் மிகையாகாது. அன்னாரே பன்மொழிப் புலவர்.



அருணகிரிநாதர்

# 10. "தவியாத பற்றைப் பெறுவேனோ"

ஓர் ஊரில் ஒரு அரசர் இருந்தார். அவர் தன்னுடைய நாட்டுக்குச் செய்ய வேண்டிய கடமைகளையெல்லாம் ஒழுங்காகத்தான் செய்து கொண்டிருந்தார். இருந்தாலும் அவருக்கு மனநிம்மதி இல்லை. எப்போது பார்த்தாலும் ஏதாவது பிரச்சனை.

அதனால் அரசருக்கு வாழ்க்கையில் அலுப்பும் சலிப்பும் ஏற்பட்டது. 'என்ன செய்யலாம்?' என்று யோசித்தார்.

இதைப்பற்றி தமது நெருங்கிய ஆன்றோர்களிடம் கலந்து பேசினார்.

அவர்கள், "பக்கத்தில் இருக்கும் ஒரு காட்டில் பெரியவர் ஒருவர் இருக்கிறார். அவரிடம் சென்றால் ஏதாவது வழி கிடைக்கும்' என்று ஆலோசனை கூறினார்கள்.

அரசர் உடனே அங்கு புறப்பட்டுச் சென்றார். அந்தப் பெரியவரைப் பார்த்தார். அவரது காலில் விழுந்து வணங்கினார்.

"சுவாமி.... அரசாங்கத்தை நிர்வகிப்பது எனக்கு மிகவும் கஷ்டமாக இருக்கிறது" என்று தெரிவித்தார்.

"அப்படியானால்..அதை விட்டுவிடேன்!' என்றார் பெரியவர்.

"நான் விலகிவிட்டால் பிறகு அரச காரியங்களை கவனிப்பது யார்?" என்று மன்னர் வினவினார்.

அதற்குப் பெரியவர், "உன் பிள்ளையிடம் அந்தப் பொறுப்பை ஒப்படைத்து விடு" என்று கூறினார்.

"ஒப்படைத்துவிட்டு நான் என்ன செய்வது?" என்று அரசர் கேட்டார்.

"காட்டுக்கு வந்து என் பக்கத்தில் உட்கார்ந்துகொள். நிம்மதியாக இரு" என்று பெரியவர் தெரிவித்தார்.

பிறகும் அந்த ராஜா ஏதோ யோசனை செய்து கொண்டிருந்தார்.

"என்ன யோசனை?" என்று கேட்டார் பெரியவர்.

"அது வந்து... ஒன்றுமில்லை... என் மகன்.. மிகவும் சிறிய பையன். 'என்னாலேயே தாங்க முடியாத அரச பாரத்தை அவன் எப்படித் தாங்குவான்?" என்று யோசிக்கிறேன்' என்றார் அரசர்.

"அப்படியானால்.... அதை என்னிடம் கொடுத்துவிடு" என்றார் பெரியவர்.

அதற்கு அரசர், "சரி' என்று ஒப்புக் கொண்டார்.

"சத்தியம் செய்து கொடு" என்று கேட்டார் பெரியவர்.

அதற்கிணங்க அரசரும், "இனிமேல் இந்த ராஜ்யம் முழுவதும் உங்களுடையது!" என்று பெரியவரிடம் சத்தியம் செய்து கொடுத்தார்.

'சரி... ராஜ்யத்தை என்னிடம் கொ'டுத்துவிட்டாய், இனிமேல் நீ என்ன செய்யப்போகிறாய்?" என்று பெரியவர் கேட்டார்.

"அரண்மனைக் கருவூலத்திலிருந்து கொஞ்சம் பொன் எடுத்துக்கொண்டு வெளிதேசம் எங்கேயாவது சென்று விடுகிறேன். அங்கே போய் ஏதாவது வியாபாரம் செய்து நிம்மதியாக வாழ்வேன்" என்றார் அரசர்.

"அரண்மனைக் கருவூலம் இப்போது எனக்குச் சொந்தம்! அதிலிருந்து நீ எப்படி பொன்னோ பணமோ எடுக்க முடியும்?" என்றார் இவர்.

அதற்கு அரசர், "நீங்கள் சொல்வதும் சரிதான். அப்படியானால் நான் வேறு எங்கேயாவது சென்று, ஏதாவது

வேலை செய்து பிழைத்துக் கொள்கிறேன்" என்று தெரிவித்தார்.

"சரி... இப்போது வேலை செய்வது என்று நீ முடிவு செய்துவிட்டாய். அதை ஏன் நீ வேறு எங்கேயாவது போய்ச் செய்ய வேண்டும்? இங்கு என்னிடம் செய்யலாமே!" என்றார் பெரியவர்.

"சரி, அப்படியே செய்கிறேன். இங்கேயே ஏதாவது வேலை செய்கிறேன். தாங்கள் எனக்கு ஒரு வேலை கொடுங்கள்!" என்று கேட்டார் ராஜா.

பெரியவர் வேலை கொடுத்துவிட்டு, ராஜாவைப் பார்த்து சொன்னார்.

"இதோ பாருப்பா.....நீ ஏற்கனவே ராஜாவாக இருந்து பழக்கப்பட்டவன். ஆதலால் எனக்குப் பதிலாக நீயே இந்த ராஜ்யத்தை கவனித்துக் கொள். உன்னுடைய வேலைக்கு உனக்குச் சம்பளம் தருகிறேன். கடமையைச் செய்ய வேண்டியது உன் பொறுப்பு. அதில் உள்ள நல்லது கெட்டதுக்கு நான் பொறுப்பு. நீ உன் வேலையை செய்துவிட்டு, மாதா மாதம் என்னிடம் வந்து சம்பளம் வாங்கிக்கொள்" என்றார் பெரியவர்.

அப்படியே செய்தார் அந்த ராஜா. முன்பு என்ன செய்து கொண்டிருந்தாரோ....அதனையேத்தான் அவர் இப்பவும் செய்கிறார். ஆனால் இப்போது கவலை இல்லாமல் நிம்மதியாக இருந்தார்..... பிரச்சனைகள் பெரியதாகத் தெரியவில்லை. நிம்மதியாக அவரால் தூங்க முடிந்தது. 'என்னுடைய கடமையை நான் செய்கிறேன். இந்த அரசாங்கம் என்னுடையதில்லை!" என்ற நினைப்புதான் அவருடைய அந்த நிம்மதிக்குக் காரணம்.

ஒரு மாதம் கழிந்த பிறகு அந்தப் பெரியவரை ராஜா சந்தித்தார்.

"புதுவேலை எப்படி இருக்கிறது?" என்று கேட்டார் பெரியவர்.

"மனநிறைவு தருகிறது. நிம்மதியாக இருக்கிறது" என்றார் ராஜா.

"அரசாங்கம் உன்னுடையது என்று நினைத்தபோது அவதி. அது உன்னுடையதில்லை என்ற தெரிந்ததும் நிம்மதி. பற்றில்லாமல் கடமையைச் செய்! பலனை எதிர்பார்க்காதே! இதுதான் நிம்மதிக்கு வழி. இதை நீ புரிந்துகொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் நான் இப்படிச் செய்தேன்!" என்றார் பெரியவர்.

நாமும் அதைப் புரிந்து கொண்டால், நல்லமுறையில் நிம்மதியாக வாழலாம். புரிந்துகொள்ள வேண்டுமே!

இன்றைய நாகரீக வாழ்க்கையில் வாழும் மக்கள் உணரவே, "ஆசை அற" எனும் தலைப்பில், அருணகிரிநாதர் பாடிய பாடலை பொருத்திப் பார்ப்பது சிறப்பாகும்.

அற்றைக் கிரை தேடி அத்தத் திலுமாசை,
பற்றித் தவியாத பற்றைப் பெறுவேனோ;
வெற்றிக் கதிர்வேலா வெற்பைத் தொளைசீலா;
கற்றுற் றுணர்போதா கச்சிப் பெருமாளே. -திருப்புகழ்

**இதன் கருத்து :**

அன்றன்று வேண்டிய உணவைத் தேடி - பொருளிலும் ஆசை
கொண்டு தவியாத பற்றை (பற்றுக்கோடு ஒன்றை) பெறுவேனோ!
வெற்றியைத்தரும் ஜோதிவேலனே!
(சிரவுஞ்ச) மலையை தொளைத்த பரிசுத்தனே!
கற்றுத் தியானித்து உணரப்படும் ஞான சொரூபனே
கச்சி (காஞ்சி) யிற் - பெருமாளே.

இப்பாடலில், முதல் 4 சீர்களில் சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளை பொறுத்தி, நான்கு அடிகளில் பாடியுள்ளது இவரது கவித்திறனுக்கு ஓர் எடுத்துக் காட்டாகும். இதனைச் சூத்திரம் எனச் சொல்வதில் என்ன பிழை? அடியார்கள் யாவரும் தினமும் காலையில் எழுந்து, நீறணிந்து, முருகனிடம் இறைஞ்சிக் கேட்டுக் கொள்ள உகந்த பாடலாகும். வாழ்க்கையில், தவியாத பற்றைப்பெற முயற்சி செய்தலே சிறப்பாகும்.



# 11. பேய், பூதம், பிசாசுகளை விரட்டும் திருப்புகழ்

முருகபக்தர் ஒருவர் ஒருநாள் இரவு ஆள் நடமாட்டம் இல்லாத ஒரு சாலையில் தன்னந்தனியே போய்க் கொண்டு இருந்தார்.

அப்பொழுது அவரைப் பற்றலாம் என எண்ணி ஒரு பேயும் அவரைப் பின் தொடர்ந்து வந்தது.

முருக பக்தர் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு வந்தபோது அந்தப் பேய் அவரைப் பின் தொடராமல் தூர நின்றது.

பேய் தன்னைப் பின் தொடரவில்லை என எண்ணி முருக பக்தர் அந்தக் குறிப்பிட்ட இடத்தை விட்டு நகர்ந்ததும், பேயூம் அவரைப் பின் தொடர்ந்து அவரைப் பற்ற முற்பட்டது.

முருக பக்தர் உடனே ஓடிப் போய் முன் குறிப்பிட்ட இடத்தி நிற்க அவபைப் பின் தொட அஞ்சி அப்பேய் தூர நின்று அவ்விடத்தை அச்சத்துடன் பார்த்தது.

பேயை அச்சப்படவைக்கும் அபூர்வசக்தி அக்குறிப்பிட்ட இடத்தில் இருப்பதை அறிந்து கொண்டார் முருக பக்தர். அவ்விடத்திலிருந்த மண்ணை அப்படியே வாரித்தன் மடியில் கட்டிக் கொண்டவராய் முருக பக்தர் நடை போட, அவரைப் பின் தொடராமல் பேய் பின்வாங்கிச் சென்று விட்டது.

பத்திரமாய் வீடு வந்து சேர்ந்த முருகபக்தர் மடியிலிருந்த மணலைக் கீழே கொட்டி ஆய்வு செய்தபோது அதில் இருந்தது அருணகிரிநாதரின் திருப்புகழ்ப்பாடல் இருந்த ஓர் ஓலைச்சுவடி.

"இருந்த வீடும் கொஞ்சிய சிறுவரும் உறு கேளும்
இசைந்த வூரும் பெண்டிரும் இளமையும் - வளமேவும்"

எனத் தொடங்கும் திருப்புகழ் பாடல் அடங்கிய அவ்வோலைச் சுவடியே அன்று முருகபக்தருக்குக் கிடைத்த பரிசாகும்.

இவ்வாறு திருப்புகழ்ப் பாடலுக்கே அஞ்சிப் பின் தொடர்ந்த பேய் ஓடி விட்டது என்று சொன்னால், அருணகிரிநாதர் அருளிச் செய்த திருப்புகழ் எனும் மந்திரமாலை முழுவதும் நம் இல்லத்தில் இருப்பின் பூதம், பேய், பிசாசுகள் வந்து அண்டுமா? அவை ஓடி ஒளிந்தும் ஒழிந்தும் விடும் என்பது திண்ணமாகும்.

ஆகவேதான் 'திருப்புகழ்' விரிவுரை எழுதிய அருள்மொழி அரசு டாக்டர் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் இவ்வாறு உபதேசித்தார்கள்.

"அடுப்படி இல்லாத வீடு இருந்தாலும் இருக்கலாம்
திருப்புகழ் இல்லாத வீடு இருக்கக் கூடாது"

என்பதுதான்.



# 12. ஆறுபடையா ஆற்றுப்படையா?

இன்றைய நாளில் சிவனடியார்கள் எவ்வாறு சிவபெருமானுக்கு உரிய தலங்கள் பல இருந்தும் அவற்றுள் சிறந்தனவாகப் பஞ்சபூதத்தலங்களையே தேர்வு செய்து வழிபட்டு வருகின்றனரோ அதே போன்று முருகனடியார்களும், கந்தனுக்குப் பல தலங்கள் இருப்பினும் அவற்றுள் சிறந்தனவாக நக்கீரரால் கூறப்பட்ட 6 தலங்களையே சிறப்பாகக் குறித்துப் போற்றி, வருவதைக் கண் கூடாகக் காணலாம். இதனையே இன்று மக்கள் 6 படைவீடு என அழைத்து வருவது சிந்திக்கற்பாலது.

முருகப் பெருமானின் அருள்பெற்று அவனருளால் அவனது புகழைப் பாடினவர்கள் மூவரேயாவர் அவர்கள்.

1. நக்கீரர். 2. கச்சியப்பசிவாச்சாரியர், 3. அருணகிரிநாதர் எனப்படுவர். நக்கீரர் அருளிச் செய்த நூல் திருமுருகாற்றுப்படை; கச்சியப்பசிவாச்சாரியார் அருளிச் செய்தது கந்தபுராணம்; அருணகிரிநாதர் முருகனை நேரில் தரிசித்த பிறகே, அவன் அருளால் திருப்புகழாதியான நுல்கள் அருளிச் செய்தவராவர் அம்மூவரால்அருளிச் செய்யப்பட்ட கவிகளில் எங்குமே ஆறுபடை வீடு எனக் குறித்துப் பாடாது, 'ஆறுதிருப்பதி', 'அறுபதி' என்றே பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

"ஆறு திருப்பதிகண்டு ஆறெழுத்தும் அன்பினுடன் கூறுமவர் சிந்தை குடி கொண்டோனே" - எனக் குமரகுரு சுவாமிகள் பாடியுள்ளதையும் கவனித்தல் முக்கியம். அண்மையில் வாழ்ந்த பாம்பன் குமரகுருபரதாஸரும, 'அறுபதி' என்றே பாடியுள்ளார். ஆகையால் ஆறுபடைவீடு எனக் கூறுவது பொருந்தாதது மட்டுமின்றி, ஆதாரமும் அற்றது என்பது பலரது கருத்து, உதாரணத்திற்கு, எப்படி மூவர் பாடிய பாடல்களுக்குத் தேவாரம் என்று வழக்கத்தில் சொல்லுகிறோமோ, அதுபோன்றதேயாகும். மூவர்கள் பாடியதை முறையே கூறுவதானால்,

1. ஞான சம்பந்தர்பாடியதை - திருக்கடைக்காப்பு எனவும்
2. நாவுக்கரசர் பாடியதை மட்டும் தேவாரம் எனவும்,
3. சுந்தரர் பாடியதை - திருப்பாசுரம் அல்லது திருப்பாட்டு எனவும்

பெயரிட்டு வழங்கினர். திருமுருகாற்றுப்படையில் ஆறுபடை வீடு எனப்பாடினதாக எங்கும் குறிப்புகள் காணப்படவில்லை.

கந்தபுராண ஆசிரியர் - கச்சியப்ப சிவாச்சாரியாரும், நக்கீரரால் அருளிச் செய்யப்பட்ட 6 தலங்களையும் ஆறுபதி எனும் கருத்திலே பாடியுள்ளதையும் கவனிக்கலாம். ஆனால் ஆறுபடை எனக்கூறியதாக எங்கும் காணவில்லை. அருணகிரியார் தாம் பாடிய கவிகளிலும், மேலே சொன்ன இருவரது கருத்தையே பின்பற்றி, ஆறுபதி என்றே பாடியுள்ளார். உதாரணத்தற்கு,

“ஈனமிகுதுள பிறவி - அணுகாதே” எனத் தொடங்கும் பாடலில் “ஆன திருப்பதிகம் அருள் - இளையோனே, ஆறு திருப்பதியில் வளர் - பெருமானே” எனவும், அறுபதி நிலை மேவிய - பெருமாளே” எனப் பிறிதொரு பாடலாலும் பாடியுள்ளதைக் கவனிக்கலாம்.

“ஆறுபடை வீடு” என்று கூறும் தொடரால், பரங்குன்றும், செந்தூர்ப்பதியும், ஆவினன்குடியும், ஏரகமும், குன்றுதோறாடலும், பழமுதிர்சோலையும் முருகனது படை வீடுகளா? என்ற எண்ணமே வெகுகாலமாகவே பலரது மனத்தை உறுத்திக் கொண்டிருந்தது. அதைக் குறித்துத் தொல்காப்பியம், சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற காவியங்களில் எங்கேனும் இதைப் பற்றிய குறிப்புகள் வந்துள்ளதா? என்று தக்க தமிழ் அறிஞர்களைக் கேட்டு அறிய முற்பட்டதில்,

மேற் கூறிய நூல்களைப் படித்தால், இந்தச் சந்தேகத்துக்கு விளக்கம் கிடைக்கலாம் எனச் சொன்னதும், முன்பின் தெரியாத புதிய வீட்டில் ஒருவர் நுழைந்தது போன்று, அடியேன் மேற்குறித்த காவியங்களை ஆராய்ப்புகும் தருண த்தில், என் மனக்கண் முன் அப்போது இளங்கோவடிகளும், தொல்காப்பியரும் தோன்றினர். என்னுடைய மனக்கலக்கமாகிய இருட்பிழம்பில் அந்த இருவர் கருத்தும் ஒரு மின்னலைப் போலவே தோன்றி நம்பிக்கை ஊட்டியது. இருக்கருத்துக்களைக் கண்டவுடன், அசோகவனத்தில் இருந்த சீதை, இராமபிரான் தந்தனுப்பிய கணையாழியைக் கண்ட போது எத்தயை மகிழ்ச்சி அடைந்தாரோ, அத்தகைய மகிழ்ச்சியை நான் அடைந்தேனென்று சொன்னால் மிகையாகாது. இனி இராமர் வந்து தன்னை மீட்பார், அச்சமில்லை எனச் சீதை நினைத்தது போன்று, அடியேனும் இனித் தொல் காப்பியத்தையும், சிலப்பதிகாரத்தையும் ஒரே பிடியாகப் பிடித்துக் கொண்டு என் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளலாம் என முயச்சித்ததால், பலனை அறியப் பெற்றேன்.

பொதுவாக படைவீடு என்றால் போருக்காக ராணுவ வீரர்களைத் தங்க வைத்த இடம் எனப் பொருள் கொள்ள வேண்டும். இதுவே பாசறை எனச் சிலப்பதிகாரத்தில் கூறப்பட்டுள்ளது. கூதிற் பாசறை, வேனிற்பாசறை எனப் பாசறையை இருவகைப்படுத்தித் தொல்காப்பியம் அதற்கு இலக்கணம் கூறுகிறது. போருக்காகப் படை நடத்திச் செல்லும் தலைவன் தன் பெரும்படையுடன் பாடி வீடமைத்துத் தங்கி இருக்கும் இடமே பாசறை - பாடை வீடு எனப்படும். படைவீடு என்பது படைகள் தங்கள் பாசறையைக் குறிக்காமல், தலைநகரைக் குறிக்கும் சொல்லாகவும் ஆளப்பட்டுள்ளது. உதாரணத்திற்கு - "வித்திசவீரன் விறற்படை வீடு" என்று பெருங்கதையில்

கூறப்பட்டுள்ளது. இதில் 'படை வீடு" என்பது தலைநகரைக் குறிப்பதாய் அமைந்துள்ளது. தலைநகரில் அரசனுடைய போர் வீரர்கள் பொதுவாகச் சூழ்ந்திருப்பர். ஆதலால், அதனைப் படைவீடு என்றனர் எனலாம். ஆனால் முருகனைப்பாடிய அருளாளர்கள் இவற்றைப் படைவீடுகளாய்க் குறிப்பிட்டதாகத் தெரியவில்லை. அண்மையில் திரைப்படத்தில் "அறுபடை வீடு கொண்ட திருமுருகா" எனப்பாடி, பாடலும் மக்களின் மனநிலையை மாற்றியது. அதனால் இது பிற்கால வழக்கேயாகும் என்பது தெளிவு.

முருகன் தேவசேனபதியாய், சூரபத்மன் முதலாய அவுணர்களைக் கொன்று தேவர்கள் துயர் நீங்கப் படை நடத்திச் சென்றான் என்பதாகக் கந்தபுராணம் கூறுகிறது.

இமயத்திலிருந்து, சூரபத்மனை அழிக்கப் புறப்பட்ட முருகன், வழியில் குருகு பெயர் குன்றத்தைப் (கிரவுஞ்சகிரியை) பிளந்து தாரகனைக் கொன்று, தேவகிரியில் தங்கியும், பின்னர் பயணத்தை மேற்கொண்டு, கேதாரம், காசி, திருப்பருப்பதம், திருவேங்கடம், காளத்தி, திருவாலங்காடு, காஞ்சி, திருவண்ணாமலை, திருவெண்ணெய்நல்லூர், முதுகுன்றம், சிதம்பரம் ஆகிய தலங்கள் வழியாக, சோழ நாட்டில் உள்ள மண்ணியாற்றங்கரையை அடைந்து, முருகன் தேவதச்சனிடம் தங்குவதற்கு ஒரு நகரம் அமைக்குமாறு பணித்து, தங்கிய தலமே சேய்ஞலூர் என வழங்கப்பட்டது.

பின்பு அங்கிருந்து போர்ப் படையுடன் புறப்பட்டுத் திருவிடை மருதூர், திருப்பறியலூர், திருவாரூர் வழியாய்ச் சென்று, ஒரு பாலைவனத்தைக் கடந்து, செங்குன்றைக் கண்டபின் செந்திற்பதியை அடைந்ததும், விஸ்வகர்மா விடம், முருகன் ஒரு பெருநகரை அங்கு உருவாக்கச் செய்து, படைகளுடன் தங்கி வீரவாகுவை சூரபத்மனிடம் தூது விடுத்தனன்.

அதற்கு அடுத்தாற் போல், சூரனை வதை செய்யும் நிமித்தம், திருச்செந்தூரில் இருந்து புறப்பட்டு ஈழநாட்டிற்கு வந்து, மாணிக்க கங்கை நதிக்கரையில் தங்க எண்ணி, தேவதச்சனிடம் பாசறை ஒன்றை நிர்மாணிக்கச் செய்து, சூரனை வெல்வதற்குப் படைவீடாக அமைத்த இடமே ஏமக்கூடம். இதனைக் கந்தபுராணத்தில், ஏமக்கூடப் படலத்தில்.

"காண்டியீது சூரனூர், கடுங்கயீசா் செறிதலா
லாண்டுசேறன் முறையதன் றுதற்கடுத்த வெல்லையா
மீண்டு பாசறைத்தல மியற்றுவித திருந்தி பின்
வேண்டுமாறு புரிதியைய வினையநாடி யென்னவே".

என்று வரும் கச்சியப்ப சுவாமிகள் வாக்கால் அறிய முடிகிறது.

இவ்விதமாகக் கந்தபுராணத்தில் முருகன் படை நடத்திச் சென்ற வழி விரிவாகக் கூறப்பட்டுள்ளது. கந்தபுராணத்தில், முருகன் படையோடு தங்கிய இடங்களாய் தேவகிரி, சேய்ஞலூர், செந்தில் ஆகிய பலவிடங்களே குறிக்கப்பட்டுள்ளன. முருகன் படை நடத்திச் சென்ற வழியில் உள்ளனவாய்க் கூறப்படும் பெருநகரங்கள் சிலவற்றிலும் தங்கிச் சென்றிருக்கலாம். ஆறுபடை வீடுகளாய்க் குறிக்கப்பட்டவற்றுள் "அலைவாய்" என்னும் செந்தூர் ஒன்றினைத் தவிர, ஏனையவற்றை முருகன் படைகளுடன் தங்கிய இடங்களாய்க் கருதவாய்ப்பில்லை என்பதே அடியேனின் கருத்து. திருப்பரங்குன்றமும், குன்று தோறாடலில் ஒன்றாய்க் கூறப்படும் திருத்தணிகையும், கந்தபுராணத்தில் இடம் பெற்றிருந்தாலும், அவைகள், போர் முடிந்த பின்னரே தேவசேனையை மணந்த பதியாகவும், வள்ளியை மணந்த பின்னரே செருத்தணிந்து தங்கிய இடமாகவுமே, குறிக்கப்பட்டதிலிருந்து, சூரசம்ஹாரம் முடிந்தபின் போர்ப்படைகளை ஏனைய பகுதிகளில் தங்க

வைத்திருக்க வாய்ப்பே இருந்திருக்காது. அதனால் இந்த இரண்டு தலங்களையும் படைவீடுகளாகக் கருதவாய்ப் பில்லை என உறுதியோடு சொல்லலாம்.

திருமுருகாற்றுப்படையிலும், மேற்கூறிய தலங்களைப் படைவீடுகள் என்பதற்குரிய குறிப்புகள் ஒன்று கூடக் காணப்படவில்லை. நக்கீரர், "உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு" எனத் தொடங்கியவர். முருகன் தோற்றம், மாலை, அடையாளப்பூ, மாமுதல் தடிந்த கொற்றம் ஆகியவற்றைக் கூறி, அவன் சேவடிபடரும் செம்மல் உள்ளமோடு செலவு நீ நயந்தனையாயின், இன்னே பெறுதி நீ முன்னிய வினையே" என அறிவுறுத்தி 'அப்பெருமான் திருப்பரங்கன்றத்தில் அமர்ந்து உறைதலும் உரியன். அலைவாய் சேறலும் நிலைஇயபண்பே. ஆவினன் குடி அசைதலும் உரியன், ஏரகத்துறைதலும் உரியன், வேலன் குன்றுதோறாடலும் நின்றதன் பண்பே. நீ அவனை அவ்விடங்களில் கண்டு. அவனது புகழைக் கூறி வாழ்ததுவாயாயின், அளியன் தானே முதவாய் இரவல்' எனப் பணியாளர் கூற பழமுதிர் சோலை மலைக் கிழவோனாகிய அப்பெருமான் மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி, "அஞ்சல் ஒம்பு மதி" என அன்புடன் கூறி

"இருநிற முந்நீர் வளைஇய உலகத்து,
ஒரு நீ ஆகத் தோன்ற விழுமிய பெறலரும்,
பரிசில் நல்குமதி"

என முடிக்கிறார்.

மேற்கூறிய செய்திகளிலிருந்து வீடு பெற விரும்பிய ஒருவனுக்கு வீடு பெற்றான் ஒருவன் முருகனது பெருமைகளையும், அவன் அருள் புரியும் திறத்தையும் அவன் எழுந்தருளியுள்ள இடங்களையும் எடுத்துக் கூறி, நீயும் சென்றால் உனக்கும் அவன் அருள் புரிவான், பெறவரும் பரிசில் நல்குவான் என்று எடுத்துரைத்து, நீயும்,

அவனிடம் செல்வாயாக என வழிப்படுத்தி அனுப்புவது என்பதாக திருமுருகாற்றுப்படை எனும் நூலில் அறியப்படுகிறது.

ஆறுபடை : ஆற்றுப்படை (ஆறு - வழி, படை - படுத்துவது) ஆற்றுப்படை - வழிப்படுத்துவது என்பதே இதன் பொருள். இதனைத் தொல்காப்பியர், பொருளதிகாரப் புறத்திணை இயலில்.

"நாளில் நல்லிசை" எனத் தொடங்கும் பாவில் "சித்தரும் பாணரும் பொருநரும் விறலியும் ஆற்றிடைக்காட்சி உறழத் தோன்றிப் பெற்ற பெருவளம் பெறா அர்க்கறிவுறீஇச் சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்" எனக் கூறப்பட்டுள்ளது. ஆடல் மாந்தரும் பாடற்பாணரும் கருவிப் பொருநரும். இவருள் பெண் பாலராகிய விறலியும் என்னும் நாற்பாலரும் தாம் பெற்ற பெபெருஞ்செல்வத்தை எதிரில் வந்தோர்க்கு தாம் பெற்றவை எல்லாம் பெறுமாறு கூறி வழிப்படுத்துவது என்பதே பாடலின் கருத்து. இவ்வகையில் அமைந் 4 வகையான ஆற்றுப்படையை பிற்காலத்தில் இயல், இசை, நாடகம் என்னும் மூன்றன்னுள் முதன்மைத்தாகிய இயற்றமிழில் வல்ல புலவரையும் உடன் சேர்த்து 5 வகைப்படுத்திக் காட்டியது பன்னிருபடலம் -பாடல்:

> "புரவலன் பரிசில் கொண்ட மீண்ட
> இரவலன் வெயில்தெறும் இருங்கானத்திடை
> வறுமையுடன் வரூ உம் புலவர் பாணர்
> பொருநர் விறலியர் கூத்தர்க் கண்டப்
> புரவலன் நாடு ஊர் பெயர் கொடை பரர்அய்
> ஆங்குநீ செல்கென விடுப்பதாற்றுப்படை".

என இலக்கணம் வகுத்து, "ஆற்றுப்படை" எனப் பெயரும் குறித்தது அந்நூல். இவ்விலக்கணத்திற்கு இலக்கியமாய் அமைந்த பத்துப்பாட்டுகளுள் திருமுருகாற்றுப்படை என்பது

ஒன்று. இதனையே "புலவராற்றுப்படை" என்றும் வழங்குவர்.

முருகு எனும் சொல்லே பிற்காலத்தில் "அன்" விகுதி பெற்று "முருகன்" என வழங்கலாயிற்று. அம்முருகனே குறிஞ்சி நிலக்கடவுளாய்ப் பண்டைக்காலம் முதல் போற்றப்பட்டு வருகிறான்.

"சேயோன் மேய மைவரை உலகமும்" இதனைக் குறிப்பிடுகிறது. அருணகிரியாரும் "திருந்தப்புவனங்கள் ஈன்ற பொற்பாவை" எனத் தொடங்கும் கந்தரலங்காரப் பாடலில், "கடலழ, குன்றழ, சூருழ விம்மியழும் குருந்தைக் குறிஞ்சிக் கிழவன் என்றோதும் குவலயமே" எனவும், மற்றோர் பாடலிலும், "குறிஞ்சி வாழும் மறவர் நாயக" எனவும் பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

திருமுருகாற்றுப்படையில் 'குன்று தோறாடுவன், முருகன்" எனக் குறிப்பிட்டதோடு நில்லாது, "மலைகிழவோனே" என்றெல்லாம் நக்கீரர் பாடியுள்ளது போற்றத்தக்கது. முருகாற்றுப்படை என்பது, முருகனுடைய பெருமைகளைக் கூறி அவனிடம் வீடுபேறு அடைய விரும்பும் ஒருவனை ஆற்றுப்படுத்துவதாய் அமைந்ததே அல்லாது முருகனுடைய ஆறுபடை வீடுகளைக் கூறியதன்று. பக்திமான்கள் உள்ளத்தில் ஆழமாகப் பதியவே, ஆராய்ச்சியாளர்கள் கற்பனை செய்து, அல்லது மனதில் தோன்றியதைக் கூறியும் இருக்கலாம் அல்லவா! திருமுருகாற்றுப்படையில், ஞானமணம் நிரம்பியதாக முருகனது அருட்செறிவை மிகமிக நன்றாக விளக்குவதாக இருக்கிறது என்பதை மாத்திரம் நாம் அறிந்து கொண்டால் அதுவே போதுமானதாகும்.

திருமுருகாற்றுப்படை என்பது "முருகனுடைய பெருமைகளைக் கூறி, பரிசில் பெறுவதற்குரிய இரவலனை (ஆன்மாவை) அவனிடம் ஆற்றுப்படுத்துவதாய் அமைந்ததே

அல்லாது, முருகனுடைய 6 படைவீடுகளைக் கூறியதன்று என்பது சொல்லாமலே விளங்குகிறது. அங்ஙனமாயின் "ஆறுபடை வீடு" எனும் வழக்கு எவ்வாறு உண்டாயிற்று? ஆற்றுப்படை என்பதன் உரிய பொருளை உணராது, மயங்கியோர் சிலர் ஆற்றுப்படை என்பது வழிப்படுத்துவது என உணராமல், ஆறுபடை வீடு எனக் கொண்டு வழங்கிய தவறான பழக்கத்தால் ஏற்பட்டது என்றே யூகிக்க முடிகிறது. அதனால் இவ்வழக்கம் அண்மையில் தோன்றிய சொல்லாகவே கொள்ள வேண்டியுள்ளது.


திருப்பரங்குன்றம்


திருச்செந்தூர்


திருவாவினன்குடி (பழனி)


திருவேரகம்
(சுவாமிமலை)


திருத்தணி
(குன்றுதோறாடல்)


திருச்சோலைமலை
(பழமுதிர்சோலை)

# 13. சமயகுரவர் நால்வரும் - அருணகிரியாரும்

தேவாரம், திருவாசகம் அருளிய நால்வருக்கும், அருணகிரியாருக்கும் உள்ள ஒற்றுமை நயங்களை ஆராய்வோம். பரம்பொருளை அடைய முன்னோர்கள் 4 வகை மார்க்கங்களை வகுத்துள்ளனர். 1. புத்ர மார்க்கம், 2. தாச மார்க்கம், 3. சக மார்க்கம், 4. சீட மார்க்கம் என்பதாகும். இதனடிப்படையில் வாழ்ந்து காட்டிய நால்வரது வரலாற்றை முதற்கண் கருத்தில் கொளவ்து அவசியம்.

புத்ர மார்க்கமாய் (பிள்ளையைப் போல பரிவு காட்டி) சம்பந்தர் இறைவனை அடைந்தார். தாச மார்க்கமாய் (அன்புடன் தொண்டு செய்து) இறைவனை அடைந்தார் நாவுக்கரசர். சக மார்க்கத்தில் (நண்பனாய் அன்பு செலுத்தி) இறைவனை அடைந்தார் சுந்தரர். சீட மார்க்கத்தில் (மாணாக்கனாய் அன்பு செய்து) மணிவாசகர் இறைவனை அடைந்தார்.

இத்தகு 4 வகை மார்க்கத்தையும் ஒருசேர அனுஷ்டித்தவர் அருணகிரியார் என்பது அவரது பாடல்கள் வாயிலாக ஒப்பிட்டுப் பார்ப்பது சிறப்பாகும்.

அதாவது பிள்ளையைப் பாசம் பூண்டும், தொண்டனைப் போல் ஊழியம் செய்தும், நண்பனைப் போல் நட்பு பாராட்டியும், சீடனைப் போல் உபதேசம் பெற்று பராவியும், அருணகிரியார் முருகனைத் துதி செய்து வாழ்ந்து காட்டியவராவார் என்பதை இவரது கவிகள் மூலம் அறியப்படுகிறது. எடுத்துக்காட்டாக

"அருணகிரிநாத எனும் அப்பனே போற்றி" என திருப்புகழ் 'கலகவிழி மாமகளிர்" எனும் பாடலினாலும், 'எந்தாயுமெனக்கருள் தந்தையும்நீ" என (கந்.அனுபூதி பாடல் 46ல்) பாடியுள்ளதற்கேற்ப புத்திரபாவத்தை வெளிப்படுத்தியும்,

'குற்றவேல் அடிமை செயும் வகை அருளாதோ" திருப்புகழ் "கத்தூரிய கரும்ருகமத" பாடலின் மூலம் தாச மார்க்கத்தை அறியலாம்.

"எமக்கமிர்தோழா, கடப்பமலர் அணிவோனே" திருப்புகழ் 'நாடா பிறப்பு முடியாதோ' பாடலினால் தோழனது நேர் பாவத்தை அறியமுடிகிறது.

"அன்புற உபதேசபொருளூட்டி" திருப்புகழ் "தலைநாளிற்பத" எனும் பாடலில் அன்பின் மூலம் சீட நிலையை வெளிப்படுத்திப் பாடியுள்ளார்.

இனி, சரியை, கிரியை, யோகம், ஞானம் எனப்படும் 4 வகை வழியினைப் பின்பற்றி பேறுபெற்றவர்கள் முறையே அப்பரடிகள், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என ஆன்றோர்கள் கூறுவர். அருணகிரியார் ஒருவரே, மேற்கூறிய நால்வரது நான்கு வகை வழிகளையும் பின்பற்றி விளக்கமுற்றனர் என்பது பாடலின் மூலம் உணர்ந்து மகிழற்பாலது.

"விருப்பொடு உன்சிகரமும் வலம் வருகிலேன்" "திருஉசாத்தானம்" பாடலின் மூலம் சரியை மார்க்கத்தையும், "ஆடும்பரி, வேல், அணிசேவல் என பாடும் பணியே பணியா-யருள்வாய்" (கந்.அனுபூதி-1) எனும் பாடலால் கிரியா மார்க்கத்தையும்,

"மூலவாசல் வெளிட்டுனதுரத்திலொளிர் யோக பேத வகையெட்டும் இதில் ஒட்டும் வகையின்றுதாராய்" என, திரு. ஆசைநாயலுசது" என்ற பாடலின் மூலமும், "அடியேனும் தூங்கிய பார்வையொடு தாங்கிய வாயுவொடு தோன்றிய - சோதியொடு சிவயோகம் தூண்டிய சீவனொடு வேண்டிய காலமொடு சோம்பினில் வாழும் வகை அருளாதோ' திரு. 'சரங்கரிபபாடியிட" பாடலினாலும் யோக மார்க்கத்தையும்,

'நாயெற்குன்செயலால் அற்புதஞானத்திண்-கழல்காட்டி" எனவும் 'சுகஞானக் கடல் முழ்கந்தந்தடி யேனுக்கருள்பாலிக்கும் சுடர்பாதக்குகனே" என, திரு. 'நகையாலெத்திகள்" எனும் பாடலினால், அருணகிரியார் ஞான மார்க்கத்தையும் ஒருங்கே கைப்பற்றிப் பொலிந்தார் என அறிய முடிகிறது.

தலங்கள்தோறும் சென்று தொழுதலால் சரியையாளராகவும் தலங்களில் வீற்றிருக்கும் முருகனைப் பாடித் தொழுதலால் கிரியையாளராகவும், முருக வேளிடம் யோக மார்க்கங்களை உபதேசம் பெற்று சிவயோகத்தமர்ந்திருந்த சீலராதலால் சிவ யோகியாகவும், முருகனிடம் சிவஞானம் பெற்ற செல்வராதலால் மெய்ஞ்ஞானியாகவும் அருணகிரியார் விளங்குகிறார்.

அருணகிரியார் யோக மார்க்கங்கள் எல்லாவற்றையும் உபதேசிக வாயிலாக பெற்றனர் என்பது "யோகத்தாறுப தேசத்தேசிக" என வரும் திரு. பாடலாலும், "சிவயோகம் எனும் குருத்தையறிந்து முகமாறுடைக் குருநாதன் சொன்ன கருத்தை" எனவரும் கந்.அலங்காரம் பாடலாலும் அறிய முடிகிறது.

பின்னும், நால்வர் அனுபவித்துக் காட்டிய அற்புத நிகழ்ச்சிகளுக்கு ஈடாக அருணகிரியார் தன் வாழ்க்கையில் நிகழ்த்தியுள்ளார். உதாரணம் - சம்பந்தர் சிவனிடம் தாளம் பெற்றதுபோல், அருணகிரியார் முருகனிடம் ஜெபமாலை பெற்றுள்ளதை, திரு. 'அபகார நிந்தை" எனும் பாடல் வாயிலாக அறியலாம்.

அப்பர் கடலில் கல்லே தெப்பமாகக் கொண்டு மிதந்து (பஞ்சபூதங்களில் ஒன்றான) நிலந்தாங்க உய்ந்தனர்.

திருமறைக்காட்டில் அப்பரை திருவாய்முளுக்கு வாவெனச் சிவன் அழைத்தது போல, வயலூரிலிருந்த அருணகிரியாரை, முருகன் விராலிமலைக்கு வாவென அழைத்துள்ளார்.

திருவீழிமிழலையில் அப்பரும் சம்பந்தரும் சிவனிடம் பொருள் வேண்டி படிக்காசு பெற்றதுபோன்று, அருணகிரியாரும் முருகனிடம் படிக்காசு பெற்றுள்ளார்.

சோமாசிமாற நாயனாருக்காக, சிவபிரானை வரவழைத்துக் காட்டிய செயல்வொப்ப, அருணகிரியாரும், திருவண்ணாமலையில் தமது நண்பர் பிரபு தேவராஜனுக்காக முருகனை வரவழைத்துக் காட்டினார்.

மணிவாசகர் புத்த மதத்தினரை ஊமையாக்கியடக்கி வாதில் வென்றதுபோல் அருணகிரியார், வில்லிபுத்தூராரை யும், சம்பந்தாண்டானையும் வாதில் அடக்கி வென்றவராவார்.

இங்ஙனம் அருணகிரி ஒருவரே முருகர் அருளால் எல்லா வகையிலும் வாழ்ந்து காட்டினார் என்க.

ஞானசம்பந்தர் போல் 16000 பாடல்கள் பாடியது போன்று தாமும் சந்தப் பாக்களாக 16000 திருப்புகழையும், திருவாசகத்துக்கு நிகராகச் செந்தமிழ்ச் சுவைச்சொட்டும் கந்தரலங்காரத்தையும், திருக்கோவையார் போன்ற அகப்பொருள் துறைகள் விளங்க கந்தரந்தாதியும் பாடி, நித்திய பூசனைக்கு ஏற்றதாக கந்தரனுபூதியும் பாடி, தமிழ்ப் பாவேந்தராக அருணகிரியார் பொலிவுற்றார். இன்றும் பொலிகின்றார். இனி என்றும் பொலிவார் என்பதற்கு ஐயமேதுமில்லை.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.



சம்பந்தர் அப்பர் சுந்தரர் மாணிக்கவாசகர்



அருணகிரிநாதர்

# 14. வாழ்க அந்தணர்

வாழ்க அந்தணர்: வானவர் ஆனினம்;
வீழ்க தண்புனல்; வேந்தனும் ஓங்குக;
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க; வையகமும் துயர் தீர்கவே

- திருஞானசம்பந்தர் தேவாரம்

யாவரும் இப்பாவினை அறிவார்கள். கேரளாவைச் சேர்ந்த நாராயண குருதேவரை நெறிப்படுத்தியது இப்பாடலே யாகும். சைவ சமயப் பற்றுள்ளவர்கள் இப்பாடலை உள்ளம் உருகிப்பாடுவார்கள். திருமுறை ஓதுவார் யாவரும் இப்பதிகத்தையே கடைசியாக ஓதி முடிப்பது வழக்கம். இப்பாடல், உயர்ந்த உள்ளத்தை வயப்படுத்தக் கூடியது. "உலகம் உயர்ந்தோர் மாட்டே" எனும் தொடருக்கு சிறந்த எடுத்துக்காட்டாகும். ஒப்பற்ற பண்பாட்டை விளக்குவதற்கு இப்பாடல் ஒன்றே போதும்.

"வாழ்க அந்தணர்" என முதற்கண் அந்தணர்க்கு வாழ்த்துச் சொன்னார் சம்பந்தர். காரணம், இறைவணக்கமே தினசரி வாழ்க்கையில், முதற் கடமையாம், உலகில் முதல் அந்தணர் கடவுளே; முதல் கூலியாளும் இறையே, திருத்தொண்டத் தொகையை இயற்றிய சுந்தரர், "தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்' என்றே பாடியுள்ளார்.

இங்கு அந்தணர் எனும் பதம், பிறந்து வளர்ந்து, இறக்கும் மனிதவர்க்கத்தைக் குறிக்காது ஆதிபகவானாகிய கடவுளையே குறிக்கும். மனித வர்க்கத்தைக் குறித்து பாடியிருப்பின், தில்லை வாழ் அந்தணர்கள் தம் அடியார்களுக்கு அடியேன் என்று தான் சுந்தரர் பாடி இருத்தல் வேண்டும். மாறாக தில்லை வாழ் அந்தணர் தம்

அடியார்க்கும் அடியேன் என அந்தணர் எனும் பதம் ஒருமையில் பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

ஊறுகாய் எனும் பதத்தை சில கவிகள் வினைத்தொகை என்பர். அப்பதத்தில் மூன்று காலங்களும் மறைந்துள்ளதால், ஊறினகாய், ஊறுகின்ற காய், ஊறும்காய் என விரிப்பர். அதுபோன்றே, 'வாழ்க அந்தணர்" எனும் சொல், வினைத்தொகையாம், வாழ்ந்த அந்தணர், வாழ்கின்ற அந்தணர், வாழும அந்தணர் எனப் பொருள் விரியும், முக்காலத்தும் மாறாது விளங்குபவன் முக்கண்ணுடைய இறைவனே அன்றி, இரு கண்களையுடைய மக்களோ, மாக்களோ ஆகார். தில்லையில் அன்றும் இன்றும் என்றும் விளங்கும் ஸ்ரீ நடராஜ பெருமானைக் குறிப்பது "வாழ்க அந்தணர்" என்பது எப்போதும் அழகிய அருளையுடையவன் ஆண்டவன் ஒருவனே.

மேலே கூறிய சம்பந்தர் பாடலில் "வாழ்க அந்தணர்" என்பதற்குக் காரணம், இறைவனும் வாழ்க. அடியார்களும் வாழ்க எனக் கொள்ளுதல் வேண்டும். ஆண்டவனுக்கு பல்லாண்டு பாடினால், பாடுவோனும் பல்லாண்டு வாழ்வான். அம்+தண்+அன் எனப் பிரித்தால் அழகிய அருளையுடையவன். மனிதனாகப்பிறந்தாலும் அவன் அந்தணனே! எவனும் அந்தணப் பிறவிக்குரியன். ஆகையால், 'அந்தணர்' எனும் சொல் ஒரு ஜாதியைக் குறிக்காது. அருணகிரியாரும் தாம் பாடிய வேல் வாங்கு வகுப்பில், அணிகுறமின்புணர் தணிகையில் அந்தணன் என்னும் வார்த்தையை முருகப் பெருமானுக்கு அற்பணித்து பாடப்பெற்றுள்ளதைக் கவனிக்கலாம். அதே வகுப்பில் உமாதேவியைக் குறித்து "அபய வரம்புரி உபயகரந்திகழ் அந்தணி" எனப் பெண்பாலில் பாடியுள்ளதும் இறைவியையே குறிக்கும் என்பதனை உறுதியாக்கும்

வகையில் ஆளப்பட்டுள்ளது. "பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்" சிறப்பு ஒவ்வா செய் தொழில் வேற்றுமையான்" எனும் திருக்குறள் சான்றாகும் இவ்வுண்மைக்கு.

"அந்தணர் என்போர் அறவோர் மற்று எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகலான்" தொண்டும், ஞானமும் இல்லான் அந்தணன் ஆகான், அருளாளளே அந்தணன் எனப்படுவான். மற்றவர்க்காக வாழ்பவனே அந்தணன் எல்லா உயிர்களிடத்தும் (மக்கள், மாக்கள், புள்ளினம், தாவரம் முதலியன) செம்மையான கருணை உள்ளத்தோடு ஒழுகுகின்றனவர்களே அந்தணர் என்ப, எனவே அந்தணர் எனும் சொல் ஒரு ஜாதியின் பெயரன்று.

சமபந்தியோஜனத்தினாலும், கலப்பு திருமணத்தினாலும் ஜாதிமதம் ஒழியாது, சீரிய முறையில் மக்களுக்கு கல்வியறிவு கிடைக்க உதவவேண்டும், யாவரும் அறிவுடையவர்களாயிருந்தால், ஜாதி பேதம் தானாகவே ஒழியும். இந்நிலையை நால்வர், அருணகிரியார், நாராயணக் குரு, இராமகிருஷ்ணர், மகாத்மாகாந்தி, வள்ளலார் போன்றவர்களே உறுதி செய்துள்ளனர். இவர்களைப் போன்றவர்களால் தான் இயலும். அவ்வழியில் நடப்பவரால் தான் முடியும்.

இன்றைய சமுதாயத்தில், நான் உயர்ந்தவன், நீ தாழ்ந்தவன் எனப் பிரசாரம் செய்வது பிரபலமாகிவிட்டது, "தாழ்த்தப்பட்டவர்கள்' என சிலருக்குப் பெயரிட்டு, அவர்களை மேன்மை நிலைக்கு கொண்டு வர வேண்டும் எனச் சிலர் அவர்களை ஏணியாக்கித் தம்முடைய செல்வாக்கைப் பயன்படுத்திக் கொள்வதையும் காண்கிறோம்.

இந்த சூழலில்,

ஒன்றே குலம் ஒருவனே தேவன்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகுங்கதியில்லை நுஞ்சித்தது
நின்றே நிலை பெற நீர் நினைந்துய்மினே"

என உலகிற்கு திருமூலர் போதனை அருளியுள்ளார்.

இதனையே அருணகிரியாரும், திருவானைக்கா திருப்புகழ் "ஓலமறைகள் அறைகின்ற ஒன்றது" எனும் பாடலில் சாதிகுலமும் இலது அப்பரம்பொருள் என்று இறைவனையே சுட்டிக் காண்பித்துள்ளார். அதனால் பூசல் வேண்டுவதில்லை. இறைவனுக்கு ஜாதி பேதமே கிடையாது என்பது புலனாகிறது.

கண்ணப்பர் ஒரு வேடர், திருக்குறிப்புத் தொண்டர் வண்ணார் குலத்தவர். தேவார திருவாசகம் பாடிய நால்வரில் ஞானசம்பந்தர், சுந்தரர் இருவர்தான் அந்தணர். அதனால் சாதியின் காரணமாக இறைவன் எவரையும் விலக்கி வைத்ததாக எந்த நூலிலும் வரலாறே இல்லை எனலாம்.

தாழ்ந்தவர் என தாமே நினைத்துக் கொண்டு, என் கால் திருவரங்க கோயிலிலே படலாமா என திருப்பாணாழ்வார் இறைவனிடம் விண்ணப்பிக்க, அரங்கனே தனது அடியார்களில் ஒருவரான அந்தணரையே திருப்பாணாழ்வரைத் தோளில் சுமந்து வரும்படி செய்த வரலாற்றினை நாம் அறிந்துள்ளோம். இறைவனுக்கு சாதி மதம் கிடையாது என்பதற்க்கு இதைவிட வேறு என்ன உதாரணம் தேவை.

நந்தனார், தன்னை தாழ்ந்த குலத்தவராக எண்ணியதால், சிதம்பரம் திருக்கோயிலுள் நுழைய தயங்கினார். இன்னல் தரும் இழி பிறவி இது தடை என்றே துயில்வார் என்கிறார் சேக்கிழார். நந்தனார் தம் பக்தியால்

அந்தணர்களாலும் வணங்கத்தக்க நிலை பெற்றார். எனவே குலத்தினால் எவரும் உயர்ந்தவராகக் கருத முடியாது. குணத்தினால் தான் கருத முடியும்.

இராவணன் ஒரு பிராமணன். பிரம்மனின் பேரன் என்கிறது வரலாறு, சாமவேதம் படித்தவன், இருந்தும், மாற்றான் மனைவியைக் கற்பழிக்க ஆசை கொண்டதால் அழிக்கப்பட்டான்.

தீண்டத்தகாதவன் என அழைக்கப்பட்ட குகனையும், சுக்ரீவனையும், இராவணன் தம்பியான வீடணனைத்தன் சகோதரர்களாகக் கொண்டு இராமபிரான் ஏற்கெனவே வாழ்ந்து காட்டியுள்ளாரே! இதனால் உயிர்களிடத்து கருணை உடைய எந்த மனிதனும் அந்தணனே என உணர்க, அதனால் நாம் அனைவரும் ஒரே ஜாதி, ஒரே இனம் சேர்ந்தவராவோம்.

மேலும் இக்கட்டுரையை விரிக்கின் நீளும் எனக் கருதி இத்துடன் முற்றுப்பெறச் செய்கிறேன்.



சம்பந்தர்

# 15. சம்பந்தரின் தமிழ்ப்பாடல் செய்த அற்புதம்

உமையவளிடம் கபாலம் ஏந்தியகையனாய்க் காட்சி கொடுத்து ஆட் கொண்ட பெருமானை 'கபாலி' எனும் பெயரால் அழைக்கப்பட்டது, ஞானசம்பந்தரது காலத்தில்தான்.

திருஞான சம்பந்தர் திருமயிலையில் பாடிய பாடல்களிலும் கபாலீஸ்வரரையே முதன்மையாக வைத்து பாடியுள்ளார். கற்பகவல்லி மீது சம்பந்தர் இலக்கியம் படைத்ததாக தெரியவில்லை. சம்பந்தரது காலத்திலேயே வாழ்ந்த திருநாவுக்கரசரும் கற்பகவல்லி மீது பாடல்கள் புனைந்ததாகத் தெரியவில்லை. அதன் பின்னர் 20ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் சக்திவழிபாடு மிகுந்ததால், கற்பகவல்லி மீது பாடல்கள் புனையும் பழக்கம் ஏற்பட்டது என அடியேன் கருதுகிறேன்.

ஞானசம்பந்தர் மயிலையில் மறைந்த பூம்பாவையை உயிர்பித்ததாக கூறப்பட்ட செய்திகள் அறியப்பட்டதும், பலருக்குச் சந்தேகம் தோன்ற வாய்ப்பிருக்கும். இதில் ஒன்றும்வியப்பில்லை. இப்படியும் நடந்திருக்க முடியுமா? இதை ஏற்றுக் கொள்ளக் கூடியதா? எனக் கருதுபவர்களை, ஆன்மீகச் சக்கரம் சுழல ஊற்றப்படும் எண்ணைக்கு நிகரானவர்கள் எனக் கருதுகிறேன். இதுபோன்ற ஐயங்களை நிவர்த்தி செய்யும் வகையில், பிற்காலத்தில் வந்த மகான்கள் உறுதிபடுத்தியுள்ளனர்.

அண்மையில் 1908 முதல் 1921 வரை, மயிலையில் ஸ்ரீராமகிருஷ்ணமடத்தில், இராமகிருஷ்ணரின் ஆன்மீகப் புதல்வர் எனப் போற்றப்பட்ட சுவாமி பிரம்மானந்தர் மயிலையில் தங்கி மடத்தில் பணியாற்றி வந்தவர். ஒருநாள் மடத்தில் பஜனை நிகழ்ந்து கொண்டிருந்த சமயம்,தம்மை மீறி ஆன்மீகப் பரவசத்தில், சுவாமி பிரம்மானந்தர் ஆடிக்

கொண்டிருந்தார். அப்பொழுது அவருக்கு தெய்வீகக் காட்சியொன்று தோன்றியது.

மயிலை கபாலீஸ்வரர் குளக்கரையில் அங்கே எலும்புக்கூடு ஒன்று கிடந்தது, சுவாமிகள் அதனை பார்த்துக் கொண்டிருக்கும் போதே அந்த எலும்புக்கூடு ஒரு பெண்ணாக உருப்பெற்று எழுந்து ஆலயத்துள் சென்ற காட்சியைக் கண்டார்.

தமது அன்பர்களிடம் இதுபோன்று காட்சியொன்று, யான் பரவசநிலையில் ஆடிக் கொண்டிருக்கும் போதே கிடைத்தது, அது என்ன என்று எனக்குப் புரியவில்லை எனவியந்தார். காரணம் இவருக்கு பூம்பாவை வரலாறு தெரிந்திருக்க வாய்ப்பில்லை.

அது சமயம் அங்கிருந்தோர் பூம்பாவை நிகழ்ச்சியைப் பற்றிக் கூறக் கேட்டதும், கண்ணீர் மல்கி பரவசமுற்றார். இந்நிகழ்ச்சி அண்மையில் நிகழ்ந்ததொன்றாகும். அதுபோன்று தான் ஞானசம்பந்தர் நிகழ்ச்சியையும் கருதுதல் வேண்டும் இத்தகு அற்புதங்கள் உண்மையில் நிகழ்ந்ததா? நிகழ்ந்திருக்குமோ? என்ற ஆராய்ச்சியில் காலத்தை வீணாக்குவதை விடுத்து, அவற்றில் பொதிந்துள்ள ஆன்மீகப் பயன்பாட்டைத் தேடி வெளிப்படுத்துவதையே அறிஞர்கள் தன் கடமையாகக் கருதிடல் வேண்டும்.



பூம்பாவை சம்பந்தர் சிவநேசர்

# 16. செயற்கரிய செல்வர் ஞானசம்பந்தர்

குழந்தையாய் இருந்தபோதே, சீர்காழி, குளக்கரையில் உமாதேவியாரால் பொற் கிண்ணத்தில் கொடுத்த பாலை உண்ட திருஞானசம்பந்தர், திருக்கடைக்காப்பு பாடி அருளினார் என்பது யாவரும் அறிந்ததொன்றே.

உமாதேவியார் பொற்கிண்ணத்தில் பாலோடு ஞானத்தையும் கலந்து அருளினார் என்பதனை அருணகிரியார், 'பகர்தற்கரிதான" எனத் தொடங்கும் பாடலில் 5வது அடியில் கீழ்கண்டவாறு பாடியுள்ளதைக் கவனித்தால் விளங்கும்.

'நுகர்வித்தகமாகும் என்று உமைமொழியில் பொழி பாலையுண்டும்
நுவல் மெய்ப்புள பாலன் என்றிடும் - இளையோனே'

பாடலின் கருத்து : இது ஞானத்தைத் தரும் என உமாதேவியார் மொழிந்து தந்த பாலை உண்ட, சொல்லப்படும் மெய்ப்பு நிறைந்தவனுமான குழந்தை எனப்படும்.

அடியேன் கடந்த ஆண்டு சீர்காழி சென்றிருந்த சமயம், நல்லூர்ப் பெருமணம் சென்று இறைவனை தரிசிக்கும் வாய்ப்பு கிட்டியது. இத்தலத்தில்தான் ஞானசம்பந்தருக்குத் திருமணம்நிகழ்ந்ததாக வரலாறு கூறுகிறது. முன்னமேயே அங்கு நிகழ்ந்த வரலாற்றினை ஆன்றோர்கள் கூறக் கேட்டுள்ளேன். ஞானசம்பந்தர் திருமணச்சடங்கு முடிவடைந்ததும், மணமகளோடு இங்கு கோயில் கொண்டிருக்கும் இறைவன் சந்நிதானத்துக்குச் சென்று யாகம் வளர்த்துத் தம்மோடு வந்த எல்லோரையும் எந்த வித்தியாசமும் பாராது, யாக குண்டத்தில் புகும்படி விண்ணப்பித்தார். அது சமயம், கோயில் அருகில் உள்ள

மண வீட்டிலிருந்து அழுகைக்குரல் கேட்டதும், தம் அருகில் இருந்தோரைக் காரணம் தெரிந்து வரும்படி சொன்னார். அப்பெண் அன்று வீட்டுவிலக்கு நேரிட்டதால், தானும் சோதியில் கலக்க இயலாமையைக் குறித்து கண்ணீர் விடுவதாகச் சம்பந்தரிடம் கூறினர்.

உடனே சம்பந்தர் அப்பெண்ணை யாகம் வளர்த்த இடத்திற்கு வரச்சொல்லி, சிறிய அகலில் திரியையிட்டு ஏற்றி அவள் கையில் கொடுத்து, தன் கமண்டலத்திலிருந்து கொஞ்சம் சொட்டு நீரை எரியும் சுடரில் விட்டார். உடனே அணைந்து விட்டது.

பிறகு தன் கமண்டலத்திலிருந்த எஞ்சிய நீர், அனைத்தையும், யாக குண்டத்தில் கொழுந்து விட்டு எரியும் தீயில் விட்டார். யாகத் தீயில் விட்ட நீரானது ஆவியாக சுவறிப் போய் விடுகிறது. சிறிய தீயை சிறு துளி நீரோ அணைத்து விடுகிறது. ஆனால் பெருந்தீயில் விட்ட நீரானது சுவறிப் போய் விடுகிறது. இதைப் போன்றே இறைவனாகிய பரம்பொருளே அருட்பெருஞ் சோதி அண்ட பேரண்டத்திற்கும் நீண்டு எழு அகண்ட ஜோதியூகும். அதில் மாதவிலக்குத் தீட்டுகள் எல்லாம் சுவறிப் போகுமே ஒழிய, அந்த அகண்ட பரிபூர்ண ஜோதியானது எந்த விதத்திலும் பாதிக்கப்படாது. அதனால் நீ இங்கு எழுப்பப்பட்டுள்ள யாகவேள்வியில் எவ்வித அச்சமோ, கவலையோயின்றி, இங்குள்ள திருக்குளத்தில் மூழ்கி, பஞ்சாட்சரத்தை உச்சரித்துக் கொண்டே, ஜோதியில் புகுக என ஞானசம்பந்தர் கூறினார். அவரின் சொற்படியே அப்பெண்ணும் எல்லோருடனும் சேர்ந்து முத்தி பெறுகிறாள்.

இதனை உறுதி செய்யும் வகையில் நல்லூர்ப் பெருமணம் புராணப்பாடல் ஒன்று நமக்குப் பேருதவியாக அமைந்துள்ளதைப் பார்ப்போம்.

"பொழில் புடை சூழ்ந்த திருப்புகலி கவுணியர்தம்
குலத்து தித்த புனிதர் அந்த
எழில் மருவு காரிகைதன் முகம் நோக்கிப் பெருநெருப்
பிற்கு ஈரம் இன்றாம்
செழுமையும், ஐந்தெழுத்தின் உருவதுவாம் இனைய
நெடும்நீர்தம் மூழ்கி
தழல் வடிவாய் விளங்கு பெருஞ்சோதியிடைப் புகுதி
யெனச் சாற்றினரால்"

என்பதாகும். மேலும் சம்பந்தரின் சிறப்பைக் குறித்து "கொள்ளை கொள்ள விடுதலிக்கூற்றை பிடர் பிடித்து தள்ளுந் திருஞான சம்பந்தர்" என்பதாக நால்வர் நான்மணி மாலையில், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் புகழ்கிறார்,

இவ்வரிய செயலைக் குறித்து,

வினையரும் புகலிக்கின்ற மணப்பந்தர், விருந்தினுக்கு
தவிலேன் - முந்திற்று (எனவே)
உனையிரந்திடுவான் வந்தனன் பத நீ, உதவி என்பதுயர்
ஒழித்தருள்வாய்.

எனவும் பாடியள்ளதைக் கவனிக்கவும்.

பாடலின் கருத்து: சம்பந்தர் முத்திச் ஜோதியில் எல்லோரையும் புகுவிக்கும் போதுமட்டும், அங்கே தான் இருந்திருந்தால், என்பதே அந்தச் சிந்தனை, அப்போது நான் பிறக்காது போய் விட்டேன். பிறந்திருந்தால் இன்று உன்னைத் தொந்தரவு செய்திருக்க மாட்டேன் என்பதாகும்.

மேலும் ஒரு பாடல் இதனை உறுதி செய்ய, அண்மைக் காலத்தில் வாழ்ந்த இராமலிங்க அடிகளார் பாடிய பாடலையும் கவனிப்போம்.

"எங்கோவே யான் புகலி எம் பொருமான் தன் மணத்தில்
அங்கோர் பொருட் சுமையாள் ஆனேனேல் - இங்கே நின்
தாள் வருந்த வேண்டன்தடைப்பட்டே னாதலினால்
நான் வருந்த வேண்டுகின்றேனான்"

என சிவநேசவெண்பாப் பகுதியில் 42வது பாடலில் பாடியுள்ளார்.

இதன் கருத்தைப் பார்ப்போம் : ஞானசம்பந்தர் திருமணத்தில் விறகு எடுத்துச் செல்லும் ஒரு பணியாளனாகவாவது இருந்திருக்கக் கூடாதா? எனக்கும் அது சமயம் முத்தி கிடைத்திருக்குமே. இல்லாது போனதாலே தினந்தோறும் உன்னை வருந்தித் தொந்தரவு செய்கிறேன் யான் என ஒற்றியூர் இறைவனிடம் விண்ணப்பிக்கிறார்.

சுமார் 1300 வருடங்களுக்கு முன்னரே, ஞானசம்பந்தப் பெருமான் தன்னுடன் கலந்து கொண்ட எல்லா மக்களையும், யாகம் வளர்த்து, அச்சோதியில் புக, செயல்முறையில் செய்து காட்டிய நிகழ்ச்சியின் அறிகுறி தான், இன்றைய நாளிலும் ஆடி மாதங்களில், பக்தர்கள் சக்தி வழிபாட்டின் அடிப்டையில் உபவாசமிருந்து தீமிதி விழாவாகக் கொண்டாடி வரப்படுகிறதோ? எனக் கருதவாய்ப்பளிக்கிறது.

ஜாதிமத வேறுபாடு இல்லாமல், நாடி வந்தோர் அனைவருக்கும் பேரின்ப முக்தியளிப்பது, சரித்திரம் படித்திராத, கேட்டிராத செய்தியாகும். அதனால் இவரை (சம்பந்தரை) "செயற்கரிய செல்வர் திருஞானசம்பந்தர்" எனப் புகழ்வதில் பிழை என்ன இருக்கப் போகிறது.

"நறும்பொழிற் காழியுள் ஞான சம்பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத்தானை
உறும் பொருளாற் சொன்ன வொண் தமிழ் வல்லார்க்
கறும்பழி பாவம் அவலம் இலரே"

எனத் துதி செய்து கொண்டு இக்கட்டுரையை நிறைவு செய்கிறேன்.

# 17. அப்பரும் அருணகிரியாரும்

அப்பரை நடுக்கடலில் தள்ளியபோது, பஞ்சபூதங்களில் ஒன்றான நீரினால் தாங்கப் பெற்ற கல்லையே தெப்பமாகக் கொண்டு கரையேறிய வரலாற்றினை யாவரும் அறிந்ததே. அதே போன்று, அருணகிரியாரும், திருவண்ணாமலை கோபுரத்தினின்று விழுந்தபோது, இறவாது (பஞ்சபூதங்களில் ஒன்றான) நிலத்தால் தாங்கப் பெற்று உய்ந்தனர்.

அப்பரை, சிவன் திருமறைக் காட்டிலிருந்து திருவாய்மூருக்கு வாவென அழைத்தது போன்று, முருகப்பெருமானும் அருணகிரியாரை வயலூரிலிருந்து, விராலிமலைக்கு வாவென அழைத்துள்ளார். இதனைக் குறித்து, "அடியேனை, விராலிமலையில் நிற்பம் நீ கருதியுற்று வாவென அழைத்து என் மனதாசை மாசினை அறுத்து, ஞான முதளித்த வாரம் இனி நித்தம்-மறவேனே" எனத்தமது பாடலில் பாடியுள்ளார்.

மூவரில் அப்பரது பாடலுக்கு மட்டுமே தேவாரம் என அழைக்கப்பட்டது போன்று அருணகிரியாரை மேலை வயலூர் எனும் செய்ப்பதியில் உள்ளோம், அங்கு உமக்கு நித்தம் எமைக்குறித்து பாடும் திறத்தை அளிப்போம் என பொய்யாபிள்ளையாரே அனுக்கிரகித்து அன்னாரது பாடல்களுக்கு திருப்புகழ் எனும் தலைப்பு தந்ததைக் குறித்து "பக்தரை விசித்ரமணி" எனும் பாடலில் 4வது அடியில், 'விருப்போடு செய்ப்பதியும் வைத்து உயர்திருப்புகழ் செப்பென' அருளியதை கவனிக்கற்பாலன.

திருவீழிமிழலையில் பஞ்சம் நேர்ந்த போது, அப்பருக்கு சிவனால் படிக்காசு (பஞ்சத்தைப் போக்க) அருளியது போன்று அருணகிரியாருக்கும் முருகன் சென்னிமலையில்

படிக்காசு பெற்ற வரலாற்றினைக் குறித்து, "சென்னிமலை முருகன் காதல்" எனும் பாடல் உறுதி செய்துள்ளது.

அப்பர் சரியை மார்க்கத்தைப் பின்பற்றி, எல்லாத் தலங்களுக்கும் சென்று உழவாரப் பணி ஆற்றியது போல் அருணகிரியாரும் தலங்கள் தோறும் சென்று முருகப்பெருமானைத் தொழுது திருப்புகழ் பாடலினால் போற்றி செய்துள்ளார். அன்னாரது திருப்புகழில் -

"பூர்வ பட்சிம தட்சிண உத்தரதிக்குள
பக்தர்கள் அற்புதம் என ஓதும சித்ரகவித்துவ
சத்தமிகுந்தத திருப்குழை சிறி தடியேனும் செப்பென
எனக்கு - அருள்வோனே!

வேறொரு பாடலின் மூலமும், "விருப்போடுன் சிகரமும் வருகிலன் எனக்குறிப்பிட்டு கொண்டதும், "குற்றவேல் அடிமை செயும் வகை அருளாதோ" என முருகனிடம் குறைப்பட்டுக் கொள்வதை அறிய முடிகிறது.

அப்பர், அப்பூதி அடிகளிடம் அன்பைக் காட்டி வந்தது போல் அருணகிரியாரும், தமது சிந்தையில் பழநிப் பெருமான் வீற்றிருக்கப் பெற்ற பக்தனான கலிசை சேவகனாரை மிகவும் நேசித்து பலவாறு பாடியும், அவர் பணிந்து வந்த வீரைநகர் வாழ்பழநிப் பெருமானைப் போற்றியும், முருகா! நீ கலிசைச் சேகவனது இதயத்து வீற்றிருப்பதை ஒரு பெருமையாகக் கொண்டிருக்கிறாய் எனப் பொருள்படும்படி

"வீறு கலிசை வருசேவ கனிதத்தில்
மேவும் ஒரு பெருமையுடையோனே"

எனத் திருப்புகழ் பாடலின் மூலம் பாடியுள்ளது கவனிக்கற்பாலன. மேலும். "கலிசை வருகாவேரி சேவகனெடன்பு-பிரிவோனே" மற்றுமோர்பாடலில் பாடியுள்ளார்.

அப்பர் திருச்சத்திமுற்றத்தை அடைந்து "கோவாய்முடுகி" எனும் பதிகம்பாடி, இறைவனது அடிச்சுவட்டை தன்முடிமேல் பொறித்தருள வேண்டுகிறார். அதற்கேற்ப நல்லூர் சேர்ந்ததும், அவரது வேண்டுகோள் நிறைவேற்றப்பட்டது.

அதுபோன்று, அருணகிரியாரின் வேண்டுகோளுக் கிணங்கி, சுவாமிமலையில், "தலைகயாதெனக்குன் அடிசரணம் வைத்த தனி ஏரகத்தின் முருகோனே" எனப் பாடியதிலிருந்து அறியப்படுகிறது.

மேலும் திருவேட்களத்தில் பாத தரிசனமும், சட்சதீட்சையும் செய்து ஆட்கொண்டதைக் குறித்து அப்பர் பெருமான் ஆற்றிய சரியைக்கு ஒப்பாக அருணகிரியாரும் வாழ்ந்து காட்டியதை, தமது திருப்புகழில் "மறவாதுன் நாமம் புகழ்பவர்பாதம் தொழ, 'இனி நாடும் படி அருள்புரிவாயே" எனவும் "உமக்கு அடிமைபடுவர் தொண்டு புரிவேனே" என்றெல்லாம் பாடியுள்ளார்.

பெண்ணாடகத்தில் உள்ள தூங்கானை மாடத்து இறைவன், பூதக் கணங்களால், அப்பரது தோளில் இடபக்குறியும், சூலக்குறியும் பொதிக்கப் பெற்றார். அதே போல் குற்றாலத்தில் முருகன் அருணகிரியாரது கனவில் தோன்றி வேல் மயில் பொறிகளை தோளில் பொறித்து மறைந்ததும், எழுந்து பார்த்த போது தமது தோளில் வேற் பொறியையும் மயில் பொறியையும் இருக்கக் கண்டு

> "அடைக்கலம் பொருளாம் நாயெனை அழைத்து
> முக்தியதாம் அனுபூதி என் அருட் திருப்புகழ்
> ஓதுக, வேல் மயில் அருள்வோனே".

எனக் குற்றாலத்தில் திருப்புகழில் பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

அப்பர், சிவனைக் குறை கூற நிந்தாஸ்தியாக பாடியதற்கேற்ப, அருணகிரியாரும் திருப்புகழில் பாடியுள்ளதைக் கவனிக்கலாம்.

"கங்கை செஞ்சடை வைப்பதுமன்றி
அங்கையில் அனல் ஏத்துதல் அழுக்கே"

எனும் பாடலால் அப்பரைத் தழுவியே பாடியுள்ளதைக் கவனிக்கலாம்.

மேலும், அருணகிரியார்,

"இறைவா எதுதா அதுதா தனையே
இணை நாகையில் வாழ் பெருமாளே"

எனப்பாடியுள்ளதை ஒப்பிட்டுப் பார்த்தல் சிறப்பு

அடியேன் இத்துடன் நிறைவு செய்கிறேன்.



அப்பர்

# 18. சுந்தரரும் அருணகிரியாரும்

சகமார்க்கத்தில் நண்பனாய் அன்பு செலுத்தி, இறைவனை அடைந்தவர் சுந்தரர். சுந்தரர் தோழமை மார்க்கத்தில் வாழ்ந்ததைப் போல், அருணகிரியாரும் முருகனிடத்தில் தோழமை மார்கத்தில் வாழ்ந்தவராவார் என்பது இவரது பல பாடல்களினின்றே அறியமுடிகிறது.

"நாடா பிறப்பு முடியாதோ" எனத் தொடங்கும் பாடலில், 6வது அடியில் "தூயா துதித்தவர்கள் நேயா எமக்கமிர்த தோழா" என்று பாடியுள்ளதிலிருந்தும், முருகனிடம் தாம் தோழமை பாவத்தின் அடிப்படையிலும், மற்றுமொரு பாடலில்,

இருநோய் மலத்தை சிவொளியால் மிரட்டியெனை
யினிதாவழைத்து எனது முடிமேலே
இணைதாளளித்துனது மயில்மேல இருந்தியொனி
ரியல் அளித்து மகிழ் - இருவொரும்
ஒருவாக - உபதேசிக்கப் பதமும் அருள வேண்டும்

எனும் தோழமை பாவத்தில் பாடியுள்ளதும் நோக்கத்தக்கது.

சுந்தரர் தாம் பாடிய திருப்பாசுரத்தில், நிந்தாஸ்துதியாக,

"மீளா அடிமை உமக்கே ஆளாய் பிறரை வேண்டாதே
மூளாத்தீபோல் உள்ளேகனன்று முகத்தால் மிகவாடி
ஆளாயிருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங்கிருப்பீர் திருவாரூரீர் வாழ்ந்து போதிரே"

எனப் பாடியுள்ளதைப் போன்று, அருணகிரியாரும்

"பாழ்வாழ் எனுமிப் படுமாயையிலே
வீழ்வாய் என என்னை விதித்தனையே -

தாழ்வானவை செய்தன தாம் உளவோ
வாழ்வாய் இனி நீ மயில் வாகனனே"

எனக் கந்தரனூபூதியிலும்

"ஏழைகள் வியாகுலம் இதேதெனாவிலுணை
ஏவர்புகழ்வார் மறையும் என் சொலாதோ"

என பழநித்தலத்து திருப்புகழ். "ஆறுமுகம் ஆறுமுகம் ஆறுமுகம்" எனத் தொடங்கும் பாடலிலும், 'நகைத்தவர் கண்கள்காண பாதம் வைத்திடையா" எனத் தொடங்கும் பாடலிலும், 'தெரித்தெனை தாளில் வைக்க ஞநயே மறுத்திடில் பார் நகைக்கும் ஐயா' எனவும் தொடங்கும் பாடலிலும் பாடியுள்ளதை நோக்கின், நேச பாவத்தின் உரிமையில் முருகனிடத்தில் விண்ணப்பித்துள்ளதைப் பார்க்கலாம்.

மேலும் தொடர்ந்து, 'கருணை புரியாதிருப்பதென குறை இவ்வேளை செப்பு" என நேசபாவத்தின் அடிப்படையில் முருகனிடம் விண்ணப்பித்தும்,

"தருணமிதையா, கனமதுரு நீள் கவுக்யசகலசெல்வ
யோகமிக்க பெருவாழ்வை அருளவேண்டும்'

எனவும் உரிமை கொண்டாடியுள்ளதைக் கவனிக்கற்பாலது.

சோமாசிமாறநாயனாரது யாகத்தில், இறைவனை வரவழைத்து காட்டிய சுந்தரரைப் போன்று, அருணகிரியாரும், பிரபுடதேவராஜனும், ஏனையோர் முன்னிலையிலும் காணவும், சம்பந்தாண்டான் வெட்கித் தலைகுனியவும் முருகப்பெருமானை திருவண்ணா மலையில் கம்பத்திலிருந்து வரவழைத்துக் காட்டினார். இதற்கு ஆதாரமாக,

"அதலசேடனாராட அகிலமெருமீதாட
அபினகாளிதானாட, அவளோடு அன்று
அதிரவீசுவாதாடும், விடையிலேறுவாராட
அருகபூவேதாளமவையாட
மதுரவாணிதானாட, மலரில் வேதனாராட
மருவுவானுளோராட - மதியாட
வனசமாமியாராட நெடியமாமனாராட
மயிலுமாடி நீயாடி வரவேணும்"

எனும் பாடல் உறுதி செய்கிறது,

சுந்தரர், சிவனை "பித்தா பிறைசூடி பெருமானே" என முதற்கண் பாடியது போன்று, அருணகிரியாரும் முருகனை விளித்து,

"கனகனே, பித்தர் புதல்வனே
மெச்சு கடவுள் பச்சைமயிலோனே"

எனத் திருப்புகழ் பாடலில் அன்னாரும் சிவனை பித்தனென்றே கருதிப் பாடியுள்ளதின் நயத்தைப் பார்க்கலாம். "தந்தபசிதனையறிந்து" எனத் தொடங்கும் பாடலில்

"அந்தகனுமெனையடர்ந்து வருகை யினில்
அஞ்சல் என வலிய மயில்மேல் நி அந்த மறலியாடு
உகந்த மனிதன், நமதன்பன் என மொழிய வருவாயே'

என தோழமை பாவத்தில் பரவிப் பாடியுள்ளார். சுந்தரரும் சிவனை தோழனாகப் பாவித்து பாடி வந்ததைப் பொருத்தி பார்க்க முடிகிறது. இவற்றிற்கும் மேலாக பிரிதோரிடத்தில் "இருவோரும் ஓர் அந்தமருவிஞானமாவிஞ்சைமுதுகுனேறி லோகங்கள் வலமதாட அருளவேண்டும்" என "ஞானங்கொள் பொறிகள்கூடி" எனத் தொடங்கும் பாடலில் தோழமை பாவத்தில் முருகனிடம் உரிமை கொண்டாடியது மிகவும் சிறப்பு.

சுந்தரரைப் போன்று யோக மார்க்கத்தையும் பின்பற்றியதை திருப்புகழ் பாடல்களில், "யோகத்தாறு உபதேசத்தேசிக" எனவும், "யோகத்தாறு மெய்ஞானத்தை போதிடாது" என்பனவாகவும் "சிவயோகமெனும் குருத்தையறிந்து முகமாலுடைக் குருநாதன் சொன்ன கருத்தை" கந்தரலங்காரப் பாடலாலும் அறிய முடிகிறது.

சுந்தரரை, சிவன் தனக்கு அடிமை என மக்களறிய உணர்த்தியது போன்று, அருணகிரியாரும் சிவன் அடிமை கொண்டதை, 'எனை அடிமை கொண்ட சுவாமி" என திருப்புகழ் பாடலாலும், "சதாசிவக் கடவுள் எந்தையர்" என்ற பாடலின் அடியினாலும் தெரியமுடிகிறது.

அதோடன்றி, கருவில் உதித்த திருவாக முருகனையே போற்றி செய்யு அருணகிரியாரையும் அடிமையாக ஏற்றுக் கொண்டதற்கு, அருணகிரியார் கிளியுருவில் இருந்து பாடிய திருவகுப்பு எனும் பகுதியில், முதல் வகுப்பாகிய "சீர்பாதவகுப்பு" எனும் பாடலின் 8வது அடியில்,

"முடியவழி வழியடிமை எனுமுரிமையடிமை முழு
துலகறிய மழலைமொழி - கொடுபாடுமாசுகவி
முதலமொழிவன நிபுணமதுபமுகரிதமவுன
முகுளபரிமளநிகில தவிமாலைசூடுவதும்"

உன் மனநாறு சீறடியே எனப் பாடியுள்ளார்.

'கடனுனதபயம் அடிமையுனடிமை" என, 'எழுகடல்மணலை' எனும் பாடலிலும், மற்றொரு பாடல் "திமிரவுததி" எனும் பாடலிலும் "நின் அருளதருளி யெனையுமனதொடடிமை கொளவும் வரவேணும்" என முறையிட்டுக் கொண்டுள்ளது கவனிக்கற்பாலது.

சுந்தரர் கண்பார்வையை இழந்ததும், பார்வைபெற நிந்தாஸ்துதியா "மீளா அடிமை" எனும் பாடலைப் பாடியது யாவரும் அறிந்ததொன்றே. சுந்தரர் இத்தகு கொடுமை

அனுபவித்ததை அறிந்திருந்த அருணகிரியாரும் அவ்வாறு நேரிடாவண்ணம் முருகனிடம், தன் கண்பார்வை குன்றா வண்ணம் நிந்தா ஸ்துதியாகப் பாடாது தாழ்மையுடன், "இடர்கள் படுகுருடனெனை அடிமைகொள மகிழ்வொடுனது இருநயன கருணை சிறிது - அருள்வாயே" என்று விண்ணப்பத்துள்ளதில் இருந்து முருகனது அழகைக் கண்ணாரக் காண கண்பார்வை குன்றாது அருள வேண்டுகிறார் என்பதை அறியமுடிகிறது. இதனால் இதுகாறும் கண் இருந்தும் அழியக்கூடிய காட்சிகளைக் காணுவது தவிர்த்து, இறைவனது அழகைக் காண, அருணகிரியார் முருகனிடம் தாழ்மையுடன் விண்ணப் பித்தது போன்று நாமும் காலையில் எழுந்ததும், பல் துலக்கி, முகம் கைகால் அலம்பி நீறிட்டு, முருகனது படத்துக்கு எதிரே மேலே கூறப்பட்ட பாடலை ஓதி பயன்பெற முயல்வோமாக.



சுந்தரர்

# 19. மாணிக்கவாசகரும் அருணகிரியாரும்

மாணிக்கவாசகருக்கு திருப்பெருந்துறையில் காலைக் காட்டி ஆட்கொண்டருளியது போல், அருணகிரி யாருக்கும், சுவாமி மலையில் முருகன் காலைக்காட்டி ஆட்கொண்டதை

"செகமாயையுற்ற" எனும் திருப்புகழில்

"தகையாதெனக்குனடிகாணவைத்த
தினியோரகத்தின் - முருகோனே"

என 7வது அடியிலும், கொடுங்குன்றம் (பிரான்மலை) திருப்புகழில்

"மட்டற்ற இந்திரி
சட்டைக்கு ரம்பையழிபொழுதினினும்
அருள்முருக, சுத்தக்கொடுங்கிரியு
னிர்த்தச்சரண்களை - மறந்திடேனே"

"களபமுலை' எனத் தொடங்கும் திருப்புகழில்,

இபமாமுகவனுக்குகந்த இளையவ
மருக்கடம்பு என தலையில் பதங்கள் - அருள்வோனே"

என்று 5வது அடியில் பாடியுள்ளதையும் கவனிக்கத்தக்கது.

மணிவாசகரை காலைக்காட்டி ஆட்கொண்டது போன்று அருணகிரியாரையும், "பிறவிஅலை ஆற்றினில்" என்னும் பாடலில் 3,4வது அடியாகிய "உறுதிகுருவாக்கிய பொருளாளே - உனது பத காட்சியை தருவாயே" என பாடியுள்ள ஒற்றுமை நயத்தை காணலாம்.

மாணிக்கவாசகர் அருளிச்செய்த தேனினும் இனிய திருவாசகம் போன்று, செந்தமிழ்ச் சுவைச் சொட்டும் கந்தரலங்காரப்பாடலையும், திக்கோவையாருக்கு இணையான எளிதில் பொருள் விளங்காத கடின முறையில் கந்தரந்தாதியும் அருணகிரியார் பாடியருளினார்.

மணிவாசகர் சட்சதீட்சையும், பாதத்தரிசனமும் திருப்பெருந்துறையில் பெற்றதற்கேற்ப அருணகிரியாரும் 'சதுரத்தரை' எனும் திருவேட்களம் தலத்துப் பாடலில் :

"சரணக்கழல்காடியெனாணவ
மலமற்றிடவாட்டி ஆறிருதோளொடு - முகமாறும்
கதிர்சுற்று நோக்கிய பாதமு
மயிலிற்புற நோக்கயினானமென
கருணைக்கழல் காட்டிய கோலமும் - அடியேனை
கதிபெற்றிட நோக்கிய பார்வையும் - மறவேனே"

எனப் பாடியதிலிருந்து, முருகனது பாததரிசனமும், சட்சதீட்சையும் பெற்றவராவார் என அறியமுடிகிறது.

"வேண்டத்தக்கது அறிவோய் நீ
வேண்ட முழுதும்தருவோய் நீ" -

என மணிவாசகர் பாடியதற்கேற்ப, அருணகிரியாரும், "வீழுதூதெனவே" எனும் திருப்புகழில்,

"இறைவா, எதுதா அதுதா தனையே
இணைநாகையில் வாழ் - பெருமாளே"

எனச் சுருங்கச் சொல்லி விளங்கவைத்து பாடியுள்ளது இன்புறற்பாலது.

சிவனே, திருவாதவூரரை "மாணிக்கவாசக" என அழைத்ததுபோல், அருணகிரியாரை, முருகனும் "நாதன்" எனும் பட்டதைச் சூட்டி அருளியதை, 'கலகவிழிமாமகளிர்" எனும் திருப்புகழில், "அருணகிரிநாத எனும் அப்பனே போற்றி" எனப்பாடியுள்ளதைக் காணலாம்.

மணிவாசகர் தில்லையில் இறைவனோடு இரண்டறக் கலந்தது போன்று, அருணகிரியாரும் இரண்டறக் கலந்து வாழ வேண்டி 'அறுகுநுனி" எனும் திருப்புகழில் கடைசி அடியினில்,

இருவினைமுமமுமற இறவியொடு பிறவியற
ஏகபோகமாய் நீயும் நானுமாய்
இறுகும் வகை பரம சுகமதனை - அருள்'

எனவும், "நாவேறு பாமணத்த" எனும் மற்றோர் பாடலில்,

"நீவேறானாதிருக்க நான் வேறனாதிருக்க
நேராக வாழ்வதற்குன் அருள்கூற"

என முறையிட்டுக் கொண்டதில் உள்ள ஒற்றுமை உணரற்பாலது.

மணிவாசகர், "நானேயோ தவம் செய்தேன்" எனும் திருவாசகத்தில் "சிவபெருமான் தானே வந்து எனதுள்ளம் புகுந்து அடியேற்கு.... எனப் பாடியதற்கேற்ப,

அருணகிரியாரும், கந்தரலங்காரப்பாடலில், 'தடுங்கோள் மனத்தை எனத் தொடங்கும் பாடலில், "வேல் விடுங்கோன் அருள் வந்துதானே உமக்குவெளிப்படுமே" என அறுதியிட்டு உறுதியாகக் கூறியுள்ளது மிகவும் இன்புறற்பாலது.

மணிவாசகர் புத்தர்களை ஊமையாக்கியடக்கி வென்றதுபோல் அருணகிரியாரும் வில்லிபுத்துராரையும் சம்பந்தாண்டானையும் வாதில் வென்றவர் ஆவார்.

மணிவாசகரது திடப்பக்திக்கு, "பால்நினைத்தூட்டும்" என்னும் பாடலில் "சிக்கெனப்பிடித்தேன் எங்கெழுந்து அருளுவது இனியே" என மனஉறுதியோடு பாடியுள்ளதற்கேற்ப, அருணகிரியாரும், திருப்புகழ் "தோரணகனக" எனும் பாடலில் 4வது அடியில்

"வாழினும் வறுமை கூறினும்
நினது வார்கழல் ஒழிய - மொழியேனே"

எனதிடமுற பாடியுள்ளார். இதனால் இருவரது குறிக்கோளும் ஒத்துள்ளது கவனிக்கத்தக்கது.



மாணிக்கவாசகர்

# 20. திருமூலரும் அருணகிரியாரும்

63 நாயன்மார்களுள் ஒருவரான திருமூலநாதருக்கும், அருணகிரியாருக்கும் உள்ள ஒற்றுமை நயங்களைக் காணலாம்.

இருவருமே இறைவன்பால் திருவடிதீட்சையும், சட்சதீட்சையும் பெற்றவராவார்கள் என்பது இவர்களது வரலாற்றில் அறிய முடிகிறது.

இவ்விருவரும் நாதன் எனும் பட்டம் இறைவனால் அளிக்கப்பட்டவராவார்கள் என்பது இவர்களது பாடல் களிலிருந்து காணலாம். இருவருமே மெய்ஞானப் பெரியோர்களாகவும், தவசிரேஷ்டர்களாகவும், கருணை யாளர்களாகவும், வேதாகம சாத்திரத்தை தமிழ்நூல் வாயிலாக உலகுக்கு உணர்த்தியவராவார்கள். இருவருமே இறைவன் பெறுவதற்காகாவே தமிழ்பாக்களை பாடினார்கள்.

அருணகிரியார்,

"யாமோதிய கல்வியும் எம்மறிவும்
தாமேபெற வேலவர்த்ந்ததினால்"

என்று கந்தரனுபூதிபாடலில், வேலவர்தம் பெறுவதற் காகவே அடியேனுக்கு கல்வியையும் அறிவையும் அவர் பயன் பெறுமாறே செலவிடுவேன் என்று கருத்தமைத்து பாடியதற்கு ஏற்ப, திருமூலரும் தாம் பாடிய

"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே"

என்று திருமந்திரம் பாடலோடு ஒப்பிட்டுப் பார்த்தால், நயம் விளங்கும்.

திருமூலர் தமது உடலை விட்டு ஆயன் உடலில் புகுந்த பின்னரே மந்திர நூலைப் பாடினார். அருணகிரியார் தமது பூத உடலை விட்டுக் கிளியின் உடலிற் புகுந்து, பின்னரே வேதாகமங்களில் கூறப்படும் சாரங்கள் அடங்கிய "திருவகுப்பு" பாடியருளினார் என்பது ஆன்றோர்கள் கருத்து.

திருமந்திரத்தில் உள்ள சொற்பிரயோகங்களையும், கருத்துக்களையும், அருணகிரியார் பாடிய கந்தரலங்காரப் பாடலில் பரக்கக் காணலாம்.

ஆன்ம நெறியில் உலகத்தாரை வாழ நம் முன்னோர் கள் ஆழ்ந்து அனுபவித்து அவனருளால் பாடல்கள் மூலம் அருளிச் செய்த வள்ளல்களில் தலைமை ஸ்தானத்தில் வைத்து கருதப்பட்டவரே திருமூலர்.

அதுபோன்றே, கணவன் பொருட்டன்றி ஏனையோரை வணங்காப்பத்தினிப்பெண்டிர்போன்று, முருகன் அருளால் பாடல்கள் அருளிச் செய்த வள்ளல்களில் முதன்மை ஸ்தானத்தில் வைத்து மக்களால் போற்றப் பெற்றவரே அருணகிரியாவார்.

வேதாந்தம் என்றால் என்னவென்று தாம் பாடிய திருமந்திரத்தில் திருமூலர் விளக்கியுள்ளார். வேதாந்தத்தின் சாரம், உலகப்பற்றை விடவேண்டும், பயன் கருதாது உழைக்க வேண்டும், தனக்கென்று எதையும் விரும்பி வாழ்தல் கூடாது, என்பது வேதாந்தத்தின் முடிந்த கருத்து. ஆசையை அடியோடு களைவதுதான் வேதாந்தம்.

இவ்வுண்மையை திருமூலர் பாடிய பாடல்

"வேதாந்தம் கேட்க விரும்பிய வேதியர்
வேதாந்தம் கேட்டும்தம் வேட்கை ஒழிந்திலர்
வேதாந்தமாவது வேட்கை ஒழிந்திடல்
வேதாந்தம் கேட்டவர் வேட்கை விட்டாரே"

கூறுகிறது. அதேபோன்று அருணகிரியாரும், திருப்புகழில்

அற்றைக் கிறைதேடி அத்ததிலுமாசை
பற்றித் தவியாதபற்றைப் பெறுவேனோ

எனக் காஞ்சிபுரத்து பாடலில் பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

நெறிதவறாது பூணூலையும் சிகையையும் வைத்துக் கொண்டு உலகப் பற்று வைத்துக் கொண்டு வாழ்பவர் களை திருமூலர் ஒரு பாடலில் சாடுகிறார்.

நூலும் சிகையும் நுவலின் பிரமமோ!
நூலது கால்பாகம் நுண்சிகைகேசமாம்
நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்
நூலுடை அந்தணர் காண நுவலிலே"

அதனை ஒத்தே அருணகிரியாரும், கந்தரலங்காரப் பாடலில்,

"காட்டிற் குறத்தி பிரான் பதத்தே கருத்தைப் புகட்டின்
வீட்டிற் புகுதல் மிகை எளிதே விழி நாசி வைத்து
மூட்டிக் கபால மூலாதார நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்து எங்கும் ஓடாமல் சாதிக்கும் யோகிகளே"

பாடியுள்ளதில் உள்ள ஒப்பு உவமையைக் காணல் அவசியம்.

திருமூலநாயனார் ஒரு சித்த புருஷர் என்றால், அருணகிரியாரும் ஒரு சித்தப் பிரசித்த சித்தராவார் என்பதை, சித்து வகுப்பில் கடைசி அடியில் "வேலன் வாய்த்ததிருப்புகழ் கற்றவர், சீலமேத்திய சித்தப்பிரசித்தரே" எனப்பாடியுள்ளதிலிருந்து அறிய முடிகிறது.

மேலும் ஒப்புமை நயங்களை விரிக்கின் கட்டுரை நீளும் எனக்கருதி இத்துடன் நிறைவு செய்கிறேன்.

# 21. காரைக்காலம்மையார் வாழ்க்கை சொல்லும் நீதிகள்

காரைக்காலில், வணிகர் குலத்திலே தனதத்தன் எனும்சீலருக்கு மகளாகப் பிறந்தவரே புனிதவதியார் எனும் பெருந்தகையாவார்.

பொதுவாகவே சிலர், புண்ணியசீலர்களாகவே பிறக்கிறார்கள். சிலர் முயற்சியால் புண்ணிய சீலர்களாகிறார்கள். மேலும்சிலர் புண்ணியசீலர் களாக்கப்படுகிறார்கள். இது மனிதர்களுக்கு மட்டும் அல்ல. கிராமங்களுக்கும், ஊர்களுக்குமே கூட இச்சிறப்புண்டு.

அரியக்குடி, செம்மங்குடி, முசிறி, சித்தூர் முதலிய ஊர்கள் சரித்திர பிரசித்தியோ, புராண வரலாற்றாலோ பிரசித்தி பெறாது போனலும், மேற்சொன்ன ஊர்களை இசையுலகில் அறியாதவர்கள் இலர் இவ்வூர்களில் நல்ல இசை வல்லுனர்கள் தோன்றி உள்ளனர் என்று சொல்லாமலேயே விளங்கும்.

அதுபோன்றே புனிதவதியார் பிறந்ததாலேயே இவரை ஊர் பேர் கொண்டே காரைக்கால் அம்மையார் எனும் சிறப்பைப் பெற்றவராவார்.

இன்றைய நடைமுறையில் தாய் குலத்துக்கே சமஉரிமை அளிக்கும் விதத்தில், எவ்விடத்திலும் பணி செய்ய யாவரும் சமஉரிமை அளித்த போதிலும், இதற்கு முன்னமேயே சுந்தரர் இயற்றிய திருத்தொண்டைத் தொகையில் தாய்குலத்துக்கே பெருமை சேர்த்துள்ளதை காரைக்காலம்மையார் வரலாறு தெரிவிக்கிறது.

அண்மைகாலத்தில் வாழ்ந்த மகான் இராமகிருஷ்ணர் தம் மனைவி சாரதாதேவியை மனைவியாகப் பாராது சக்தியின் சொரூபமாகவே நினைத்து வாழ்ந்து காட்டின போதிலும், முன்னமேயே புனிதவதியாரை கணவனான பரமதத்தன் தெய்வாம்சமாகவே கருதி வாழ்ந்து காட்டியது, தாய்குலத்துக்கு எந்த அளவு ஏற்றமும் தோற்றமும் அளித்துவந்துள்ளனர் என்பது சொல்லாமலே விளங்கும்.

எல்லா நாயன்மார்களும் காதலால் கசிந்து கண்ணீர் மல்கி இறைவனைத் தொழுதே முக்தி அடைந்தபோதிலும், காரைக்காலம்மையார் ஒருவரே, பேயுருவங்கொண்டு, கயிலையில் இறைவனைக் கண்டவர் என்பது எந்த நாயன்மார்களுக்கும் கிடைக்காத ஒருவரப்பிரசாதமாகும். எல்லா நாயன்மார்களும் இறைவனோடு இரண்டறக் கலந்தனரே தவிர, மறுபடி பூலோகத்துக்கு திரும்பி வந்ததாக எங்கும் குறிப்புகள் காணவில்லை. காரைக்கால் அம்மையார் ஒருவர்மட்டும் கயிலை சென்று மறுபடி பூலோகத்துக்கு ஆலங்நாட்டில் நடனதரிசனம் கண்டு களித்தது தாய்குலத்துக்கே பெருமை சேர்ப்பதாகும்.

காரைக்கால் அம்மையாரை பேய் உருவத்தில் கண்ட உமையவளே வியக்கும் விதத்தில், இறைவனே “அம்மையே” என அழைத்தது, இந்நாளில் எத்தகு சிறப்பு வாய்ந்தது என்பதை உணர்ந்தாலே போதும்.

பெரியபுராணத்தில் சேக்கிழாரால் எல்லாருடைய திருநாமங்களை கூறி இலக்கியம் படைத்த போதிலும் புனிதவதி அம்மையாரை மட்டும், பெயர் சொல்லி கூறாது, காரைக்காலம்மையார் என்றே குறித்து இலக்கியம் படைததின் நோக்கம், இறைவனே இவ்வம்மையாரை ‘அம்மையே’ என அழைத்ததால், அன்னாரை பெயரிட்டுக் கூற அஞ்சினார்.

எல்லா சிவாலயங்களிலும், பிரகாரத்தில் 63 நாயன்மார்களது உருவங்களை கற்சியையாகவும், பஞ்சலோகத்திலும் வடித்திருந்தபோதிலும் எல்லா நாயன்மார்களது உருவச்சிலைகளை நிற்கும் பாணியில் வடிவமைத்து, காரைக்காலம்மையார் உருவச்சிலையை மட்டும் அமர்ந்த பாணியில் வடிவமைத்துள்ளதை நோக்கின், பண்டை நாளிலேயே தாய்குலத்துக்கு மதிப்பும், மரியாதையும் அளித்து வந்துள்ளனர் என்பது உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளங்குகிறது.

மேலும் விரிக்கின் கட்டுரை நீளும் எனககருதி இத்துடன் நிறைவு செய்கிறேன்.

"இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின் வேண்டுகின்றார்
பிறவாமைவேண்டும், மீண்டும்பிறப்புண்டேல் உனை என்றும்
மறவாமைவேண்டும் இன்னும் வேண்டு நான் மகிழ்ந்து பாடி
அறவா! நீ ஆடும்போதுன் அடியின் கீழ் இருக்க"

எனும் பாடலை தினமும் கண்மலராலும் மனமலராலும் கைமலராலும் போற்றிப் புகழ்ந்து நாடிவரும் வினைகளவை ஓடிட வெல்வோமாக.



காரைக்காலம்மையார்

# 22. வள்ளிமலை உணர்த்திய வாசகங்கள்

அடியேனுக்கு, வள்ளிமலையில்தவம் இயற்றி வரும் திருப்புகழ் சச்சிதானந்த சுவாமிகளே குருநாதராவர். கார்த்திகை மாத மூல நட்சத்திரத்தன்று அருணகிரிநாதர் ஜெயந்தி கொண்டாடுவது வழக்கம், அது சமயம் அடியேனும் (18 அல்லது 19 வயதிருக்கும்) என் தந்தையாருடன் வள்ளிமலைக்குச் செல்வதுண்டு அடியேனது தந்தையாரும் குழுமியுள்ள ஏனைய திருப்புகழடியார்களும், குருநாதர் பாடும்திருப்புகழ் பாடல்களால் மெய் மறந்து அனுபவிப்பார்கள்.

எனக்கு அந்த வயதில் தந்தையார் போல் திருப்புகழில் அந்த அளவுக்கு நாட்டமில்லை. வள்ளிமலை ஆஸ்ரமத்தில் உள்ள பசுக்களை மேய்ப்பதற்கு சுமார் 60 வயது மதிக்கத்தக்க இடையர் வம்சத்தைச் சேர்ந்த முதியவரை சந்திக்கலானேன். அவரோடு கலந்து உரையாட என் மனம் உந்திற்று.

ஆடு மாடுகளைப் பற்றி தனக்குத் தெரிந்த அனுபவச் செய்திகளை அம்முதியவர் என்னிடம் கூறலானார். மாடுகளின் வகைகள், கொண்டி மாட்டை மடக்கி பிடிக்கும் விதம், அடக்கும் விதத்திற்கு தேவையான உபகரணங்கள் குறித்து உற்சாகத்தோடு கூறலானார். அந்த வயதில் அவர் கூறியவற்றை மனதில் பதித்துக் கொள்ளும் பக்குவம் எனக்கில்லை.

இருப்பினும் நேரத்தைக் கடத்தவே, அவரிடம் உள்ள அனுபவக் கருத்துக்களை வெளிக் கொண்டுவர விரும்பியது என் மனம். அம்முதியவர், மலைகளின் இடுக்குகளில் உள்ள மரங்களை அடியோடு வெட்டாமல், ஆடு மாடுகள் எளிதில் உண்ண வகை செய்வது வழக்கம் என்று கூறினார். கிளைகள்

அடியோடு துண்டித்து விழாமல், பாதி அளவில் தொங்கும். ஒடிந்த கிளைகள் மரத்திலேயே தொங்கும் அளவுக்கு வெட்டுவோம். அம்முதியவரது கண்களுக்கு மரமும் ஆடுமாடுகளுமே தோன்றின. மாறாக என் உள்ளத்திலோ அன்னார் கூறிய அனைத்தும் தமிழ் இலக்கிய உலகிலே சஞ்சாரம் செய்ய ஆரம்பித்தது.

மரக்கிளைகளை அறவேவெட்டாது சாய்ப்பார்கள் எனும் செய்தியை கூறிய சமயம், பள்ளியில் படித்த பழந்தமிழ் நூல்களில் வரும் செய்யுட்கள் என் அறிவுக்கு உணவளித்து போல் பிரேமை உண்டாயிற்று. இருப்பினும் ஒன்றும் புரியாதது போல் நடிக்கலானேன். அன்னார் மேலும் புரியும் வகையில் பின்வரும் விளக்கம் தந்தது எனக்கு வியப்பைத் தந்தது.

"நம்மோடு நெருங்கிப் பழகியவர், ஒருசமயம் நம்மிடமிருந்து ஒரு உதவியை எதிர்பார்த்தார். வாய் விட்டும் மனம் தாளாது கேட்டும் விடுகிறார். தாட்சண்யத்திற்கு கட்டுப்பட்டு, வேண்டுகோளை நிவர்த்திச் செய்வதாக ஒப்புக் கொண்டாகி விட்டது. நண்பர் கேட்கும் பொருளோ அது சமயம் நம்மிடம் இல்லை. கேட்டவரோ நெடுநாளாக பழகியதோடு எந்த உதவியையும் எதிர்பார்க்காதவர். நம்முடைய நிலைமை முன்பே யோசியாது வாக்கும் கொடுத்தாயிற்று. வாக்கை நிறைவேற்ற முடியாது மனம் சஞ்சலப்பட்டது. இப்பொழுது இயலவில்லை எனச் சொல்வதும் முறையில்லை.

இப்பொழுது இடையன் எறிந்த மரம் போல் இருக்கிறோம். உபகாரத்தை மறுப்பதற்குமில்லை, அதனை பூர்த்திச் செய்வதற்குமில்லை எனும் செய்தி பதினென்கீழ்கணக்கு நூல்களுள் ஒன்றான பழமொழி என்பதிலுள்ள செய்யுள் தெரிவிக்கிறதே என அம்முதியவர் அப்பாடலையும் கூறினார்.

பாடல் :

"அடையப் பயின்றார் சொல் ஆற்றுவாராக கேட்டால்
உடையதொன்றில்லாமை யொட்டின்
படை பெற்றடைய அமர்ந்கட் பைந்தொடி அஃதால்
இடையனெறிந்த மரம்"

இதனால் அக்காலத்து கிராமத்து கல்வி முறைகள் இதுப்போன்ற பாடல்களுக்கு ஒரு திறவு கோலாக திகழ்கிறதை அறிய முடிகிறது.

இடையன் விரித்துரைத்த செய்தியும், பழமொழிச் செய்யுளும் ஒருங்கே என் மனத்திரையில் ஓடின. கிளையை வெட்டும் போது அடியோடு விழும்படி வெட்டினால் என்ன? என்றேன்.

அவ்விதம் வெட்டினால், அந்த கிளை மறுபடியும் உபயோகமில்லாமல் போய்விடும். நாங்கள் வெட்டும் கிளைகளோ மரத்தோடு ஒட்டிக் கொண்டிருப்பதால், நாளை மறுநாள் தழைக்க வாய்ப்புண்டு என விளக்கம் அளித்தார்.

அது சமயம், "இடையன் மகன் கொன்ற வின்னா மரத்தினேன்" என்ற 'சீவக சிந்தாமணி' அடி என் நினைவிற்கு வந்தது.

சீவகன், தன் தாயைப் பார்த்து, தன் நிலையை என் தந்தை மரணமடையப் பின் பிறந்தனாவேன் அன்றியும் தாங்கள் துன்பத்தில் வருந்தவும், நட்புடையவர்கள் மனம் நோகவும் இடையன் மகன் கொன்ற இன்னாமரம் போல் இருந்தேன் எனும் சொற்களால் விவரிக்கிறான்.

நச்சினார்க்கினியார் அந்த உவமையை விரித்து, "உயிருடன் இருந்தேனாய்ப் பகையை வென்றேனுமில்லை. உயிரை நீத்தேனுமில்லை எனக்கருதி, மரத்தினேன் என்றான் என்று சிறப்புரை

எழுதுகிறார். அவ்வுரை, இடையன் கொன்ற மரத்தின் தன்மையை உறுதி செய்கிறது.

இலக்கியங்களில், எங்கள் குலத்தைப் பற்றி விவரிக்கும் இடங்களில் "ஓடி எறிதல்" என ஒரு தொடர் வரும், ஓடிய எறிதல் என்பதே அவ்வாறு விகாரப்பட்டு வந்தது, எங்கள் மரபினர் ஒடிய வெட்டுவார்களேயன்றி, அற்று விடும்படி வெட்ட மாட்டார்கள் என்பதை இந்தத் தொடர் தெளிவாக்கியது.

அவ்வளவு எச்சரிக்கையாக வெட்டுவது கடினமல்லவா? எனக் கேட்டேன். அது எங்களுக்கு கைவந்தகலை. இல்லாவிட்டால் பழமொழி வழங்குமா? என்றார் அம்முதியவர்.

உடனே பழமொழியா? அது என்ன? என வியப்போடு கேட்டேன். "இடையன் வெட்டு அறாவெட்டு" என விரித்துரைத்த செய்தியும், பழமொழிச் செய்யுளும் ஒருங்கே என் மனத்திரையில் ஓடின. கிளையை வெட்டும் போது அடியோடு விழும்படி வெட்டினால் என்ன? என்றேன். "இடையன்வெட்டு அறாவெட்டு" என்னும் பழமொழியைத் தான் சொல்லுகிறேன். இதனால் எங்களது கைப்பழக்கத்தை அந்தப் பழமொழி தெரிவிக்கிறதே என முதியவர் கூறியதும் ஒன்றும் தோன்றாது அடியற்ற மரம் போல் ஆனேன். மறுமுறை அதே பழமொழியை கேட்க ஆவல் கொண்டு கூறும்படிக் கேட்டேன். உடனே "இடையன் வெட்டு அறாவெட்டு" எனச் சொன்னார் அம்முதியவர். இப்பழமொழி எவ்வளவு எளிமையாகவும், சுருக்கமாகவும் இடையர்களது கைத்திறமையையும் மற்றவர்கள் வெட்டும் திறமைக்கும் உள்ள வேறுபாட்டையும் அறிய முடிகிறது.

இதுகாறும் நான் படித்திராத, கேட்டிராத பழமொழியைக் கேட்டதும், இது போன்று ஆழ்ந்த அர்த்தமுள்ள கருத்துகளை இன்றும் நாகரீகம் முதிர்ச்சி

பெறாத கிராமங்களில் எளிய வாழ்க்கையில் வசிக்கும் முதியோர்கள் வாயிலாகக் கேட்டதும் மெய் சிலிர்த்தது.

இலக்கியங்களில், "இடையன் எறிந்த மரம்" என்பதை படித்தவுடனே கருத்து விளங்காது, அதற்கு பொருந்தும் விதத்தில் சொல்லி விளக்கினால்தான் தெரிய வரும்.

ஆடுமாடு மேய்க்கும் அம்முதியவர் கூறிய அப்பழமொழி இலக்கியத்தில் கண்ட தொடர் மொழியாசிய பூட்டைத் திறக்கும் திறவு கோலாக விளங்கிற்று.

இதுபோன்ற கருத்துக்களைப் பொருத்தி, ஆன்மீகப் பெரியார்கள் தங்களது கவிகளில் புனைத்துள்ளதை என் மனம் ஆராயத் தொடங்கியது.

பல பாடல்களை படித்து ஆராயும் சமயம் ஆழ்வார்கள் அருளிச் செய்த பெரியதிருமொழியில்

"படை நின்ற பைந்தாமரையோடணி நீலம்
படை நின்ற வரும் வயலாலி மணாளா
இடைனெறிந்த மரமே யொத்திராமே
அடைய வருளாயெனக்குன்றன் அருளே"

எனும் பாசுரத்தில், ஆழ்வார் கடவுள் திருவருள் பெறவில்லையே என்ற ஏக்கத்தால், மனமழிந்தும், பெறுவோமென்ற நம்பிக்கையில் உயிர் வைத்துக் கொண்டு நிற்கும் நிலையை, இடையை எறிந்த மரத்தை உவமையாக்கி புலப்படுத்தியுள்ளார்.

அந்த .. உவமானத்தின் கருத்தை 1000 வார்த்தைகளாலும் விரித்து உணர்த்தப் புகுவதைவிட, "இடையன் வெட்டு அறாவெட்டு" எனும் பழமொழியை மாத்திரம் சொல்லி நிறுத்தினாலே போதும் எனத் தோன்றுகிறது.

"சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளை" குறித்து விளக்கும் அப்பழமொழியை சூத்திரம் எனச் சொல்வதில் என்ன பிழை இருக்கப் போகிறது. மேலும் முதியவரின் வாயைக் கிண்டி விட்டேன், அது சமயம் பொழுது சாயும் நேரம் ஆகிவிட்டதால், ஒன்றே ஒன்று கூறிவிட்டு செல்கிறேன் என்றார் அம்முதியவர் மிகவும்உற்சாகத்தோடு. அவர்கள் மரபினில் மண மக்களுக்கு வாழ்த்து சொல்லும்போது, "நல்லெருமை நாகு, நற்பசு, சேங்கன்று, ஆடுகிடாய், அடியாள் பெண்பெற" என வாழ்த்துவது வழக்கம், அனுபவத்தில் தோய்ந்து பழுத்து உருப்பெற்றவையே பழமொழிகளாகும். மேலே கூறிய வாழ்த்துச் செய்திகள் அடியேனுக்கு முதலில் புரியவில்லை. விளக்கம் கேட்டேன்.

எருமை கிடாரிக்கன்றையும் (பெண் கன்று) பசு காளைக் கன்றையும், ஆடு கிடாய் குட்டியையும், அடியாள் (மணமகள்) பெண் குழந்தையையும் பெற வேண்டுமென்று அக்குலத்தினர் விரும்புவார்களாம். நாகு எனும் சொல் பெண் எருமையைக் குறிக்கும். இலக்கியத்திலே இச்சொல் பயின்று வரும் என்பதை சான்றோர்கள் மூலம் அறியக் கேட்டுள்ளேன்.

இவர்கள் பார்வைக்கு கள்ளம்கபடன்றி அடக்க முள்ளவர்கள் போல் தென்பட்டாலும் உள்ளத்தால் பண்பட்டு உள்ளதை, அவர்களது எளிமையும் அடக்கமும்,பொறுமையும் நன்கு வெளிப்படுத்தின, இன்றைய நாளிலும் குக்கிராமங்களில் வாசிக்கும் சிறந்த பண்பாளர்களிடையே தங்களை ஏனையோர் முன்னிலையில் தாழ்த்தியே கருதி வாழ்ந்து வருகின்ற உயரிய பண்புகளை காண முடிகிறது. இத்தகையோர்களே நவ நாகரீக வாழ்க்கையில் வாழ்க்கை நடத்தும் மக்களுக்கு வழி காட்டியாவார்கள் எனச் சொல்லாமலே விளங்க வைக்கிறது.

# 23. குருநாதரை வியப்பில் ஆழ்த்திய அணுக்கத்தொண்டர்

வள்ளிமலை திருப்புகழ் குருநாதர் அருள்மிகு சச்சிதானந்த சுவாமிகள் ஒரு சமயம் வள்ளிமலை ஆஸ்ரமத்தில் மக்களுக்கு திருப்புகழில் உள்ள அறிவுரை களைப் போதித்து வந்தபோது, அங்கிருந்த அணுக்கத் தொண்டர் ஒருவர் அதில் கலந்து கொண்டார். குருநாதர் கூறிய நல்லுரைகளைச் சிந்திப்பவனார்.

ஒரு வருடம் கழித்து மறுமுறை குருநாதரை சந்திக்களாயினர். அது சமயம் அடியேனது தொழிற் பணி மூலம் நெய்த துணிகளை, அவரவர்களிடம் சேர்க்கப் போகும் சமயம். குருநாதரைக் காண நேர்ந்தது, தான் கொண்டு வந்த துணி மூட்டையை அங்கேயே வைத்துவிட்டு, குருநாதரது அறிவுரைகளைக் கூர்ந்து கேட்கலானார்.

குருநாதர் அவ்வடியாரை கண்டதும், தன் அருகில் அழைத்து சில கேள்விகளைக் கேட்கலானார்.

முதற் கேள்வி : எங்கிருந்து வருகிறாய்? எனக் கேட்டதற்கு, தெரியாது என பதில் கூறினார்.

இரண்டாவது கேள்வி : எங்கே போய் கொண்டிருக்கிறாய்? எனக் கேட்டதற்கு, தெரியும் என பதில் அளித்தார்.

உனக்குத் தெரியுமா? எனக் கேட்டதற்கு, மறுபடியும் தெரியாது எனப் பதில் பகர்ந்தார். இவ்வடியார் குருநாதரால் கேட்ட கேள்விகளுக்கு உட்கருத்து இருக்குமென நினைத்து, நான் வீட்டிலிருந்து வருகிறேன் என்பது உங்களுக்கு சொல்லாமலே தெரியும். ஞானம் கைவரப் பெற்ற தாங்கள் இந்தக் கேள்வியைக் கேட்டதில் உள்கருத்து இருக்குமென

நினைத்து, எங்கிருந்து தோன்றி நான் நெசவாளியாக வந்தேன் எனும் எண்ணத்தில் தாங்கள் என்னை கேட்டதற்கு நினைத்து, தெரியாது என்றேன்.

அடுத்த கேள்வியில் இந்த துணி மூட்டையை எங்கே எடுத்துச் செல்கிறேன் எனக் கேட்டதாகத் தோன்றவில்லை. இப்பொழுது நெசவாளியாக பிறந்த என்னை, அடுத்து எங்கே பிறப்பாய் எனக் கேட்டது போல் தோன்றியதால், எனக்குத் தெரியாது என்று பதில் அளித்தேன். உனக்குத் தெரியாதா? என தாங்கள் கேட்டதற்கு, தெரியும் என்று சொன்னதின் கருத்து இந்த உலகத்தை விட்டு என்றாவது ஒரு நாள் சென்றே ஆக வேண்டும் என மனதில் கொண்டு, தெரியும் என்றேன். கடைசியாக எனக்கு தெரியுமா எனக் கேட்டதற்கு, தெரியாது என பதில் கூறியதற்கு காரணம் என்று இவ்வுலகத்தை விட்டு நான் செல்வேன் என்பது எனக்கே தெரியாது என்றேன். இவ்வடியார் அளித்த பதில்கள் கேட்டு, மிகவும் மகிழ்ச்சி பொங்க. அன்னாரை வாழ்த்தியதோடு, மென்மேலும் 'ஞான அநுபவம் பெற்று, மக்களுக்கு நற்போதனைகளைப் பரப்பி வருவாயாக' என ஆசீர்வதித்து மேலும் தன் பாராயணத்தைத் தொடர்ந்தார்.



வள்ளிமலை கோயில்

# 24. சிந்திக்க வைக்கும் வெற்றிலை

அடியேன் ஒருநாள் தக்க சான்றோர்களுடன் ஒரு சிவாலயத்துக்குச் செல்ல நேரிட்டது மூலவருக்கு அர்ச்சனை தீபாராதனை முடித்துக் கொண்டோம். நிவேதனப் பிரசாதங்களை கொடிமரத்தின் அருகில் அமர்ந்து, பகிர்ந்து கொண்டோம். பின்னர் தட்டில் இருந்த வெற்றிலை பாக்கை ஒருசிலரோடு வாயில் மென்று கொண்டு இருந்தேன்.

எல்லா இலைகளுக்கும் மூலப் பொருள் ஒன்றின் பெயரைக்கொண்டு வழங்கின போதிலும் வெற்றிலைக்கு மட்டும் வழங்காததைக் கண்டு என் மனம் அசைபோட ஆரம்பித்தது, இதனைக் குறித்து எங்களோடு வந்த அறிஞர்கள் பலரைக் கேட்கலானேன். யாவரும் திருதிருவென விழித்தனர். இது வெறும் இலையாதலால் இப்பெயர் வழங்கிற்று என ஒரு நண்பர் பதில் கொடுத்தார்.

அப்படியெனில், அரசிலை, ஆலிலை, அத்திஇலை, வாழையிலை, மாவிலை போன்ற பல ஆயிரமாயிரம் இலைகளும் வெறும் இலைகள் தாமே. அவைகளுக்கு மட்டும்மூக்குத்தி, கம்மல் போட்டுக் கொண்டா விளங்குகின்றன. அவற்றினுள் ஏதேனும் ஒன்றிற்காவது வெற்றிலை எனப் பெயரிடாமல், இந்த குறிப்பிட்ட இலைக்கு மட்டும் ஏன் வெற்றிலை எனப் பெயரிட வேண்டும் என நண்பர்களை வினவினேன்.

அவர்களின் புரையோடி கண்களை ஆச்சரியத்தால் விரித்தார்களே ஒழிய அறிவை உரசிப் பார்க்கவில்லை என்பதை உணரலானேன். யாவருக்கும் அதுசமயம் அறிவுக்கு புலப்படாததால், ஒருவருக்கொருவர் முணுமுணுத்துக் கொண்டிருந்ததைக் கவனிக்கலானேன்.

இதுதான் சமயம் என்று, நான் கல்வி பயின்ற நாளில் நன்னூல் நூற்பா ஒன்று நினைவுக்கு வரவே.

'ஈறுபோல் இடைஉகரம் இய்யாதல்
ஆதிநீடல் அடிகஅகர ஐயாதல்
தன்ஒற்று இரட்டல், முன்நின்ற மெய்திரிதல்
இனம் டிமிகல் இணையவும் பண்பிற்கு இயல்பே"

வெறுமை + இலை, வெறு + இலை, வெற் + இலை, வெற்+ற்+இலை வெற்றிலை

விளக்கம் : வெறுமை இலை என்பதில் ஈறுபோதல் விதிப்படி வெறு இலை என்றாயிற்று.

உடனே ஒரு மாணவன் இடைமறித்து, நான் காலையில் ஆலங்குச்சியில் பல்தேய்த்தபோது, ஈறு போயிற்று சார் என்றான்.

இப்படியே இடையிடையே பொருளற்ற சொற்களை பேசிக்கொண்டு போனால் "ஈறு போதல் இடைபறகள் இல்லாததால்" என கூறினும் வியப்படைவதிற்கில்லை என நான் உணர்த்த, அருகிலிருந்த அனைவரும் மனம்விட்டு சிரித்துவிட்டனர்.

அவர்களில் ஒருவர் இவ்வாறு கூறினார். "பல் (இல்லாது) போயின் சொல் (ஒலி ஏற்படினும் ஒலியற்று) போகும்" எனில் சொல் (பொருளற்று) போயின் பல் (பல் இருந்தும் இல்லாது) போகும் எனும் அரிய கருத்தினை அளவிட்டு அழகாக அறிவித்தமைக்கு நன்றி எனக் கூறினேன்.

இவ்வாறாக எவர் மனமும் புண்படாத வகையில் அமைந்த உரையாடலினால் ஏற்பட்ட நீண்ட சிரிப்பொலிக்குப் பின் மீண்டும் விளக்கத்தைத் தொடங்கினேன்.

இடைஉகரம் கெடுதல்' என்ற விதிப்படி வெறு+இலை என்பது வெற்+இலை என்றாயிற்று.

தன் ஒற்று இரட்டல் எனும் விதிப்படி வெற்+ற்+இலை என்றாயிற்று.

உடல்மேல் உயிர் ஒன்னுவது இயல்பே என்னும் நூற்பாவின் விதிப்படி "வெற்றிலை" என்றானது.

இப்பொழுது ஓரளவு புரிந்திருக்கும் என அறிஞர்களிடம் கூறினேன்.

பெட்டிக் கடையில் ஐம்பது பைசாவுக்கு மிக எளிதாகக் கிடைக்கும் வெற்றிலைக்கு இவ்வளவு இலக்கண விளக்கம் தேவையா என்றனர். உடன் வந்த நண்பர்களது அறிவு நாடியை சோதித்துப் பார்த்ததில் இவர்களது முழு ஏக்கமும் வெற்றிலை எனும் பெயருக்கு உள்ள காரணம் பற்றியே ஆர்வமிருந்ததை உணரலானேன்.

வெற்றிலையை நட்டான் என்று சொன்னால் வெறு இலையை மண்ணில் நாட்டான் எனப் பொருள் கெள்ளுதல் கூடாது. வெற்றிலைக் கொடியிலேயே உள்ள கணுக்களில் உண்டாகும்வேர்களைத் தோட்டத்து மண்ணில் நட்டான் எனப் பொருள் கொள்ள வேண்டும். இப்பொழுதாவது உங்களுக்கு நன்றாகப் புரிந்திருக்கும் எனக் கருதுகிறேன்.

நண்பர்களோ தங்களது ஆர்வத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் அனைவரும் ஒருசேர, வெற்றிலைக்கு ஏன் அப்பெயர் வந்து எனக் கேட்டால் வேறு எதையோ காட்டி விளக்கம் தருகிறீர்களே என்றனர். நிலைமை கட்டுக்கடங்காமல் போகவே, கீழ்வருமாறு வெற்றிலை எனும் பெயருக்கு விளக்கம் அளிக்கலானேன்.

அதாவது பூ, பிஞ்சு, காய்,கனி, விதை போன்ற தாவர உறுப்புக்கள் ஏதுமின்றி, வெறும் இலையை மட்டும் மிகுதியாக விளைவிக்கும் தாவரம் உலகிலேயே இது ஒன்றுதான் என ஒரு போடு போட்டதும் 440 வோல்ட் மின்சாரம் உடலில் பாய்ந்ததைப் போன்று நாடி நரம்புகள் அசைவற்று அனைவரும் என்னைப் பார்க்கலானார்கள்.

அதனால்தான் இதற்கு வெற்றிலை எனப் பெயர் வைத்து மகிழ்ந்தான்,வெற்றிலை போட்டு மகிழும் தமிழன். இதற்குள்ள பெயர் காரணம் தெரியாமல் இன்னும் எத்தனை பேர் இந்த நாட்டில் வெற்றிலை போட்டுக்கொண்டு தானிருக்கின்றனர்.

பண்டைத் தமிழர்கள் பல்வேறு அறிவுத் துறைகளிலும் தங்கள் கருத்தைச் செலுத்தி, நுண்மாண் நுழைப்புலத்துடன் தமிழில் சொற்களை உருவாக்கி யுள்ளனர். தாவரவியல் அறிவை நீட்டி அளக்கும் ஒரு கோலாக இருப்பதுதான் இந்த “வெற்றிலை” எனும் சொல்.

எங்களுடன் வந்த ஒரு நண்பர், ஐயா! இந்த அறிவு தமிழனுக்கே உரியதா? பல்துறை அறிவு நூல்கள் இப்போது ஆங்கிலத்தில் அல்லவா உள்ளன, அவர்களுக்கு தெரியத நுட்பம் தமிழனுக்குத் தெரிந்துவிட்டதா என்ன? எனக் கேட்டார்.

அதற்கு நான், தமிழன் பெருமையை இப்போதைய தமிழன் மதிக்கிறானோ இல்லையோ ஆங்கிலேயன் பாராட்டினான்.

“பருகும் நீரும் தின்னும் வெற்றிலையும் கண்ணனே” (பிரபந்தம்-திருவாய்-6.7) என்று ஆழ்வார் வெற்றிலையைப் பற்றிக் குறிப்படுகிறார். அந்த வெற்றிலை எனும் சொல்லின் ஒலியைத் திரித்துதான் “Betel” என்ற சொல்லை வெற்றிலைக்கு ஆங்கிலேயன் வழங்கினான். எப்படியெனில், கோழிக்கோடு என்பது காலிகட் என்றது போலவும், தஞ்சாவூர் - Tanjore என ஆனதுபோல் வெற்றிலை - வெற்றில், பெற்றில், பெட்டில், பீடல் எனத் திரிந்தது.

வெற்றிலையோடு சேர்த்து உண்ணப்படும் பாக்கிற்கு Arecanut என ஆங்கிலத்தில் பெயர் வழங்கினபோதிலும்

"Betelnut" எனும் பெயரிலேயே ஆங்கிலத்தில் இன்றும் வழங்குவதைக் காணலாம். அந்த Areca எனும் பெயர்கூட, பாக்கிற்கு பெயரான அடைக்காய் என்பதின் திரிபுதான் என விளக்கம் அளித்ததும், உடம்பிலே உள்ள ஒன்பது வாசல் கதவுகளும் மூடிக் கொண்டது போன்ற உணர்வு உண்டாயிற்று. இத்தகு வாசகத்தை மனத்திற்குள் மெச்சியபடி பிரமித்து போனோர்கள்.

கடைசியில் ஒருசிலர் குறும்பாக ஃப்பூ... இவ்வளவுதானா? என அலட்சியப்படுத்தியதை காணமுடிந்தது. பூ....இவ்வளவுதானா! இல்லை, இலை இவ்வளவுதான் எனச் சொல்லுங்கள் என்றேன்.

வெற்றிலையின் பெயர்க்காரணம் தெரியாமலேயே இன்னும் இந்த நாட்டில் எத்தனை பேர்கள் வெற்றிலை உபயோகப்படுத்தமட்டும் தெரிந்திருக்கின்றனர் என்பதை எண்ணும்போதெல்லாம் கசப்பிலும் ருசி பார்க்க முடிந்தது.

இத்தகு விளக்கங்கள் உங்கள் அறிவுக்குத் தட்டுப்படாததால் தானே என்னை பலமுறை நச்சரித்தீர்கள்.

பூ, பிஞ்சு, காய், கனி, விதை போன்றவைகள் இல்லாத தாவரம் உலகிலேயே இது ஒன்றுதானா எனக் கேட்டனர். இதைப்பற்றி மேலும் பல விளக்கங்களை தாவரயியல் நிபுணர்களை அணுகித் தெரிந்து கொள்ளுங்கள் என அடக்கத்துடன் கூறிவிட்டு,

> "காசினியில் பூபிஞ்சுகாய்கனி வித்தின்றி
> பாசிலைகள் மகுவிளை பைங்கொடியாம் - வாசமுள்ள
> வெற்றிலைபோல் விளக்கம் வேறோர் மொழியிலுண்டோ
> சற்றே நீர்சாற்றுக ஆராய்ந்து"

எனக் கலம்பகம் பாடல் ஒன்றையும், அவர்களது மனச்சாந்தி எனும் பூட்டுக்கு திறவுகோலாக காட்டி அங்கிருந்து விடைபெற்றேன்.

# 25. ஒன்பது, தொண்ணூறு, தொள்ளாயிரம்

ஒன்பது, தொண்ணூறு, தொள்ளாயிரம் - இடம் மாறி வரும் காரணத்தை சிறிது சிந்திப்போம்.

எண்பதுக்கும் நூற்றுக்கும் இடையில் கூறவேண்டிய ஒன்பது எனும் சொல் எட்டுக்கும் பத்துக்கும் இடையில் அமைந்துள்ளதைக் காண்கிறோம்.

எண்ணூற்றுக்கும் ஆயிரத்துக்கும் நடுவே வர வேண்டிய தொண்ணூறு எனும் சொல் எண்பதுக்கும் நூற்றுக்கும் நடுவே அமைந்துள்ளதைக் காண்கிறோம்.

ஆயிரத்தோடு சம்பந்தமே இல்லாத தொள்ளாயிரம் எனும் சொல் எண்ணூற்றுக்கும் ஆயிரத்துக்கும் மத்தியில் அமைந்துள்தைக் காண்கிறோம்.

இப்பொழுது உங்களுக்கு விளங்கியிருக்கும் என கருதுகிறேன். இருப்பினும் சற்று விரிவாகக் கூற விரும்புகிறேன்.

இருபது, முப்பது.....எண்பது - என்பனவற்றில் கடைசியில் உள்ள இரண்டு எழுத்துகளாக 'பது' என்பது பதத்தைக் குறிப்பதாக உள்ளது அதாவது இருபது என்பது 2 பத்து, முப்பது என்பது 3 பத்து .... எண்பது என்பது 8 பத்து என அறிகிறோம் அப்படியானால் ஒன்பது என்பது 9 பத்து அல்லவா ஆக வேண்டும்? மாறாக 9 ஒன்றுகளாக உள்ளதே ஏன்?

மேலும் ஒன்று, இரண்டு என்ற எண்ணிக்கைகளைக் குறிக்கும் சொற்களின் வரிசையில் எட்டுக்குப் பிறகு ஒட்டு

என்றோ ஏதாவது ஒரு சொல் இருந்திருக்க வேண்டும் என நினைக்க இடமளிக்கிறது.

தமிழில் 9க் குறிக்க ஒன்பது என்றும், 90க் குறிக்க தொண்ணூறு என்றும், 900க் குறிக்க தொள்ளாயிரம் என்று உள்ளது. பொதுவாக எண்களில் குழப்பமில்லை என்றே தோன்றுகிறது. எண்களைச் சுட்டும் வார்தைதையில்தான் குழப்பம் எனக் கருத வேண்டியுள்ளது.

இப்பொழுது தொண்ணூறு, தொள்ளாயிரம் பற்றி பவணந்தியார் கூறுவதைச் சற்று இங்கு காண்போம்.

ஒன்பஃது + பத்து என்ற புணர்ச்சியால் தொண்ணூறு என்றும்
ஒன்பஃது + நூறு என்ற புணர்ச்சியால் தொள்ளாயிரம் என்றும்

தோன்றியது பவணந்தியார் கூறுகிறார். மேலும்,

வருமொழியாகிய பத்து என்பதை நூறு எனவும்
வருமொழியாகிய நூறு என்பதை ஆயிரம் எனவும்

திரித்துக் கொள்ள வேண்டும் என்கிறார் பவணந்தியார். ஆனால் அவ்வருமொழித் திரிபுகளை வகைப்படக் கூறவில்லை.

ஆகவே தொண்ணூறு தொள்ளாயிரம் என்று புணர்ச்சி பற்றித் தொல்காப்பியர் தமது தொல்காப்பிய எழுத்து அதிகாரக் குற்றியலுகரப் புணரியல் எனும் பிரிவில் குறிப்பிட்டுள்ளதைக் காண்போம். முதலில் தொண்ணூறு ஆனது எப்படி என்று ஆராய்வோம்.

"ஒன்பான் ஒகரமிசைத் தகரம் ஒற்றும்;
முந்தை ஒற்றே ணகாரம் இரட்டும்;
பஃது என் கிளவி ஆய்த பகரம்கெட
நிற்றல் வேண்டும். ஊகாரக் கிளவி;
ஒற்றிய தகரம் நகரம் ஆகும்".

ஒன்பஃது + பஃநு = தொண்ணூறு

| | |
|---|---|
| தொன்பஃது + பஃது | (ஒகரத்தின் முன்னர் தகர வொற்றுத் தோன்றும் (த் + ஒ) |
| தொண்ண்பஃது + பஃது | (நிலைமொழியின் னகரமெண் ணகரமெய்யாகி இரட்டிக்கும்) |
| தொண்ண் + து | (நிலைமொழியீற்றில் உள்ள பஃது, வருமொழி முதலில் உள்ள பாரமும் ஆய்தமும் கெடும்) |
| தொண்ண் + ஊ + து | (ஊகாரம் இடையில் வந்து நிற்கும்) |
| தொண்ணூறு | (து என்பதில் உள்ள தகர மெய் றகர மெய்யாகும்) |

இப்பொழுது தொள்ளாயிரம் ஆனது எப்படி என்று ஆராய்வோம்.

> "ஒன்பான் முதல் நிலை முந்து கிளந்தற்றே;
> முந்தை ஒற்றே ளகாரம் இரட்டும்;
> நூறு என் கிளவி நகாரம் மெய் கெட;
> ஊ ஆ ஆகும் இயற்கைத்து என்ப;
> ஆயிடை வருதல் இகார ரகாரம்;
> ஈறு மெய் கெடுத்து மகாரம் ஒற்றும்;"

ஒன்பஃது + நூறு = தொள்ளாயிரம்

| | |
|---|---|
| தொன்பஃது + நூறு | (ஒகரத்தின் முன்னர் தகரவொற்றுத் தோன்றும் (த்+ஒ) |
| தொள்ள்பஃது + நூறு | (நிலைமொழியின் னகரமெய் ளகரமெய்யாகி இரட்டிக்கும்) |
| தொள்ள் + நூறு | (நிலைமொழியீற்றில் உள்ள பஃது கெடும்) |
| தொள்ள் + ஊறு | (வருமொழி முதலில் உள்ள நகர மெய் கெடும்) |
| தொள்ள் + ஆறு | (வருமொழி ஊகாரம் ஆகாரமாகத் திரியும்) |

| | |
|---|---|
| தொள் + ஆஇரறு | (வருமொழியில் ஆகாரத்தை அடுத்து இகர ரகாரம் வரும்) |
| தொள் + ஆயிரம் (தொள்ளாயிரம்) | (வருமொழி இறுதியில் உள்ள குற்றுகரமும் அது ஏறிவரும் றகர மெய்யும் கெட மகரமெய் வரும்) |

நன்னூலுக்கு மாதவச் சிவஞான சுவாமிகள் 'புத்தம் புத்துரை' எனும் நூலில் எழுதியுள்ளார். அதில் தகர ஒற்றை ஒகர உயிர்க்கு உடம்பாக நிறுத்துக என்கிறார். ஓ எனும் உயிர், உடம்பு ஒன்ற கிடைக்காமல் அலைபாய்கிறது. அதற்கு உடம்பு ஒன்ற கொடுத்தால் (மெய் - த்) அதில் புகுந்து கொண்டு வாழும் 'தொ' என்று என்கிறார், 'ஒ' - 'தொ' ஆனதற்கான நியாயம் இது. இவ்விதமாக 'ஒன்பது' 'தொன்பது' ஆகி தொண்ணூறு, தொள்ளாயிரம் மாறிவிடுமாம்.

நன்னூல் சூத்திரத்தில் உள்ள "ஒன்பா னொடுபத்தும், நூறும் ஒன்றின், "முன்னதின் ஏனைய முரணி", என்பதற்குச் சிலர் ஒன்பதால் பத்தையும் நூற்றையும் பெருக்கி எனப் பொருள் கூறுவர்.

இருப்பினும் தொண்ணூறு தொள்ளாயிரம் என்ற புணர்ச்சிக்கு நன்னூலார் கூறுவதையோ, தொல்காப்பியர் கூறுவதையோ தற்கால இலக்கண ஆய்வாளர்கள் ஏற்றுக் கொள்வதில்லை.

9-க் குறிக்க தமிழிலும் மலையாளத்திலும் ஒன்பது என்றும், கன்னடத்தில் ஒம்பத்து என்றும் உள்ளது. ஆனால் தெலுங்கில் மட்டும் தொம்மிதி என்று உள்ளது. 9-க்கு குறிக்கும் 'தொம்மிதி' என்ற தெலுங்குச் சொல்லில் தொம் இயல்பாகவே காணப்படுகிறது. தெலுங்கில் 'தொல்' என்பது 'முந்திய' என்ற பொருளில் வழங்குகிறது.

திராவிட மொழிகளில் தொம், தொண், தொள் என்பனவற்றை முன்னிலைகளாகக் கொண்டு தொண்ணூறு,

தொள்ளாயிரம் என்று தோன்றியிருத்தல் வேண்டும். தொடக்க காலத்தில் தமிழில் பத்துக்கு முந்திய எண் தொல் அல்லது தொன் என்பதை அடியாகக் கொண்டு தொன்பது என்று இருந்திருக்க வேண்டும். காலப்போக்கில் மொழி முதல் 'த'கரம் இழந்து ஒன்பது என வழங்கப்பட்டிருத்தல் வேண்டும். இதுபோன்ற நூற்றுக்கு முந்தியது தொண்ணூறு, ஆயிரத்துக்கு முந்தியது தொள்ளாயிரம் என வழங்குகின்றன.

தமிழில் பரிபாடலில் 9-க்குறிக்க தொண்டு எனும் பதம் வந்துள்ளது.

> "பாழெனக் காலெனப் பாகென ஒன்றென
> இரண்டென மூன்றென நான்கென ஐந்தென
> ஆறென ஏழென எட்டெனத் தொண்டென
> நால்வகை ஊழிஎண் நவிற்றும் சிறப்பினை" (பரிபாடல்)

அண்மையில் நம்மோடு வாழ்ந்த கருணையே வடிவான வள்ளலார் கூறும் விளக்கத்தை திரு. இராம அரங்கநாதன் அவர்கள் ஓம்சக்தி மாத இதழில் அறிவித்துள்ளதில் சிலவற்றை இப்பொழுது நாம் காண்போம்.

தொல் என்பது ஒரு அம்சம் குறைய என்ற பொருள் தரும் என்கிறார்.

தொல் + நூறு = தொண்ணூறு (ஒரு அம்சம் - 10 குறைய)
அதாவது நூற்றுக்கு (ஒரு அம்சம்) பத்து
குறைவு

தொல் + ஆயிரம் = தொள்ளாயிரம் (ஒரு அம்சம் - 100 குறைய)
அதாவது ஆயிரத்துக்க (ஒரு அம்சம்) நூறு
குறைவு

காலக்கட்டாயத்தால் சில மாறுதல்கள் நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் நிகழ்ந்தே விடுகின்றன. மேலும் சில மாற்றங்களை நமது வசதி கருதி நாமே ஏற்றுக்கொண்டும் விடுகிறோம்.

# 26. தைப்பூசத்தின் விசேடங்கள்

திருஞானசம்பந்தர், தமிழ் மக்கள் - 12 மாதங்களுக்கும் உரிய திருவிழாக்களைக் கொண்டாட, மயிலையில் 10 பாடல்கள் பாடியுள்ளார். மாதந்தோறும், பவுர்ணமியில் எந்த நட்சத்திரம் சேர்கிறதோ அதற்குவிசேடம். 365 நாளிலே 13 பவுர்ணமிவரும். தை மாதத்தில் பவுர்ணமியன்று பூச நட்சத்திரம் சேர்வதாலேயே பூசத்தன்று விழாக்கொண்டாட ஞானசம்பந்தர் 10 பாடல்களில் ஒரு பாடல் பாடியுள்ளதைப் பார்க்கலாம்.

"தைப்பூசம் ஒண்கண் மடநல்லார் மாமயிலைக்
கைப்பூசு நீற்றான் கபாலிச்சரம் அமர்ந்தான்
நெய்ப்பூகம் ஒண் புழுக்கல் நேரிழையார் கொண்டாடும்
தைப்பூசம் காணாதே போதியோ பூம்பாவாய்"

தைப்பூசத் தினத்தன்றுதான் சந்திரன் மிககவும் பிரகாசமாயிருக்கும். இதைக்குறித்து ஆண்டாள்", "மார் கழித்திங்கள் மதி நிறைந்த நன்னாள்' என பாடியுள்ளார்.

தில்லையிலே எம்பெருமான், பூசத்தன்றுதான், வியாக்ரபாதருக்கு ஒற்றைக் காலைத்தூக்கி நடன தரிசனத்தைத் தந்தருளினார். இதனடிப்படையிலேதான், வள்ளலாரும், வடலூரில் நடராஜர் தரிசனத்தையே தைப்பூசத்தன்று தொடர்ந்து கொண்டாடி வருவது இந்நாள் வரை சிறப்புற்று விளங்குகிறது.

மேலும் தைப்பூசத்திற்கு ஒரு விசேடம், ஞானியார் சுவாமிகள் இன்றைக்கு ஏறத்தாழ 50 ஆண்டுகளுக்கு முன்னர் பரிபூர்ணமடைந்தவராவார். இவர் திரு.வி.க. அவர்கள் மார்க்கஸீசநெறியில் மிகவும் ஈர்க்கப்பட்டு சோஷலிசத்தைத் தழுவி வாழ்ந்து விட்டார். அன்னார்,

ஞானியார் சுவாமிகள் சிறிது தொலைவில் வருவதை அறிந்ததும், அந்த திக்கை நோக்கி சாஷ்டங்கமாகத் தரையில் விழுந்து வணங்குவார் அவர் சீடர். காரணம் அத்தகு பெருமை வாய்ந்தவர் ஞானியார் சுவாமிகள் என்பதைத் சொல்லாமலே அறிய முடிகிறது. ஞானியார் சுவாமிகள் ஒரு சமயம் பழநிக்குச் சென்று விரிவுரை ஆற்றிவிட்டு அங்கிருந்து பல்லக்கில் (அக்காலத்தில் இத்தகையோர்களுக்கு பல்லக்கு பிரவேசம் தான்) புறப்பட்டு வரும்போது விக்கல் எடுத்து தண்ணீர் கேட்டு, கொண்டுவருவதற்குள் தேகம் ஆடிவிட்டது பல்லக்கிலேயே பரிபூர்ணமடைந்துவிட்டார் அந்நாளும் தைப்பூசத் தினமாகும்.

"மணங்கமழ் தெய்வத்து இளநலம் காட்டுபவன் முருகன்" என்பார் நக்கீரனார். முருகன் இளையவனாக, அழகுள்ளவனாக மட்டும் விளங்குபவன் இல்லை.

ஞானப்பழமாக அன்னைக்கும், ஞானகுருவாகத் தந்தைக்கும் வாய்த்தவன் முருகன் என்பதாகத்தான் வரலாறுகள் கூறுகின்றன ஞானப்பழமாக நிற்கிற நிலைக்கு ஒரு நல்ல கதை.

நாரதரால் கொடுக்கப்பட்ட பழத்தை இருவருக்கும் கொடுப்பதில் சிக்கல் உண்டாயிற்று. அதனால் எம்பெருமான் யார் முதலில் உலகை வலம் வருகிறார்களோ அவர்களுக்குத்தான் பழம் எனப் பரீட்சை வைத்தார் விநாயகர் மூஷிகவாகனத்தின் மேலேறி தாய் தந்தையரை வலம் வந்து பழத்தைப் பெற்று கொண்டார். முருகன் ஏமாந்து நிற்க, அண்ணன் தனது ஞான உத்தியை உபயோகித்து அல்லவா பழத்தைப் பெற்றுக் கொண்டார் நாமும் இன்று முதல் ஞான உத்தியைக் கடைபிடிக்க வேண்டும். உடனே முருகன் கௌபீனத்தை மட்டும் தரித்துக் கொண்டு வெளியேறி விடுகிறான். அந்த

கோபத்தினால் பழநிமலை மீது நின்று விடுகிறார். பழம் நீ என்பது தான் பழநி என்று ஆகியிருக்கிறது எனப் புராணச் செய்தி கூறுகிறது. இருந்தாலும் இந்த இடம் பொதினி என்று தான் இருந்திருக்கிறது. இதற்கு ஆதாரம் :

"வண்டு படத் துதைத்த கண்ணி யொன்கழல்
உருவக் குதிரை மழுவர் ஓட்டிய
முருகன் நற்போர் நெடுவேள் ஆவி
அறு கோட்டு யானைப் பொதினியாங்கண்"

என்று மாமூலனார் பாட்டையும் ஆதாரம் காட்டுவார். மலை மீதில் இருக்கும் முருகன் அபிஷேகப்பிரியர். ஒரு பழத்துக்காக கோபித்தவருக்கு பல பழங்களைக் கொண்டு தயாரித்த பஞ்சாமிர்தத்தாலே அபிஷேகம் நடைபெறுவதை இன்றும் காணலாம்.

இந்த ஆண்டவனைப் பற்றி அன்பர்களுக்கு ஒரு ஐயம் இவன் மொட்டை ஆண்டியா, சடையாண்டியா என்று சந்தேகம் எழக்கூடும். அவனுடைய உருவத்தை, தலை முண்டிதம் செய்து கொண்டு மொட்டை ஆண்டியாகத்தான் கடைகளில் விற்கும் படங்களில் காணலாம். அது காரணம் பற்றியே, அந்தப் படங்களை பூஜை அறையில் வைத்து பூஜிக்க பலர் துணிவதில்லை. வணங்குபவர்களையும் மொட்டை அடித்து விடுவானோ எனும் வேண்டாத அச்சம். ஆனால் மூர்த்தியின் வடிவத்தை அபிஷேக காலத்தில் நோக்குபவர்க்குத் தெரியும். இதன் உண்மை. அவன் மொட்டை ஆண்டி அல்ல சடையாண்டியே என்பதை உணர முடியும். மேலும் அவனை வணங்குபவர், பிரார்த்திக் கொள்பவர் எல்லா நலன்களையும் பெறுகிறார்கள் என்பது கண்கூடு.

தமிழ் நாட்டு அறிஞன் அந்த பொய்யில் புலவன் வள்ளுவன் சொன்னான் மக்கள் இவ்வுலகில் இருக்கும்

துன்பங்களில் எல்லாம் இருந்து விடுபட வேண்டு மென்றால், இவ்வுலகில் தமது உடமை என்றுகருதுகிற பொருள்களில் உள்ள ஆசையை விட்டுவிடல் வேண்டும். அப்படி ஆசையை விட விடத்தான் பெற வேண்டிய பேறுகளை எல்லாம் பெறலாம்.

"வேண்டின் உண்டாகத் துறக்க, துறந்தபின்
ஈண்டு இயற்பாலபல"

என்பதே அவரது அருமையான விளக்கம். உண்மை தானே.

உலகினர்க்கு சகலபேறுகளையும் அளிக்க விரும்பும் நாயகன் அந்த உலகத்து உடமைகளிலேயே தானும் ஆசைவைத்து அதில் திளைத்து நின்றால் எப்படி பக்தர்களுக்கு அருள்வழங்க இயலும்? ஆதலால்தான் அவன் தன் உடமைகளை எல்லாம் துறக்கின்றான். அவன் துறவுக் கோலம்பூணுவது மக்களுக்கு அவர்கள் வேண்டும் பேறுகளை எல்லாம் அருளவே அவன் முற்றும் துறந்த கோவணாண்டியாக நிற்பதினால் அவன் துறவியானது நம்மை எல்லாம் துறவிகளாக்க அல்ல. ஆக்கம் உடையவர்களாக, அருமையுடையவர்களாக மக்கள் வாழ்வதற்காகவே ஆண்டவன் துறவுக்கோலம் பூணுகிறான். இல்லாவிடில் அவனுக்கு பற்று, துறவு என்றெல்லாம் எதற்கு?

பழநிக்கு வரும் சேவார்த்திகள் தொகையில் தமிழர்களைவிட, அதிகம் கேரள நாட்டினரே. இந்துக்களும் முகம்மதியர்களும் குடும்பத்துடன் வந்து சந்நிதிக்கு பின்புறத்தில் சந்தனக் காப்பிட்டுத்தூபம் காட்டி பாத்தியா ஓதிவணங்கிச் செல்கின்றனர். இதுபோன்று சர்வசமய சமரசம் வளர்ப்பவனாக பழநி ஆண்டவன் இங்கு நின்று அருள் புரிகின்றான் என்றால் அது போற்றுதற்குரியது தானே?

பொதுவாக தைப்பூசத்தில் ஆலயத்திருக்குளத்தில் தெப்போற்சவம் நடைபெறுவதைக் கண்டிருப்பீர்கள். நிலையாத சமுத்திரமான சம்சார துறைகளில் மூழ்கி தடுமாறாது, பாவக்கடல் கடக்கப் பதப்புணை உதவும் தவக்கடவுளின் பாதாரவிந்தங்களே தெப்பமாகக் கொண்டு, கரையேற விளக்கும் நிகழ்ச்சியின் தத்துவம்தான் தெப்போற்சவம் என்பது.

எல்லாம் சரிதான். நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப் படையில் வரும் ஆவினன்குடிதான் பழநி என்கிறார்களே. அதைப்பற்றி விளக்கம் அளிக்கவில்லையே என்று தானே நினைக்கிறீர்கள். அந்த ஆவினன் குடிக்கோயில் மலை அடிவாரத்தில் இருக்கிறது. இதுதான் நக்கீரர் காலத்துக்கு முன்பே இருந்த கோவில் நக்கீரர் மாத்திரம் அல்ல, அவ்வையாராலும் சிறபித்துப் பாடப்பெற்றது. அவ்வையார் காலத்து இதனைச் 'சித்தன் வாழ்வு' என வழங்கப் பட்டுள்ளது.

"நல்லம்பர் நல்லகுடி உடைத்து; சித்தன்வாழ்வு
இல்லம்தொறும் மூன்று எரிஉடைத்து
நல்லரவப் பாட்டுடைத்துச் சோமன் வழிவந்த பாண்டியநின்
நாட்டுடைத்து நல்லதமிழ்"

என நல்லதமிழ் பாட்டிலேயே அல்லவா இந்தச் சித்தன் வாழ்வு இடம் பெற்றுவிட்டது பழநி ஆண்டவனைப்பாடிய அருளாளர்க்குள்ளே மிகவும் சிறப்பு வாய்ந்தவர் அருணகிரியார்தான்.

"ஆவல் கொண்டு வீறாலே சிராடவே
கோமளம் பல சூழ் கோயில் மீறிய
ஆவினன் குடி வாழ்வானதேவர்கள் பெருமானே"

என ஆவினன் குடியையும் பாடி மகிழ்ந்திருக்கிறார்.

"பழனத்துவர்களேரிடவேவின்
கழனிப் புரவுகள் போதவுமீறிய
பழநிச் சிவகிரி மீதினிலேவளர்-பெருமானே"

என மலைமேல் உள்ள ஆண்டியையும் அருணகிரியார் பாடியுள்ளது கவனிக்கப்பாலது. கந்தரலங்காரப் பாடல் ஒன்றில்,

"படிக்கின்றலை பழநித்திருநாமம், படிப்பவர்தாள்
முடிக்கின்றில் முருகா என்கில் முசியாமல் இட்டு
மிடிக்கின்றிலை, பாமானந்தம் மேற்கொளவிம்மி, விம்மி
நடிக்கின்றில், நெஞ்சமே தஞ்சம் எதுநமக்கினியே"

எனும் மதுரங்கனிந்ததேனொழுகும் பாடல் எத்தனை முறை வேண்டுமானாலும் பாடிப்பரவலாம் போலிருக்கிறது.

இதுகாறும் கூறிய பூசத்திருநாளை தமிழர்கள் முக்கிய சிறந்த நாளாகக்கருதி ஆலயமெங்கும் விழாக்களின் மூலம் கொண்டாடி வருவதை இன்றும் காண்கிறோம். இன்றைக்கும் ஞானசம்பந்தரது பாடலில் ஜீவன் உள்ளதை உணர முடிகிறது.



வள்ளலார்

# 27. மாசிமகத்தின் சிறப்பு

சிவனையே முழுமுதற்கடவுளாகப் பாவித்து வணங்கிய 63 நாயன்மார்களில் ஞானசம்பந்தரும் ஒருவராவார். சம்பந்தரைப் பாலைக்கொடுத்து சீர்காழியில் உமாதேவியார் ஆட்கொண்டதால் சமணம் அழியவும், சைவம் தழைக்கவும் திருக்கடைக்காப்பு கிடைக்கவும் வழிகோலியது.

அருணகிரியார், "அருதியாய் இயலாய் இயல் நீடிய தொகுதியாய்" எனத் தொடங்கும் பாடலின் 5-வது அடியில்

"கருதுமாறிருதோள் மயில்வேலிவை
கருதொணாவகையோர் அரசாய்வரு
கவுணியோர்குயவேதியனாய்உமை -கனபாரக்
களபபூணமுலையூறிய பாலுணுமதலையார்
மிகுபாடலின் மீறிய கவிஞனாய்"

பாடியுள்ளது கவனிக்கற்பாலது.

ஞானசம்பந்தர் காலந்தொட்டு கபாலீஸ்வரரையே முதன்மையாக வைத்து இலக்ககியம் படைக்கும் வழக்கம் இருந்து வந்தது. கற்பகவல்லிமீது, சம்பந்தர் காலத்திருந்தே எந்த நாயன்மார்களாலும் பாடல்கள் புனைந்ததாகத் தெரியவில்லை.

சில நூற்றாண்டுகளுக்கு முன்புதான் சக்தி வழிபாடு மக்களிடையே மிகுந்ததாலும், கற்பகவல்லிமீது பாடல்கள் தோன்றலாயின.

யோகியாயிருக்கும் இறைவன் போகியாய் இருக்க வேண்டும் எனும் அவசியம் இல்லாத போதிலும் ஏனைய ஜீவன்களைப் போலன்றி, மனிதர் வர்க்கம் திருமணம் செய்து கொண்டு வாழ்வதை உணர்த்தவே. யோகியாய்

உமாதேவியாரை திருமணம் செய்து கொண்டதின் தத்துவமேயாகும்.

ஞானசம்பந்தர் ஷேத்திராடனம் செய்து கொண்டு, திருவொற்றியூரை அடைந்த செய்தியை, சிவநேசம் செட்டியார் கேள்விப்பட்டார். சம்பந்தரை ஒற்றியூரி லிருந்து, அன்றைய நாளில் சாந்தோம் கடற்கரையில் இருந்த மயிலை கபாலீஸ்வர ஆலயத்துக்கு வரவழைத்தார். தனது மகளின் அஸ்தியை அவர் எதிரில் வைத்து உயிர் பித்தெழ தனது வேண்டுகோளை சம்பந்தரிடம் அறிவித்தார்.

பெண்ணை உயிர் பிழைச் செய்ய இறைவனிடம் முறையிடாது, மயிலையில் நிகழும் விழாக்களின் சிறப்பைக்காண அப்பெண்ணை அழைப்பது போன்று 10 பதிகங்கள் பாடியருளினார். அந்த பதிகங்களில் ஒவ்வொரு மாதத்திலும் தமிழர்கள் கொண்டாட வேண்டிய விழாக்களின் சிறப்புக்களை உணர்த்தியுள்ளார்.

ஒவ்வொரு மாதம் பவுர்ணமியன்று எந்த நட்சத்திரம் சேர்கிறதோ அன்று விழா கொண்டாட வழிவகுத்துள்ளார்.

மாசிமாதத்தில் பவுர்ணமியன்று மக நட்சத்திரம் சேர்வதால் அன்று கடலாட்டுவிழாவை கொண்டாடுங்கள் என சம்பந்தர் பாடியுள்ள பதிகத்தைப் பார்ப்போம்.

"மடலார்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்
கடலாட்டுக்கண்டான் கபாலிச்சரம் அமர்ந்தான்.
அடல் ஆனேறூரும் அடிகளடி பரவி
நடமாடல் காணாதே போதியோ பூம்பாவாய்"

இப்பதிகம் 1200 ஆண்டுகளுக்கு முன்னர் பாடிய பதிகமானாலும் இன்றைய நாள்வரை, சென்னை கடற்கரையிலும் நதிகள் கூடும் ஏனைய சிவஸ்தலங்களிலும்

சுற்றியுள்ள பல ஆலயங்களின் மூர்த்தங்கள் ஒன்று கூடி அடியார்களுக்குக் காட்சி தருவது சம்பந்தரது வாக்கினுக்குள்ள ஜீவனை காலத்தால் குன்றாது இன்றுவரை உணரமுடிகிறது.

மாசிமகம் - என்பதைப்பற்றி சிறிது ஆராய்வோம். மகம் - என்பது ஒரு நட்சத்திரம். கிரகம் - கோள் என்பதை நவக்கிரகம் என்பது பிற்காலத்தில் ஏற்பட்டதொன்று முன்னோர்கள் கிரகங்களை, ஆலயங்களில் நிறுவி வணங்கியதாகத் தெரியவில்லை. வைணவ ஆலயங் களில் நவக்கிரங்களுக்கு உருவச்சிலை அமைத்து வணங்கியதாகவும் தெரியவில்லை.

நாளும் கோளும் நலிந்தோர்க்கு இல்லை என்பது முதுமொழி. இவைகள் நலிந்தோர்க்கு மட்டுமில்லை அடியார்களுக்குமில்லை இதனை சம்பந்தர், தாம் பாடிய கோளறு பதிகத்தில் தெள்ளத்தெளிவாக அறிவித்துள்ளார்.

இதே கருத்தினையே, பின்னர் தோன்றிய அருணகிரியாரும் கந்தரலங்காரத்தில்,

"நாளென்செயும் வினைதானென்செயும், எனை நாடி
வந்தகோளென் செயும், கொடுங்கூற்று என் செயும்"

எனப்பாடியதிலிருந்து கோள்களின் தன்மையை அறியமுடிகிறது.

கோள்களை வைத்துதான் சைவ வைணவர்கள் பலனைக் குறித்தார்கள்.

சூரியன் மகன் - சனி, மாசிமகத்தன்று பவுர்ணமியில் சூரியன் தன் மகனுடைய சனி வீட்டிற்கு (கும்பராசிக்கு) போய் இருக்கிறான்.

சந்திரன் பவுர்ணமியன்று சிம்மராசிக்கு வந்து மகத்தோடு சேர்ந்து, சூரியனைப் பார்க்கிறார்.

இதனால் சனி வீட்டிலிருக்கும் சூரியன் பலம் பெறுவதால் சனியால், உலகத்திலுள்ள ஜீவராசிகளுக்கு கெடுதி நேராது,

ஆனால் மகத்தில் சனி சேரலாமல்லவா.

மகம் - நட்சத்திரம், சனி - கோள், யாருடைய ஜாதகத்தில் அப்படி சேர்கிறதோ, அவர்களுக்கு கண்பார்வை மங்கவாய்ப்புண்டு. இதனை உறுதிப்படுத்த சுந்தரரது வரலாறு பெரிதும் உதவுகிறது.

சுமார் 800 ஆண்டுகளுக்கு முன் சுந்தரரது வரலாற்றில் சங்கிலியாரை ஒற்றியூரிலிருந்து சத்தியத்தைத் தவறி, பிரிந்து எல்லைக்கு வந்ததும் கண் பார்வையை, தன் நண்பன் எனப் பாராது இறைவன் இழக்கச் செய்தார்.

இவர் கண்பார்வை போனதற்கு இறைவனிடம் தாம் செய்த தவறை நியாயப்படுத்துகிறார். இதனைக் குறித்து இவர் பாடிய

மகத்தில் புக்கதோர் சனியெனக்கானாய்
மைந்தனே மணியே மணவாளா
அகத்தில் பெண்கள் நான் ஒன்று சொன்னால்
அழையேல் போகுருடா எனத்தரியேன்
முகத்தில் கண்ணிழந்தெங்ஙனம் வாழ் வேன்
முக்கணாமுறையோ மறையோதீ
உகைக்குந்தண்கடல் ஓதம்வந்துலவும்
ஒற்றியூர் எனும் ஊருறைவானே.

இப்பாடலில் சுந்தரர் காலத்திலேயே நட்சத்திரத்தின் தன்மையையும் கோளின் செயலையும் அறிவுறுத்தி உள்ளது சிந்திக்கப்பாலது. இதனால் மாதத்திற்குஉள்ள சிறப்பை அறியமுடிகிறது.

# 28. பங்குனி மாதச் சிறப்பு

தீயவற்றைக் கனவிலும் நினையாத தூயமாந்தர்கள் வாழும் நாடு தொண்டை நாடு.

தொண்டை நாட்டில் கல்வியில் கரையிலாத திருநகராய் விளங்குகின்றது காஞ்சிமாநகரம்.

காளிதாசர் 'நகரேஷு காஞ்சி" என்று போற்றுகின்றார்.

"தரையிடங்களில் சிறந்த காஞ்சியந்தலம்" என்பது கச்சியப்பர் வாக்கு.

முக்தி தரும் ஏழு திருத்தலங்களில் காஞ்சியும் ஒரு திருத்தலம் ஆகும்.

அயோத்தி, மதுராபுரி, ஹரித்துவார், காசி, அவந்தி, துவாரகா, காஞ்சி ஆகியன முக்திதரும் ஏழு திருத்தலங்கள் ஆகும்.

"மலர்தலை உலகத்துள்ளும் பலர் தொழ
விழவு மேம்பட்ட பழவிறல் மூதூர்"

என காஞ்சி நகரம் திருவிழாக்களால் மேம்பட்ட பழம்பதி என்பதைப் பெரும்பாணாற்றுப்படை எனும் சங்க இலக்கியம் கூறுகின்றது.

"கோயிற் திருநகர்" என்ற புகழ் கொண்ட காஞ்சிபுரத்தின் கிழக்கே வரதரும், மேற்கே ஏகாம்பரரும், நடுவில் காமாட்சியம்மன் கோயிலும அமைந்திருப்பது மதுரை மீனாட்சியம்மன் திருமணக் கோலத்தை நினைவு படுத்துவதாகும்.

ஒருமுறை விளையாட்டாக தேவி பார்வதி இறைவனின் கண்களை மூட, உலகம் இருள்சூழ உயிர்கள் தடுமாறின.

இத்துன்பம் விளைத்த தேவியின் விளையாட்டுக்குக் கழுவாய் செய்ய "எம்மை எவரும் அடைய வாயிலாய் உள்ள காஞ்சிக்குப் போய் ஆகம முறைப்படி அர்ச்சனை செய்து முப்பத்து இரண்டு அறங்களையும் செய்க" எனப் பணித்தார் சிவபெருமான்.

பத்ரிகாச்சிரமத்தில் காத்யாயனர் குழந்தைப் பேற்றுக்காகத் தவம்செய்ய, அம்பிகை அவ்விடத்தில் குழந்தையாகத் தோன்றித் தவழ்ந்தார்.

கார்த்தியாயினி என்ற பெயர் கொண்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுகமாக வளர வளர, முனிவருக்கு அவதாரக் காரணங்கள் விளங்க அம்மையைக் காஞ்சிக்கு அனுப்பினார்.

காஞ்சிக்கு வந்த அம்பிகை, நான்கு வேதங்களைக் கிளையாகக் கொண்ட ஏக அம்ரம் அதாவது ஒற்றை மாமரத்தின் அடியில் மண் லிங்கத்தை ஊசி முனையில் இருந்து தவம் செய்து வழிபட்டார்.

அப்போது சிவபெருமான் தம் சடையிலுள்ள கங்கையைப் பெருகச் செய்தார் அன்னையின் கட்டளைப்படி பணிப்பெண் ஒருத்தி காளிவடிவில் தடுத்தார். தடுக்க இயலவில்லை, விஸ்வரபியாகத் திருமாலும் தடுத்தார். அவராலும் தடுக்க இயலவில்லை.

இது இறைவனின் திருவுள்ளம் என்று அறிந்து மணல் கரைந்து இலிங்கவடிவம் போகாதிருக்க இறைவனைச் சரண்அடைந்ததேவி இலிங்கத்தையே கையாலும், மார்பாலும் தழுவிக் கொண்டார்.

தேவியின் பொன்மேனி தழுவ மகிழ்ந்த சிவபெருமான் மாமரத்தினின்று வெளிப்பட்டு காட்சி வழங்கினார்.

இதனால், ஏகாம்பரேஸ்வரருக்குத் "தழுவக் குழைந்த நாதர்' என்று பெயர் வந்தது.

பங்குனி உத்திர முழுநிலாநாளில் காமாட்சி ஏகாம்பரேஸ்வரர் திருமணம் நடைபெற்றது.

ஒவ்வொரு பங்குனி உத்திர முழுநிலா இரவில் தேவி காமாட்சி-ஏகாம்பரேஸ்வரர், திருமணம் மிகச் சிறப்பாக நடைபெறும். அதே நேரத்தில் அதே மண்டபத்தில் மணமக்கள் பலரும் திருமணம் செய்து கொள்ளும்காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும்.

"ஏலவார் குழலாள் உமை நங்கை
என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற
காலகாலனைக் கம்பன் எம்மானைக்
காணக் கண் அடியேன் பெற்றவாறே"

என்பது சுந்தரர் தேவாரம்.



காமாட்சி கம்பா நதியில்

# 29. ஆண்டி அமைத்த ஆலயம்

## (பூசலார் நாயனார் வரலாறு)

அடியேன் ஒரு சமயம் கந்தர் அலங்காரத்தில் வரும் பாடலைப் படிக்க நேர்ந்தது.

“ஆங்காரமும், அடங்கார், ஒடுங்கார் பரமானந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்புமறார். தினைப் போதளவும்
ஓங்காரத்துள் ளொளிக்குள்ளே முருகனுருவம் கண்டு
தூங்கார், தொழும்பு செய்யார் என் செய்வார் யமதூதருக்கே”

எனும் பாடலினால் மனம் ஈர்க்கப்பட்டு, இதுபோன்று நாயன்மார்கள் யாராவது வாழ்ந்து காட்டியுள்ளனரா என ஆராயும் சமயம், பூசலார் நாயனார் பற்றிய வரலாறு என் மனதை தெளியச் செய்தது. உடனே பூசலார் நாயனார் சரித்திரத்தை பற்றி ஒரு கட்டுரை எழுத என் மனம் தூண்டியதில் வியப்பொன்றுமில்லை.

முழுமுதற் கடவுளான சிவன்பால் செயற்கரிய தொண்டுகளைச் செய்த 63 நாயன்மார்களின் சிறப்பினைக் குறித்துக் கூறுவது பெரிய புராணம். இதனைச் சேக்கிழார் இயற்றினார்.

கதை என்றால் புராணம், மாக்கதை எனச் சேக்கிழாரே குறிப்பிட்டுள்ளதால், இது பெரிய புராணம். மிகவும் எளிமையாக வாழ்ந்த அடியார்களின் வரலாறுகள்தான் இந்தப் புராணத்தில் கூறப்பட்டுள்ளன. அதனால் மாக்கதை என்று சேக்கிழார், விநாயகர்துதியில் பாடியுள்ளார்.

தமிழில் சைவப் பெருமக்களுக்கு, இறைவனும், மண்ணுயிர்களும் கைகோர்த்து நடமாடிய இலக்கியங்கள் இரண்டு. ஒன்று, திருவிளையாடல் புராணம் - மற்றது, பெரியபுராணம் - முன்னது, மண்ணுயிர்பால் கொண்ட கருணையால், இறைவன் தாமே விண்ணுலகுவிட்டு மண்ணுலகுக்கு இறங்கிவந்து அருள்பாலித்த வரலாறு,

பின்னது, மானுடர்களின் செயற்கரிய தொண்டுகளே, விண்ணிலிருந்து இறைவனை பூலோகத்துக்கு ஈர்த்துவந்த வரலாறு.

## இறைவரோ தொண்டர் உள்ளத்தொடுக்கம்

"தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே" எனும் மூத்தோர் வாக்கினுக்கேற்ப, அடியார்களின் சிறப்பைப் பற்றிக் கூறப்பட்டுள்ளதால், இதனை பெரிய கதை அல்லது மாக்கதை என்பர். இராமபிரானையே மூலப்பொருளாக வைத்து, கம்பர் இராமாயணம் இயற்றியதால், இவரை கவிச்சக்கரவர்த்தி என்றே புகழலாயினர். மாறாக, அடியார்களின் பெருமையை சிறப்பெனக்கருதி, திருத்தொண்டர் புராணம் இயற்றியதால், இவரை தெய்வச் சேக்கிழார் என அழைக்கலாயினர்.

இறைவன்பால் செயற்கரிய தொண்டினைச் செய்த அடியார்களின் முயற்சிக்கு வாழ்த்து கூறவே, இறைவன் மண்ணுலகுக்கு வந்ததாக சேக்கிழார் இனம் காட்டுகிறார். இராமாயணம், மகாபாரதம் போன்ற நூல்கள் சமஸ்கிருதத்தில் இருந்ததைத் தழுவித் தமிழில் எழுதப்பட்டது. தமிழில் இயற்றப்பட்ட பெரியபுராணம் ஒன்றுதான் சமஸ்கிருதத்தில் உபமன்யு முனிவரால் இயற்றப்பட்டதாகக் கூறப்படுகிறது. இதனால் பெரிய புராணத்தின் சிறப்பை அறியமுடிகிறது.

தொண்டை நன்னாட்டில் உள்ள தலங்களுள் ஒன்றாகத்திகழ்வது திருநின்றவூர் எனும் தலம். இத்தலத்தில் மறையவர் குலத்திலே, பூசலார் என்னும் சிவனடியார் தோன்றினார். பெற்றோர்கள் வைத்த பெயர் பின்னாளில் மறைந்துவிட்டது. சதாகாலமும் மேனி முழுவதும் திருநீறு பூசிக்கொள்வது இவரது வழக்கம். அதனால் இவரை மக்கள் பூசலார் என்றே அழைக்கலாயினர்.

இவர் பரம ஏழை. வயதினாலும் முதிர்ந்தவர். எனினும், தான் தோன்றிய இத்தலத்தில் இறைவனுக்கு ஓர் ஆலயம் கட்ட மனம் உந்திற்று. பொருளுதவிக்கு யாரும் முன்வரவில்லை.

முடவன் கொம்புத்தேனுக்கு ஆசைப்பட்டது போல் ஆகிவிடுமோ என முதலில் அச்சமுற்றார். பொருளாலும், உடல் உழைப்பினாலும் கட்ட முடியாத ஆலயத்தை, மனத்திலேயே கட்டுவதென முடிவு எடுத்தார். நல்ல நாள் பார்த்து, இலுப்பை மரத்தடியில் அமர்ந்து "இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க" எனும் மணிவாசகரது கருத்துக்கேற்ப சித்தத்தை சிவன்பால் வைத்து, உள்ளத்தினுள்ளே, இரவு பகலென பாராது பணியைத் துவங்கி விட்டார்.

அது சமயம் கி.பி. 7-ம் நூற்றாண்டில் காஞ்சியில் இராஜசிம்மன் எனும் பல்லவன் ஆண்டுவந்தான். மன்னனும் காஞ்சியில், கைலாசநாதருக்கு ஓர் ஆலயம் கட்டவிரும்பினான். "அரசன் அன்றே சாதிப்பான், தெய்வம் நின்றே சாதிக்கும்" எனும் மூதுரைக்கேற்ப, அரசனே ஆலயம் நிறுவமுற்பட்டதும் குடிமக்களும் இத்திருப் பணிக்கு பூரண ஒத்துழைப்பை நல்கினர்.

பூசலார் மனத்தினாலேயே ஆலயம் கட்டி எல்லாப் பணிகளையும் பூர்த்தி செய்தார். அதாவது கோபுரமும், விமானமும் அமைத்துத் திருக்குளமும் ஏற்படுத்தினார். இறைவனை பிரதிஷ்டை செய்ய நாளும் குறித்து விட்டார்.

இராஜசிம்மனும், அதே சமயம், 'தாம் நிர்மாணித்த கைலாச நாதர் ஆலயத்தைப் பூர்த்தி செய்து, பிரதிஷ்டைக்கு அதே நாளைக் குறித்துவிட்டார்.

விழாவினுக்கு முந்தின நாள் இறைவன் நடு நிசியில் அரசனின் கனவில் தோன்றி, "அன்பனே, உன்னுடைய கோயிலில் நாளையத்தினம் பிரதிஷ்டை செய்வதை,

வேறோர் தினத்துக்குமாற்றி வைத்துக் கொள். திருநின்றவூரில், பூசலார் எனும் எமது அன்பன் பல நாட்களாக உழைத்துக் கட்டிய ஆலய பிரதிஷ்டைக்கு நாளைய தினம் செல்ல வேண்டியுள்ளது" என அசரீரியாக ஒலித்தார்.

அரசன் ஒன்றும் புரியாது, துயிலினின்றும் துடித்தெழுந்து அரசியாரோடு, பரிவாரங்களையும் அழைத்துக் கொண்டு திருநின்றவூர் சென்றார். அங்குள்ளோரிடம், புதிதாகக் கட்டியுள்ள ஆலயம் பற்றி விசாரித்தார். அது போன்று ஆலயம் இங்கு யாரும் கட்டியதாகத் தெரியவில்லை. எதற்கும், அதோ! அங்கே தியானத்தில் இருக்கும் முதியவரை கேட்டுப் பாருங்கள் என ஊர்மக்கள் கூறினர்.

அரசனும், அம்முதியவரை அணுகி, "சுவாமி இங்கே பெரிய ஆலயம் ஒன்று எங்கே கட்டப்பட்டு, பிரதிஷ்டையும் இன்று நடக்கப் போவதாக கேள்விப்பட்டேன்" என வினவினான்: "எல்லாம் அற என்னை இழந்த நலம் சொல்லாய் முருகா" என அருணகிரியார், கந்தர் அனுபூதியில் பாடியதற்கேற்ப, பத்மாசனத்தில் இருந்த முதியவர் கண்விழித்து பார்த்தார். அரசரிடம் "இப்பொழுது என்னை தொந்தரவு செய்யாதீர், அடியேன் நிர்மாணித்த கோவிலில் இப்பொழுதுதான் பிரதிஷ்டை நிகழ்ந்து கொண்டிருக்கிறது" எனக் கூறினார்.

அரசன் ஒன்றும் புரியாது, சிறிது விளக்கமாக முழுவிவரங்களை கூறும்படி கேட்டான். பூசலாரும், தம் இதயத்திலேயே கோயில்கட்டியதையும், அது சமயம் பிரதிஷ்டை செய்த விவரத்தையும் விளக்கமாக அரசருக்குக் கூறலானார்.

உடனே அரசன், மெய்மறந்து, பூசலார் பாதத்தில் வீழ்ந்து வணங்கினார். அடியேன் பொன்னாலும்,

கல்லினாலும் நிறுவிய கோயிலைவிட, உம்முடைய இதயக் கோயிலையே பெரிது என உவந்து, இறைவனே பிரதிஷ்டைக்கு வந்துள்ளார் என்றால், அடியவர் பால் வைத்திருக்கும் கருணையை என்னவென்று புகழ்வது?

"இறைவரோ தொண்டருளத்து ஒடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே"

எனும் மூதுரைவாசகம் அடியேன் அறிவுக்கு உணவு அளித்ததுபோல் பிரேமை உண்டாயிற்று. அமர்ந்த கோலத்தில் பூசலார் இதயத்தில் இறைவன் காட்சி கொடுப்பதை ஆலயத்தில் பஞ்சலோகத்தில் வடித் துள்ளதைக்க காணலாம்.

பூசலாரும், திருமாலோடு நான்முகனும் தேடித் தேடொணாத் தேவனை, என் உள்ளே தேடிக்கண்டு கொண்டேன் எனக் கூறி கண்ணீர்மல்க துதிசெய்தார். இத்தகு சீலம் வாழ்ந்த பூசலாரைப்,

"நீண்ட செஞ்சடை யினார்க்கு
நினைப்பினால் கோயிலாக்கி
பூண்ட அன்பு இடையறாத
பூசலார் பொற்றாள் போற்றி"

எனச் சேக்கிழாரே புகழ்ந்து பாடியுள்ளது மிகவும் போற்றத்தக்கது. இதனால் குற்றமற்ற பூசலார் மனத்தினால் முயன்று கட்டிய கோயில், காஞ்சியில் இராஜசிம்மனால் அமைத்த கற்றளியிலும் சிறந்ததாக இறைவன் கருதுகிறான் என்பது வரலாறு.

இத்தகு அற்புதங்கள் உண்மையில் நடந்ததா? நடந்திருக்குமா? என்றெல்லாம் கருதுபவர்களை, (ஆன்மீகச் சக்கரம் சுழல, ஊற்றப்படும் எண்ணைக்கு நிகரானவர்கள் எனக் கருதுதல் வேண்டும்). இத்தகு ஆராய்ச்சியில் காலம் கழிப்பதை விடுத்து, அவற்றில்

பொதிந்துள்ள ஆன்மீகப் பயன்பாட்டைத் தேடி வெளிப்படுத்துவதையே அறிஞர்கள் தம் கடமையாகக் கருதிடல் வேண்டும் எனக் கருதுகிறார்கள்.

திருநின்றவூருக்கு, இன்றைய நாளில், மின்சாரப் புறநகர் ரயிலிலோ, பேருந்து மூலமாகவோ சென்னையிலிருந்து செல்ல வசதியுள்ளது. காஞ்சிக்கு வடகிழக்கே 32 கி.மீ. தொலைவில் உள்ளது. ரயிலடியிலிருந்து தெற்கு நோக்கி ஒன்றரை கி.மீ. (1 மைல்) தூரம் செல்ல வேண்டும். இன்றைய நாளில், திருநின்றவூர் என்பது திண்ணனூர் என மக்களால் மருவி வழங்கப் படுகிறது.

பூசலார் ஆலயம் செல்லும்முன்பே, முதலில் பெரிய கோபுரத்தோடு கூடிய கோயில் இருக்கும், அருள்மிகு பக்தவத்சலர் வழிமறிப்பார். நமக்குத்தான் சைவ வைணவபேதம் கிடையாதே! வழி மறிக்கும் பக்தவத்சலரையே தரிசிப்போம்.

தெய்வப் பொலிவோடு செல்வமும் செழித்து விளங்கியதால் இத்தலம் திருநின்றவூர் என வழங்கலாயிற்று எனப் பலரும் கூறக்கேட்டேன்.

அருள்மிகு பக்தவத்சலர் கோயிலிருந்து கிழக்கே சிறிது தொலைவிலேயே பூசலார் ஆலயத்தைக் காணலாம். அன்றைய நாளில் கோபுரம் ஏதுமின்றி தகர கொட்டகையிலிருந்து, பின் வந்தவர்கள் சிறு கோயிலாகக் கட்டியுள்ளனர்.

இக்கோயிலில் வீற்றிருப்பவரே அருள்மிகு இருதயாலீஸ்வரர், துணைவியார் அருள்மிகு மரகதாம்பிகை. கர்ப்பக் கிகரகத்துக்குள்ளேயே உள்ள சிவலிங்கத் திருமேனிக்கு இடப்பக்கத்தில், கற்சிலையினாலான, பூசலார் திருமேனியை நின்ற கோலத்தில் காணலாம்.

அத்தாட்சிக்கு, பிரகாரத்தில், இராஜசிம்மன் உருவச் சிலையும் காணலாம். பிரகாரத்தின் தெற்கு மதிலில் தனியாக உள்ள சிற்பத்தில், பூசலார் மனக்கோயில் கட்டியிருப்பதைச் சித்தரித்துள்ளனர். உள்பிரகாரத்தில் எனைய தெய்வங்கள் நிறுவியிருந்த போதிலும், இவர்களை விஞ்சிவிடும் விதத்தில், பக்தவத்சலராம் மகாவிஷ்ணுவே மோகினி உருவத்தில் பஞ்சலோகத்தினாலான சுமார் 18 அங்குலம் உயரத்தில் காட்சி கொடுப்பதைக் காணலாம். நீண்ட நேரம் அதன் அழகைக் கண்டுகளிக்கலாம்.

இவ்வாலய இறைவன், அன்று பூசலாரின் இதயத்தில் ஒளித்திருந்ததுபோல், இன்று நின்றவூரில் ஓர் ஒதுக்கு புரத்திலேயே வீற்றிருப்பதைத் தேடிப் பிடித்து, திருப்பணி செய்திருக்கிறார்கள்.

இவ்வூரின்கண் நிகழ்ந்த மற்றுமோர் வரலாற்றினை உங்களோடு இத்தருணத்தில் பகிர்ந்து கொள்வது சிறப்பாகும்.

இவ்வூரில் வசித்த சங்கீதப்பிரியர், கொடை வள்ளல் என அழைக்கப்படும் காளத்திவாணர், தமிழறிஞர்களையும் சங்கீத பாடல்களையும், சிவனடியார்களையும் ஆதரித்து வந்தார்.

வெகுநாள்களாகவே வறுமையில் வாடிய புலவர் ஒருவர், திருநின்றவூர் சென்றால், தமது புலமைக்கு ஏற்ற சன்மானம் கிடைக்குமென நினைத்தார். உடனே புறப்பட்டுவிட்டார். நடுவழியிலில் இருட்டிவிட்டதால், அங்குள்ள ஒரு சத்திரத்தில் தங்க நேர்ந்தது. அது சமயம் அங்குள்ளவர்களும், காளத்திவாணரின் கொடையையும், ரசிகத்தன்மையும் பாராட்டி பேசுவதை எல்லாம் கேட்டறிகிறார். அது சமயம் ஒரு நம்பிக்கை இவருக்குப் பிறக்கிறது. மறுநாள் காலை காளத்திவாணரைக் கண்டதும், தன் வறுமை, தன்னை விட்டு

தொலைதூரத்தில் ஓடிவிடுமே. ஐயோ பாவம் அது இன்றிரவு ஒரு வேளையாவது நம்மிடம் இருந்துவிட்டு போகட்டுமே என்று பரிவுடன் நினைக்கிறார், தன்னை இதுகாறும் தொடர்ந்து வந்த வறுமையின்பால் ஏற்பட்ட பரிவு, ஒரு பாட்டாகவே வெளிவருகிறது அன்றிரவு சத்திரத்தில்.

நீளத்திரிந்து உழன்றாய் நீங்கா நிழல்போல
நாளைக்கு இருப்பாயோ? நல்குரவே! காளத்தி
நின்றைக்கே சென்றக்கால், நீ எங்கே! நான் எங்கே!
இன்றைக்கே சற்றே இரு

என்பது. ஆம், இன்றைக்கே நாமும் திருநின்றவூர் செல்வோம். நாமும் நினைப்பினால் கோயில் அமைத்த பூசலாரை நினைத்துக்கொண்டே, அங்குள்ள பக்த வத்சலரை, எம்மைப் பெற்றதாயாரை, இருதயாலீஸ்வரரை, உலகத்தையே இரட்சிக்கும் அன்னை மரகதாம்பிகையை வணங்குவோம்! அதுவரையில் நாம் செய்த பழவினை களும் நம்மோடு இருந்துவிட்டு போகட்டுமே என்று அவைகளிடம் கொஞ்சம் அனுதாபமும் காட்டலாம் தானே!



பூசலார் நாயனார்

# 30. தன் கடன் பணி செய்யும் நவக்கிரகங்கள்

கிரகம்-வடமொழிச் சொல். தமிழில் இதனை கோள் என்பர். பிரமன், உலகில் எண்ணிலா அனைத்து ஜீவராசிகளை படைத்த போதிலும், அவைகளின் கிரக விகிதாசாரப்படி நிகழ்த்தவே 9 பிரஜாபதிகளை தோற்றுவித்தார் என அறியப்படுகிறது. அவைகளே 9 கிரகங்கள் என வடமொழியில் வழங்கப்படுகிறது.

சூரியன் தானே பிரகாசிப்பான். சந்திரன், சூரியனிடமிருந்து ஒளியைப் பெற்று நமக்கு வழங்குகிறான். இந்தக் கோள்களை வைத்து தான், வைணவர்கள், சைவர்கள் பலன்களை குறித்தனர், சூரியனை வைத்துக் கணக்கிடுவதை "சௌரமானம்" என்றும், சந்திரனை வைத்துக் காலத்தைக் கணக்கிடுவதை "சாந்திரமானம்" எனக்கூறினர்.

ஒவ்வொரு கிரகங்களும், ஒவ்வொருவர் வாழ்விலும் எந்தளவு பொருந்துவது என்பதையும், எந்த முறையைக் கையாண்டால் பயனுள்ளவையாகும் என்பதையும் ஆராய்தல் யாவர்க்கும் அவசியம்.

நவக்கிரகங்கள் மக்களிடையே மனதில் வேரூன்றி பரிகாரம் செய்வதை யாவரும் அறிந்ததே.

உங்கள் ஜாதகத்தில் கூறப்பட்டுள்ள கிரகதோஷங்கள் 'நீங்க முன் கூட்டியே பரிகாரம் செய்திருப்பீர்களோயானால், நிவர்த்தியாகியிருக்கும்' எனக்கூறுவது, சோதிடர்களுக்கே கை வந்தகலை. அவ்வாறு நிவர்த்தி செய்தும் நிறைவேறாது, மாறுபட்ட விதத்தில் அமைந்துவிடச் செய்வது கிரகங்களுக்கே உரியகலை. பலன் சொல்லும் சோதிடர்களில்

ஒரு சிலர் இறைவனின் பேரில் நம்பிக்கை வைத்துக் கூறும் நல்லுரைகளே சில சமயங்களில் எவ்வித பரிகாரமும் இன்றி பலிதம் ஆகின்றதையும் அறிய முடிகிறது.

உதாரணத்திற்கு தசரதர், ராமனுக்கு முடிசூட்ட அனைத்து ஏற்பாடுகளையும் செய்தபோதிலும், அவ்வாறு நிகழாது போனது யாவரும் அறிந்ததே.

அனைவரும் ஏதாவது ஒரு வகையில் நன்மை தீமைகளை அனுபவித்துக் கொண்டு தான் உள்ளார்கள். யாவரும் இதற்கு விதிவிலக்கல்ல. மனிதர்கள் சில நேரங்களில், துன்பமோ, கவலையாலோ மனம் பேதலிக்கும் போது தான், தங்கள் ஜாதகத்தை புரட்டிப்பார்த்து, பலனைத் தெரிந்து கொள்ள முயற்சிக்கின்றனர்.

வெளியே உள்ள இருட்டை விரட்ட, ஒருவன் வாளிவாளியாக நீரை வீதியில் கொட்டின போதிலும், இருட்டை வெளியேற்ற முடியாது, இருள் என்பது ஒன்று தனியாக கிடையாது. ஒளி இல்லாத நிலைமை என்பது தான் இருட்டு. ஒரு சிறிய விளக்கை ஏற்றினாலே, இருட்டு சொல்லாமலே மறைந்து போகும்.

கவலையும் பயமும் இருட்டு மாதிரிதான். பயப்படுபவர்கள் எல்லாம் ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

எதிர்காலத்தைப் பற்றித் திட்டமிடுங்கள், தவறில்லை. எதிர்காலத்தின் கிரகப்பலன்களைக் கொண்டு நிகழவுள்ள எந்த கவலையையும் மனதில் கற்பனை செய்து அதனைக் களையும் பொருட்டு சோதிடர்கள் கூறும் பரிகாரத்தை நம்பி, புரோகிதர்கள் மூலம் சாந்தி செய்வதே பெரும்பாலோருக்கு இயல்பாகவே அமைந்துவிட்டது. பிரச்சனைகள் இல்லாமல் இருக்க வேண்டும் என நினைப்பது தவறு. பிரச்சனைகள் இல்லாத ஒரே இடம் மயானம் மட்டுமே. அதாவது

மரணத்திற்குப் பிறகு பிணங்களுக்கு எவ்வித பிரச்சனைகளும் இராது. அதனால் பிறந்த அனைவரும் இறக்கும்வரை பிரச்சனைகள் நிச்சயம் இருக்கும். இல்லையெனக் கூறுவது பொருந்தா. பிரச்சனை இல்லை என்று சொன்னால், வாழ்க்கையிலும் சுவை இருக்காது.

ஒருவருக்கு, சுகம் துக்கம் இரண்டுமே ஊழ்வினையால் அமைந்த போதிலும், துக்கம், கவலை, பயம் இவைகளை மட்டும் நிவர்த்தி செய்ய சோதிடர்களையோ, புரோகிதர்களையோ நாடுகிறோம்.

வீணாகப் பணத்தைச் செலவழித்து, அவர்களால் கூறப்படும் வெற்றுரைகளைக் கேட்டு, பரிகாரம் எனும் பெயரால், பகுத்தறிவுக்கு ஒவ்வாத பலவற்றைச் செய்து பணத்தையும் காலத்தையும் வீணே விரயம் செய்கிறோம்.

சோதிடர்கள் கூறும் பரிகாரத்தால் இவைகள் அனைத்தும் அவரவர்களுக்கு நேரவுள்ள துன்பத்தை நீக்க முடியும் என்பதை சிறிதேனும் சிந்திக்கத் தவறிவிடுகிறோம். இன்பமோ துன்பமோ எது நேர்ந்தாலும் எவரையும் அணுகி, பரிகாரம் செய்து கொள்ளாது, இரண்டையும் நம்மை நாமே ஒரு நோக்கில் பாவிக்க கற்றுக் கொண்டால் அதிலிருந்து நமக்கே தெளிவு பிறக்கும், அந்தத் தெளிவே மனச்சாந்தியைக் கொடுக்கும்.

சோதிடர்களோ, புரோகிதர்களோ, நம்முடைய தீமைகளின் செயல்களை மனச்சாந்தி செய்து கொண்டு களைய அவர்கள் கூறும் பரிகாரத்தில் வைக்கும் நம்பிக்கையை, கிரகங்களை தோற்றுவித்த மூலப்பெருளான இறைவனிடத்திலேயே, நேரிடப்போகும் தீவினைகளைக் களைய மனம் உருகி துதி செய்து நிவர்த்தி செய்து கொள்ள தவறிவிடுகின்றனர் என்பது என் அனுபவத்தில் கண்ட உண்மை. பூமா தேவிக்கும் பூகம்பம் ஏற்படுகிறது. சூரியனும்

சந்திரனும் ராகுகேதுவால் பிடிக்கப்படுகிறார்கள். மானிடர்களும், தேவர்களும் கூட விதிப்பயனைத் தவிர்க்க முடியாதவர்களாகிறார்கள். இதனை உறுதிபடுத்தும் விதத்தில் சிவனடியார்களால் நாளது வரை போற்றப்பெறும் சுந்தரர் வரலாறு ஒன்றே போதும், தனது கண்பார்வையை, திருவொற்றியூரில் இழந்த போதிலும், கண்பார்வை மீண்டும் பெற, தன்னுடைய நட்சத்திரமாகிய மகத்தைக் குறித்து துதி செய்து கண் பார்வை பெறாது, மூலப்பொருளையே துதி செய்து கண்பார்வை பெற்றது யாவரும் அறிந்ததேயாகும். சுமார் 1200 ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றிய ஞானசம்பந்தரும், கிரகங்களைப் பற்றி 10 பாடல்கள் பாடி, அவைகள் அடியார்களை ஒன்றும் செய்யாது, காரணம் இறைவனே நம் உள்ளத்தில் புகுந்துவிட்டதால், அவைகள் நமக்கு நல்லவையே செய்யும் என்பதனை உறுதியுடன் கூறியுள்ளதை நோக்கின், நமக்கு ஓரளவு மனதுக்கு ஊக்கமளிப்பதாக உள்ளது.

மேலும், சம்பந்தரையே முருகனாகப் பாவித்துப்பாடிய அருணகிரியாரும், தாம்பாடிய கந்தரலங்காரப்பாடலில்

நாளென் செயும்வினை தான் என் செயும் எனை நாடிவந்த
கோளென் செயும் கொடுங் கூற்றென் செயும்கும ரேசர் இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்குமுன் னேவந்து தோன்றிடினே

- கந்தரலங்காரம்

அடுத்து, கந்தரந்தாதி பாடலினும்,

சேயவன் புந்தி வநவாஸ மாதுடன் சேர்ந்தசெந்திற்
சேயவன் புந்தி கல்நிசாச ராங்தக: சேந்த! என்னிற்
சேயவன் புந்தி பனிப்பாநு வெள்ளிபொன் செங்கதிரோன்
சேயவன் புந்தி தடுமாற வேதருஞ் சேதமின்றே

- கந்தர் அந்தாதி

என்று பாடியுள்ளது மிகவும் போற்றத்தக்கதாகும்.

இப்பாடல்களின் கருத்தினுக்கேற்ப "நாளும் கோளும் பார்க்க வேண்டாம்" எனும் தலைப்பில், திரு. சாந்தானந்தர் 27-03-2005 தேதியன்று தினமலர் பத்திரிக்கையில் விளக்கம் தந்துள்ளது மிகவும் பாராட்டத்தக்கது.

'நாளென் செயும் கோளென் செயும்' என்பார்கள். தன்னுடைய சக்தியிலும் முயற்சிக்கான திறமையிலும் நம்பிக்கை உள்ளவர்கள் நாள் பார்க்க வேண்டிய அவசியமில்லை. குருக்ஷேத்ர போரைத் துவக்க கவுரவர்கள் நாள் பார்த்து குறித்தார்கள். கிருஷ்ண பகவான் பாண்டவர்களை நாடி நல்லநேரம் வரும்படி செய்து விட்டார். மனிதன் பிறப்பது, உயிர் காக்கும் அவசர வைத்தியம், முக்கியமான அவசர பொறுப்புகளை ஏற்பது போன்றவை நாளுக்காகவும், நேரத்துக்காகவும் காத்திருப்பதில்லை. தன்னுடைய திறமையையும், அதற்கு துணை நிற்க இறைவனின் அருளையும் தேடிக் கொண்டால் போதும். தன்னம்பிக்கையும், தெய்வ நம்பிக்கையும் இருந்தால் எந்தப் பொறுப்பையும் எப்போதும் மேற்கொள்ளலாம்.

அரசு வகுத்துள்ள சட்டத்திட்டங்களுக்கு ஏற்பவே, சிப்பந்திகள் நிறைவேற்றத் தகுதியுள்ளவர்கள் ஆவார்கள். அதேபோன்று, நவக்கிரகங்களுக்கும் பொருத்திப்பார்த்தால் ஓரளவு புரியும். நீண்டகாலமாக, வெள்ளிதோறும், தினமணி நாளிதழில் "காலம் உங்கள் கையில்' எனும் தலைப்பில், மக்களது குறைகளுக்கு பதிலளிக்கையில், கடைசியில் இறைவனையே போற்றி செய்து வருதலே உகந்த பரிகாரமாகும் என திரு. எ.எம். ராஜகோபாலன் அவர்களும் அறிவுரை கூறியுள்ளதையும் கவனித்தல் அவசியம். சோதிடச் சுவடுகளில் அதற்கு பிரமாணம் இல்லை என்பதை சோதிட நிபுணர்களே அறிவார்கள்.

எனவே சனீஸ்வரனுக்கு எள்ளு பொட்டலம் போடுதல், செவ்வாய்க்கு செவ்வரளிமாலை அணிவித்தல்,

வெள்ளியன்று ராகு காலத்தில் இராகுவுக்கு வழிபாடு செய்தல் போன்ற நவக்கிரக சாந்திகள் எனக்கூறப்படும் அனைத்தும், நமக்கு ஏற்பட்டுள்ள தோஷங்களிலிருந்து காப்பாற்றமாட்டாது என்பதை முதற்கண் புரிந்து கொள்ளுதல் வேண்டும். மேனாட்டு சோதிட வல்லுனர்கள் கிரகங்களைப் பற்றியும், அதன் பலாபலன்களை ஆராய்ந்து, அவைகளை ஏற்றுக் கொண்ட போதிலும், அவைகள் மூலம் நிகழ உள்ள தீமைகளை நிவர்த்தி செய்ய விஞ்ஞான ரீதியாக எந்த ஒரு பரிகாரமும் மேற்கொண்டதாகத் தெரியவில்லை.

ஒரு சமயம், என் நண்பர் தன்னுடைய ஷஷ்டியப்தபூர்த்தியை திருக்கடவூரில் நிகழ்த்த ஏற்பாடு செய்தார், அடியேனையும் அதில் கலந்து கொள்ளுமாறு வற்புறுத்தினார். திருக்கடவூரில் அருள்பாலிக்கும் ஸ்ரீ அமர்தகடேஸ்வரரையும் அன்னை அபிராமியையும் கண்குளிர அபிராமிபட்டருக்கு இணையாக துதிசெய்ய வகை அறியாது போனாலும், மன ஒருமைப்பாட்டுடன் துதி செய்தேன். இவ்வாலயத்தில், 16 வயது நிரம்பிய மார்கண்டேயனது உயிரைப் பறிக்க வந்த எமன் பாசக்கயிரை வீசியதும் மார்கண்டேயன், சிவனையே அரவணைத்து கொண்டதால் அப்பாசக்கயிறு சிவலிங்கத்தின் மேல் விழுந்ததும், எமனை கோபித்து, காலால் உதைத்து மார்கண்டேயனுக்கு மேலும் ஆயுளை நீடித்ததாகவும் அங்குள்ளோர்களால் கூறக்கேட்டேன்.

அதேசமயம் தன் கடமையை நிறைவேற்றும் கோள்களின் நிலைமைக்கு ஏன் இந்தக் குறை ஏற்பட்டது எனச் சிந்திக்கலானேன். மக்கள் யாவரும் தங்களது சாதகக் குறிப்பில் தெரிவிக்கப்பட்ட தோஷங்களை நீக்க, அந்தந்த கிரகங்களுக்கு ஆலய சிவாச்சாரியார்கள் வாயிலாக பரிகாரங்கள் மூலம் நிவர்த்தி செய்து கொள்வது ஒரு புதிராகவே தோன்றியது.

(பற்றற்றான் பற்றை யார் ஒருவர் பற்றுகிறார்களோ அவர்களை கிரகங்கள் பற்றாது என்பதனை திருக்கடவூர் நிகழ்ச்சியே உணர்த்திற்று.)

முற்காலத்தில், மூவேந்தர்களாலும், சிற்றரசர்களாலும், ஆலயம் நிர்மாணிக்கும்போதே நவக்கிரகங்களுக்கென்று உருவச்சிலை அமைத்து, ஏனைய மூர்த்தங்களின் சந்நிதானத்தை ஒட்டியே ஆலயத்துள் அமைத்ததாகத் தெரியவில்லை. வெளிப்பிரகாரத்தில் ஒரு மூலையிலே தான் பிற்காலத்தில் அமைத்துள்ளதைக் கவனிக்கலாம். வைணவ ஆலயங்களில் நவக்கிரபிரதிஷ்டையே கிடையாது. அதனால் அவர்களெல்லாம் அரங்கனின் வைகுந்த வாசலை அடையவில்லையா, நாயன்மார்களும் கிரகங்களை துதி செய்து பாடல்புனைந்ததாகத் தெரியவில்லை.

மேலும் கட்டுரையை விரித்தின், நீளும் எனக்கருதி இத்துடன் நிறைவு செய்கிறேன்.



# 31. வள்ளலாரும் வாழை மரமும்

அருணகிரியார், "கமலமாதுடன்" எனத் துவங்கும் திருச்செந்தூர் திருப்புகழில், கடைசி அடியில்

"வளரும் வாழையும் மஞ்சளும் இஞ்சியும்
இடைவிடாது நெருங்கியது மங்கல
மகிமைமாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே"

என்பதாகும்.

மஞ்சளுக்கும், இஞ்சிக்கும் சிறப்புக் கொடுத்துப் பாடாது, வாழைக்கு மட்டும் அடைமொழிதந்து, வளரும் வாழையும் எனப்பாடியுள்ளதைச் சிந்திக்கலானேன். வாழைக்கு மட்டும் என்ன அப்படி விசேஷம் உள்ளது?

ஏனைய மரங்கள் பட்டுப்போனதும், தன் வர்க்கத்தைத் தானே தோற்றுவிக்கும் தன்மை இல்லாது போயினும், வாழை மட்டும் இயற்கையாகவே உள்ள இனவிருத்தியைக் கொண்டதால்தான், வாழைக்கு அடைசேர்த்துப் பாடியிருத்தல் வேண்டும் எனக் கருதினேன்.

அருணகிரியாருக்குப் பிறகு யாராவது வாழைக்குச் சிறப்புக் கொடுத்துப் பாடல் புனைத்துள்ளனரா என என் மனம் அலையும் தருவாயில் கடலில் தத்தளிக்கும் ஒருவனுக்கு ஒரு கட்டு மரம் கிடைத்தது போன்று, வள்ளலாரது பாடல் ஒன்றாகிய,

"வாழையடி வாழையென வந்ததிருக்கூட்டம்
அதனின் யான் ஒருவன் அன்றோ"

எனக் கண்ணீர் மல்க முருகனிடம் முறையிட்டுக் கொண்டது நினைவுக்கு வந்தது. அடியேன் வள்ளலார் நிலையில் கண்ணீர் மல்கத் துதி செய்ய இயலாதபோதிலும்,

புறத்தே அனுபவித்ததின்பயனே, வாழையின் சிறப்புக் களைப் பற்றி ஒரு கட்டுரை எழுத முற்பட்டேன்.

நாட்டில் எங்கெல்லாம் அதர்மம் தலை தூக்கி, மக்களை இறைசிந்தனையிலிருந்து திசை திருப்ப விழையும் போதெல்லாம், 'ஆன்மீகத்தில் ஈடுபடுத்தித் தோன்றியவர்களே தபோதனர்கள் என அழைக்கலாயினர். ஒவ்வொரு காலகட்டத்திலும் தோன்றும் இத்தகையோர் களையே, வாழையடி வாழையாகத் தோன்றச் செய்வதே இறைவனுக்கு கைவந்த கலை. பிரபஞ்ச மாயையிலிருந்து விடுபட்டு, தூயநிலையான பேரின்ப வாழ்வைக்காண, தன்னலமற்ற குருவை நாடி, அவரது அருளுரையைப் பின்பற்றி வாழ்தல் அவசியம்.

ஆழ்வார்களும் நாயன்மார்களும், மக்களுக்குப் பிறவிக்கடலைக் கடக்கப் பல மார்க்கங்களை அருளிப் போந் துள்ளனர். வாழையும் கன்றும் எவ்வித மாறுதலும் இல்லாது, ஒன்றைப் போலவே மற்றொன்றும் வளர்வதைப் பார்க்கலாம். பல கிளைகளையும், இலைகளையும் தோற்றுவிக்கும் ஏனைய மரங்களைப் போன்று தோன்றுவதில்லை. இதனை வள்ளல் பெருமான் உணர்ந்திருந்தார். எவ்வித மற்றதாவரங்களையும் குறித்துப்பாடாது, தாம் பாடிய பாடலாகிய வாழையடி வாழையென எனும் தலைப்பைக் கொண்டு பாடியுள்ளது மிகவும் சிந்தனைக்குரியது. வாழையடி மரத்தை மூலமாக வைத்து பாடியதின் நோக்கம் என்ன? ஏன் எத்தனையோ தலவிருட்சங்கள் இருப்பினும், இதற்கு ஏன் முக்கியத்துவம் தந்துள்ளார் வள்ளலார் என்பதை அகக்கண் கொண்டு சிந்தித்தல் அவசியம்.

திருமண வீட்டில் நுழைவாயிலில் வாழை மரத்தைக் கட்டி அலங்கரிப்பது ஏன்? வாழை மரத்தைக் கட்டாது போனால், திருமண வீடாக இருந்தாலும் சரி, வேறு

மங்களகரமான செயல்கள் நிகழ்வதாக இருப்பினும் சிறக்காது. அதத்துடன் தென்னையையோ, பனையையோ கட்டலாம். கமுகு, பாக்கு போன்ற மரங்களையும் வாழைமரத்தோடு இணைத்துக் கட்டினாலும், முதன்மை பெறுவது வாழை மரமேயாகும். நம் முன்னோர்கள் ஏன் இதற்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளனர் எனப் பெரும்பாலோர் சிந்தித்ததாகத் தெரியவில்லை. பலர் வாழைமரம் பல வகையிலும் உணவிற்குப் பயன்படுவதால் கட்டப்படுகிறது எனக் கருகின்றனர். ஏன் வாழையைத் தவிர்த்து மற்ற பொருட்களாகிய ஆடு, மாடு, கோழி பறவை போன்றவைகளை உணவாகப் பயன்படுத்துகிறோமே, அவைகளை ஏன், அதாவது ஆட்டுத்தலையையோ கோழியின் உடற்பாகத்தையோ நுழைவாயிலில் கட்டலாமே! அப்படிக் கட்டுவார்களேயானால், அவைகளை உண்ணக் காக்கையும், கழுகு போன்ற பறவைகளும் சுற்றி வட்டமிட்டுப் பறக்கும். துர்நாற்றம் அடிக்கும். ஏதோ ஒரு அடிப்படை உண்மையை உணர்த்தவே ஏனையவற்றைத் தவிர்த்து, வாழைமரத்தை மட்டும் கட்டி வைத்தனர். இதன் உண்மையை யாராகிலும் சிந்தித்து உள்ளனரா?

திருமணம் செய்து கொள்வரே வாழ்வதற்குத்தானே? தம்பதிகள் எப்படி வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதனை விளக்கவே திருமணப் பந்தலில் முதற்கண் வாழை மரத்தைக் கட்டிக் காண்பித்துள்ளனர். வாழைமரம் எப்படி வாழ்ந்து காட்டி கன்றுகளை ஈன்று பிறகே மடிகின்றது என்பதனை நினைவில் கொண்டு மணத்தம்பதிகள் யாவரும், தமக்குப் பிறக்கும் குழந்தைகளுக்கும் வாழ்ந்து காட்டி நல்வழிப்படுத்த வேண்டும் என்பதனை அறிவிக்கிறது.

எல்லா மரங்களிலும் மலடு உண்டு, ஏன் நெற்பயிரிலேயும் நெல் தோன்றாதத் தன்மை உண்டு. அது போன்று மலட்டுத் தன்மையில்லாமல் வாழ்தல் வேண்டும்

எனும் உணர்ச்சியை வாழைமரம் நமக்குப் பாடம் புகட்டுவதாகக் கொள்ளல் வேண்டும்.

எல்லாத் தாவரங்களுக்கும் விதைகள் உண்டு. இவ்விதைகளைக் கொண்டே செடி கொடி மரங்களை உற்பத்தி செய்வர். ஆனால் வாழைமரத்திற்கு மட்டும் விதையேயின்றி, மண்ணுக்கு அடியில் உள்ளவேர்களின் மூலம் தானாகவே கன்றுகள் தோன்றுவதைக் கவனிக்கலாம். அது போன்று எல்லாச் சிறுவர்களுக்கும் கல்வி எனும் விதையைப் பெற்றோர்கள் மூலம் விதைத்து வந்த போதிலும், ஒரு சில சிறுவர்கள், பெற்றோர்களின் அறிவுரை இல்லாமலேயே, இறையருளால் உணர்த்தப் பட்டு, எல்லோராலும் புகழப்படுகின்றனர். உதாரணத்திற்கு ஞானசம்பந்தர், அருணகிரிநாதர், குமரகுருபரர், வள்ளலார், பாம்பன் சுவாமிகள் போன்றோர்களாவர். இவர்களை வித்தின்றி விளையும் வாழைக்கன்றுக்கு நிகரான அருட்செல்வர்கள் எனலாம். எவருடைய உதவி யுமின்றியே, எங்கெல்லாம் மக்களுக்கு சன்மார்க்கத்தைப் புகட்டவே, ஞானிகளையும், அருளாளர்களையும், வித்தின்றி விளையும் வாழையைப் போல் இறைவனே மூலப் பொருளாக இருந்து தோற்றுவிக்கிறான். இயற்கையின் அடிப்படையில் எல்லாச் செடி கொடி மரங்களுக்கும் இலை உதிர்காலம் பூத்துக்காய்க்கும் காலம் எனப் பல வகையான பருவங்கள் இறைவனால் அளிக்கப்பட்ட போதிலும், வாழைமரத்துக்கு மட்டும், வருடம் பூராவும் வாழைப்பூ தோன்றி, வாழைக்காயும், வாழைப்பழமும் தோன்ற இறைவன், அளித்துள்ளதைக் கவனித்தல் வேண்டும்.

இதனால் தான் எக்காலத்தும் கிடைக்கக் கூடிய வாழைப்பழத்தை இறைவனுக்கு சமர்ப்பித்து வணங்குகின்றனர். பொதுவாக அந்தந்தப் பகுதிகளின் மண்வளத்தையும், சீதோஷ்ணத்தையும் பொருத்தே

மரங்கள் வளரும் தன்மையுடையதை யாவரும் நக்கலாம்.

வாழைமரமோ, எவ்விடத்தும், எக்காலத்தும் வளரும் தன்மையுடையது. மேலும் பருவ காலங்களுக்கு ஏற்ப ஏனைய மரத்தில், பழங்கள் தோன்றிய போதிலும், வாழைமரத்தில் மட்டும் வருடம் பூராவும் வாழைக்காயும், பழமும் தோன்றுவதை அறிந்திருப்பீர்கள். இதனாலன்றோ இறைவனுக்கு சமர்ப்பிக்க வாழைப்பழத்தை பக்தர்கள் பயன்படுத்துகின்றனர்.

பொதுவாக மக்கள் குளித்த நீரைச் செடிகளுக்குத் திருப்பிப் பாய்ச்சி விட்டுப் பாருங்கள், பூஞ்செடிகளோ, மற்ற எந்தச் செடிகளும் பட்டுப் போகும். காய்கறித் தோட்டத்தில் அந்தத் தண்ணீர் பாய்ந்தால் செடிகள் முடங்கிப் போய் வாடிவிடும். அத்தகு அசுத்த நீரைக்கூட வாழைமரத்திற்குப் பாயவிட்டால், அதன் நச்சுத் தன்மையையும் புறக்கணிக்காது ஏற்று வளர்ந்து பயனைத் தந்துவிடும். வாழ்க்கையில் எவ்வித இடர்பாடுகள் துன்பங்கள் நேரிடினும் அவற்றை எல்லாம் தாங்கிக் கொண்டு செழிப்போடு வாழ் என்னும் தத்துவத்தைப் புகட்டுகிறது.

வாழைமரம் ஒரு குலையைத் தள்ளி, காய், கனி தந்து உதவியதுடன் அதன் இலை, பட்டை, நடுதண்டு, வேர் முதலிய எல்லா பாகங்களும் பயன்படுவது போன்று, நாமும் இந்த சமுதாயத்திற்கு தன்னலமின்றி வாழ்ந்து முக்கரணங்களாலும் பிறர்க்கென வாழ்வதே சிறந்த இல்லறம் என்பதனை உணர்த்தவே, நம் கண் எதிரில், வாழ்ந்து காட்டுகிறேன் எனும் ரகசியத்தை உணர்த்துவதாக அறிய முடிகிறது.

மேலும், தம்பதிகள் யாவர்க்கும் பயன்படுத்தும் விதத்தில் வாழ்ந்து, தங்களுக்கு பிறக்கும் குழந்தைகளும்,

பெற்றோர்களைப் போலவே வாழும் என்பதனைச் சொல்லாமல் சொல்லி உள்ளத்தை நெகிழவைக்கிறது.

செடி கொடி மரங்கள் யாவும் பூக்களை மேல் நோக்கியே மலரும் தன்மையுடையது. ஆனால் வாழைமரம் மட்டும் வாழைப்பூவை கீழ்நோக்கியே பூக்கும் தன்மையுடையதை யாவரும் அறிவர்.

இல்லறத்தில் இருந்துகொண்டே, ஆன்மீகத்தில் தம்பதிகளோ, பெற்றோர்களோ, ஏனைய நண்பர்களோ ஈடுபட்டு, காதலால் கசிந்து கண்ணீர் மல்கிப் பாடி, மனக்கண்ணால் மேல் நோக்கியே வணங்கிய போதிலும் பரம்பொருளின் திருவடியையே பற்றாகப் பற்றிக் கொண்டு பக்தியே சிறிதும் உணராத பாமரமக்களை நல்வழிபடுத்தவே, இறைவன் வாழைப்பூவைப் போன்று என்றென்றும் விண்ணிலிருந்து மண்ணிற்குக் கீழ் நோக்கி ரட்சிக்க வருவதையே வாழைப்பூ உணர்த்துகிறது.

வாழைமரம் நன்கு வளர்ந்து முதிர்ச்சியடைந்ததும், வேருக்கும், மேலே வளர்ந்துள்ள இலைகளுக்கும் நடுவே உள்ள மரத்தின் நடுப்பகுதி தூய வெள்ளை நிறம் கொண்ட தண்டு காணப்படும். ஏனைய மரங்களில் நடுப்பகுதியைப் பார்த்தால் கருநிறமோ, செந்நிறமோ கொண்டே விளங்கும். இதைத்தான் வைரம் பாய்ந்த பகுதி எனக் கூறுகிறோம். இறைவனை அன்பினால் உணர்ந்து, ஊற்றெழும் கண்ணீரால் திருமஞ்சனம் செய்து சிந்திக்கும் அடியவர் களின் இதயம், மும்மலங்களையும் அகழ்ந்தெடுத்து, பரிசுத்த வெண்மையான நிலையைத் தோற்றுவிக்கும்.

இதைத்தான் வள்ளல் பெருமானும் புறத்தே வெள்ளை நிறம் கொண்ட வஸ்திரத்தை அணிந்து, நமக்கு விளக்கம் அளிப்பது சிந்தனைக்குரியது. ஏனையோரது உள்ளும் பிறமும், மற்ற மரங்களில் தோன்றும் வைரம்

வாய்ந்த பகுதி கருநிறமுள்ளதற்கு நிகராகும் என்பதனைத் தெள்ளத் தெளிவாக விளக்குகின்றது.

ஆண் என்றோ, பெண் என்றோ பனைமரத்தில் உள்ளது போல் இல்லாத வாழைமரங்கள் அனைத்தும், பூத்துக்குலை தள்ளும் வாய்ப்பினைப் பெற்றுள்ளதையும் சிந்தித்தல் அவசியம்.

இது போன்று பல உண்மைத்தத்துவங்களை, மௌனமாக நம் எல்லோர்க்கும் உணர்த்தும் வகையில், வாழைமரம் அன்றும், இன்றும் வளர்ச்சித் தன்மையில் சிறிதும் மாற்றம் பெறாது விளங்குவதைப் பார்த்து, எங்கோ ஒரு சிலர்தான் அனுபவித்திருக்க முடியும். வாழை மரத்துக்கு உள்ள தத்துவத்தை உணர்ந்து தான் அண்மைக்காலத்தில் வாழ்ந்து காட்டிய வள்ளல் பெருமான்,

> "வாழையடி வாழையென வந்த திருக்கூட்டமரபினில்
> நானொருவன் அன்றோ"

எனப் பாடியதின் உண்மைத் தத்துவத்தை உணர்ந்து, வள்ளலார் அருளிச் செய்த திருவருட்பாப்பாக்களை இன்றிலிருந்து மனமலராலும், கண்மலராலும், கைமலராலும், ஓதி பிரபஞ்சப் பாசறையிலிருந்து அன்பே வடிவான இறைவாயிலுக்குச் செல்ல முயல்வோமாக. வள்ளலார் பாதமலரை நாளும் நினைந்தேத்தி நாடிவரும் வினைகள் ஓடிட வெல்வோமாக.





வள்ளலாரும் வாழை மரமும்

# 32. "இருமாதரையும் தொடேன்"

## (சூடாமணி படலத்தில் ஒருபாடல்)

"வந்து எனைக் கரம் பற்றிவைகல்வாய்
இந்தப்பிறவிக் கிருமாதரையும்
சிந்தையாலும் தொடேனென்ற செவ்வரம்
தந்தவார்த்தை திருச்செவிச்சாற்றுவாய்"

இப்பாடல் அசோகவனத்தில் சிறைப்பட்டிருக்கும் சீதை, ராமபிரானிடம் தெரிவிக்குமாறு அனுமனிடம் கூறிய செய்தியாகும்.

இந்தப் பிறவிக்கு இருமாதரை சிந்தையாலும் தொடேன் - இதற்கு இராமர், சீதையைத் தவிர வேறு எந்த மாதரையும் மனத்தாலும் நினைக்கமாட்டார் என்று தான் சொற்பொழிவாளர்கள் பொருள் கூறுவார்கள்.

அதே பாடலுக்கு தக்க கருத்தை ஞானியர் விளக்கம் தந்ததைப் பார்க்கலாம்.

பொதுவாக, திருமணமான புதிதில், மனைவியைப் பார்த்து இப்பிறவியில் உனையன்றி வேறு பிற பெண்களை நினைக்கவும் மாட்டேன் என சாதாரண நிலையில் உள்ள நம் போன்றவர்கள் கூறுவது இயல்பே. பிழையொன்றுமில்லை.

தெய்வப்பிறவிகளை மனிதர்கள் நிலைக்கு பொருத்தி தாழ்வாக கருதுவது அல்லது பொருள் கொள்வது சரியாகாது. தெய்வப் பிறவிகள் பேசுவதாகவோ, கருதுவதாகவோ இப்பாடலின் கருத்தை நாம் நன்கு சிந்திக்க வேண்டும்.

பொதுவாக கடவுள் 3 சக்திகளை உடையவர். 1. இச்சை, 2. கிரியை, 3. ஞானம். இம்மூன்று சக்திகளும் ஆன்றோர்கள் வகுத்துள்ளதை யாவரும் அறிவர்.

வினாயகர் - சித்தி, புத்தி, வல்லபை 3 சக்திகளை கொண்டுள்ளதாக கூறப்படுகிறது.

சிவபெருமான் - 3 சக்திகளை உடையவராக கூறப்படுகிறது. கங்கை, பார்வதி, பராசக்தி.

முருகர் - வள்ளி, தெய்வானை, வேல் என 3 சக்திகளை பெற்றுள்ளதாக அறியலாம்.

மகாவிஷ்ணு - லட்சுமியாகிய சீதேவி, பூதேவி, நீளாதேவி என 3 சக்திகளை பெற்றிருக்கிறார்.

பிரம்மா - காயத்திரி, சாவித்திரி, சரஸ்வதி 3 சக்திகளை பெற்றிருக்கிறார்.

இராமர் மகாவிஷ்ணுவின் மறுஅவதாரம் அல்லவா! இராமராக அவதரித்துள்ள இப்பிறவியில் தனக்குரிய 3 மனைவியர்களில் தேவியாகிய, சீதாப்பிராட்டியாரை மட்டும் மணந்தவர்.

ஏனைய இரு சக்திகளான பூதேவி, நீளாதேவி எனும் இரு மாதரை மனத்தாலும் தொடேன் என இராமர் சீதையிடம் திருமண சமயத்தில் உறுதி கூறினார். அதையே சீதை அனுமன் வாயிலாக நினைவுப்படுத்த சொல்கிறாள். எனவே இந்தப்பிற்வி எனும் சொல் இப்பொழுதுள்ள இராமவதாரம் என்பதைக்குறிக்கும். இருமாதர்கள் என்றது பூமாதேவி, நீளாதேவி இவர்களை சிந்தையாலும் தொடேன் என்பதை இராமவதாரம் முடியும் வரை மனத்தாலும் அவ்விருவரை நினைக்கவும் மாட்டேன் என்பதாக, ஞானியர் சுவாமிகள் விளக்கம் தந்தது, யாவரையும் வியப்பிலாழ்த்தியது.

இராமர் சீதையிடம் இவ்வாறு கூறியிருப்பானோ? மாட்டோனோ? சீதைக்கு அந்நிலையில் இருந்தபோது புரியுமோ? புரியாதே? நூலாசிரியர்கள் திருமாலின் பிறவியே இராமர் எனவும், திருமகளின் பிறவியே சீதை என எண்ணுவதால் இவ்வாறு பாடியுள்ளார்.

# 33. மூர்த்தியும் கீர்த்தியும்

பாரதம் என்னும் பசுவின் மடியாக விளங்குவது தமிழ்நாடு. இந்த தமிழ்நாட்டை தெய்வமணம் கமழும் திருநாடாக எடுத்துக் காட்டுவது திருக்கோயில்களே ஆகும். இத்திருக்கோயில்களையே மூலப் பொருளாகக் கொண்டு 'பாடலும் பாவமும்" என்னும் கருத்திற்கேற்ப இறை அனுபவத்தில் தோய்ந்து முதிர்ச்சி அடைந்த கலைஞனும் கவிஞனும் பற்பல கோணங்களில் இறைவனது திருவருள் திறத்தினை குறித்து பாடிய கவிகளையும் அதன் மூலமாக அவனது எழில் அழகையும் மனக்கண்ணால் கண்டு களித்திடும் வகையில் பாவத்தோடு சிலை உருவங்களையும் அமைத்து தந்த பெருமை, கவிஞனையும் கலைஞனையும் சாரும் என்பதில் சந்தேகம் இல்லை.

மணிவாசகர் அருளிச் செய்த "பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து" எனும் பாடலுக்கேற்ப, முதலிலேயே தாய்மை வடிவத்திலே கண்டு தொழக்கற்ற மனிதன், மலையையும், கடல் அலையையும் உருவகப்படுத்தி, மலைமகளாக, அலைமகளாக அந்த அன்னையைத் தொழ நினைத்திருக்கிறான்.

இவ்வழிப்பாட்டின்மூலம், கவிஞன் உள்ளத்தில் எழுந்த அழகுணர்ச்சி காரணமாக அந்த அன்னை மக்களுக்கு நல்லறிவு நல்கும் அழகிய கலைமகளாகவும் உருவகப்படுத்தி, கவிஞனது கற்பனையில் தோன்றியிருக் கின்றாள். பெரும்பகுதிகளில் உள்ள ஆலயங்களில் கலைஞன் கை வண்ணத்தால் சிவன்..., பார்வதி, விஷ்ணு-லஷ்மி, முருகன்-வள்ளி-தெய்வானை, வினாயகர் போன்றவர்களுக்கு உருவச்சிலை வடித்திருந்த போதிலும், பிரம்மா தாம் படைத்த திலோத்தம்மையை காதலித்த குற்றத்தினால், அன்று தொட்டு சரஸ்வதிக்கு கணவன்

பேரில் ஏற்பட்ட மனக்கசப்பை நிவர்த்தி ஆகாத காரணத்தினாலோ அல்லது சிறுபிள்ளை முருகனிடம் எல்லோரும் காண, குட்டுப் பட்டதினால் நேர்ந்த அவமானத்தினாலோ, விண்ணுக்கும் மண்ணுக்கும் விஸ்வரூபம் எடுத்த இறைவனின் முடியை காண அன்னப்பறவையாய் சென்ற பிரம்மா முடியில் இருந்து வந்த தாழம்பூவின் துணைக்கொண்டு முடியை கண்டதாக பொய். சொன்ன குற்றத்திற்காக இறைவனால் சபிக்கப் பட்டதாலோ என்னவோ இன்று வரை ஆலயங்களில் இவருக்கு என உருவச்சிலை கலைஞர்களால் அமைக்காது போய் இருக்கலாம். ஒருவேளை சரஸ்வதியின் நேர்மைக்காக உருவச்சிலைகளை ஆலயங்களில் அமைத்த போதிலும் பிரம்மாவுக்கு சிலைகள் நிறுவப்படவில்லை. எல்லோருக்கும் விதியை நிர்ணயிக்கும் பிரம்மா தன்னுடைய விதியை நிர்ணயிக்க என்றுதான் முடிவெடுக்க போகிறரோ?

ஒரு பகுத்தறிவுக் கவிஞன், கனவில் தோன்றிய உருவத்திடம், "கனமான கடவுளே, உன்னை வடித்த சிற்பி எவன்? எனக் கேட்டதும் "அனுபவலாயிலாக காண முயல்வாய்" என்று அவ்வுருவம் பதில் கூறியது. இப்படி ஒரு கற்பனை. இக்கற்பனை காட்சிப் பொருளாக இல்லாத கடவுள் இருந்தால் என்ன? போனால் என்ன? எனும் மனப்பான்மை பகுத்தறிவாளனுக்கு எழுந்திருக்கக் கூடும். உண்மைதான். இவர்கள் எல்லாம் காணாத ஒன்றை நம்ப மறுக்கிறவர்கள், அந்த அளவுக்கு உள்ளத்தில் நேர்மை இருக்கிறது. ஆனால் நம்மில் பெரும்பாலோர் கடவுள் உண்டென்று நம்பின போதிலும், கடவுள் உண்டு எனும் கற்பனை எப்படி எழுந்தது என்பதைக் காண அறிய மறுக்கிறார்கள். காணாத ஒன்றை நம்ப மறுக்கிறவர்கள் பகுத்தறிவாதிகள் என்றால் நம்புகின்ற ஒன்றை காண மறுக்கிறவர்கள் நாம். பக்தியும் ஞானமும் பரவிடும் மார்கங்களின் மூலம் முக்திக்கு வழி கோலி முழுப் பலனை எய்திட, கலைஞனும் கவிஞனும் நமக்கு இரு

கண்கள் போல் உறுதுணையாக இருந்து வழி கோலியவர்கள் ஆவார்கள்.

உலகின்கண் நாமமும் உருவமும் கற்பிக்கின்ற போதுதான் என் தெய்வம் உன் தெய்வம் என்ற பேதம் வெளிப்படுகின்றது. இதனை அடியோடு அறுக்கவே, கவிஞர்களும், கலைஞர்களும் அரும்பாடுபட்டு "ஒன்றேகுலம், ஒருவனே தேவன்' எனும் திருமூலர் வாக்கினுக்கேற்ப, மக்களுக்கு பாடலினாலும் உருவப் பாவனையாலும் பக்தியும் ஞானமும் பரவிடும் மார்க்கத்தை புகட்டியுள்ளனர். மக்கள் தங்கள் தங்கள் பிரியப்பட்ட தெய்வங்களை வணங்கி வந்ததின் விளைவே, இன்று என் தெய்வம் உயர்ந்தது. உன் தெய்வம் தாழ்ந்தது எனும் துவேஷத்தின் அடிப்படையிலே மதக்கலவரமும், பூசலும் நிகழ்ந்து வரலாயிற்று. இதுபோன்ற கருத்து வேறுபாடு களுக்கு முற்றுபுள்ளி வைக்கவே கவிஞனும் கலைஞனும் பாடுபட்டு 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்பதனை மக்களுக்கு பாடலினாலும் பாவனைகளாலும் ஆலயங்கள் வாயிலாக அறிவித்து உள்ளனர். இப்பொழுது நம்முடைய மனது சாந்தி அடைய அனைவரும் பெங்களூர் நெடுஞ்சாலை வழியாக காவேரிப்பாக்கம் சென்று அங்கிருந்து பிரிந்து செல்லும் மண் பாதை வழியாக சுமார் 4 கி.மீ. தூரம் சென்றால் திருபாற்கடல் என்னும் திவ்ய ஷேத்திரத்தை அடையலாம். ஆலய தரிசனத்திற்குச் செல்லும் முன் ஆலயத்தின் வரலாற்றினை தெரிந்துக் கொண்டு போவது தான் விசேடம்.

**திருபாற்கடல் தல வரலாறு**

புண்டரீக மகரிஷி எனும் வைணவ பக்தர், எந்த தலத்திற்குச் சென்றாலும் அங்கு சிவன் கோயிலைக் கண்டால் கண்ணை மூடிக் கொண்டே கடந்து செல்பவர். இவர் காஞ்சியில் வரதராஜரை தரிசித்து விட்டு, மேற்கு நோக்கி மேலும் நடந்துச் செல்கையில், காவேரிப்பாக்கம்

அருகில், திருப்பாற்கடல் எனும் தலம் இருப்பதை கேள்வியுற்று, இது பெருமாள் தலமாகத் தானிருக்கும் என நினைத்து, ஆலயத்தை நெருங்கினதும், கோயில் மதில் சுவற்றில் நந்தியின் உருவச்சிலைகளைக் கண்டதும், அடபாவமே இருந்து இருந்து சிவன் கோயிலுக்கு வரவா இந்த சிரமப்பட்டோம் என மனவருந்தி, திரும்பி செல்லுகையில் விஷ்ணுவே, கிழவேதியர் வடிவத்தில் தம்முடைய பக்தரின் விருப்பத்தை பூர்த்தி செய்ய, புண்டரீகரை தடுத்து, என் தரிசனத்துக்கு வந்தவர் கோயிலுள் நுழையாமலேயே திரும்புகிறீர்கள்? என்ன காரணம் பற்றி? அதற்கு புண்டரீகர், நான் இது பெருமாள் கோயிலாக்கும் என நினைத்து வந்துவிட்டேன். ஊர்ப்பேரை அறிந்தமாத்திரத்தில், இது விஷ்ணு தலமாக இருக்கும் என நினைத்தேன். இந்த பொல்லாத சிவன், ஊர்ப் பெயரைத் திருப்பாற்கடல் என்று வைத்துக் கொண்டல்லவா நம்மை எமாற்றி இருக்கிறார். நானும் ஏமாந்தே போய்விட்டேன் என்றதும், இல்லைசுவாமி நீர் கொஞ்சம் அவசரப்பட்டுவிட்டீர். நீங்கள் தரிசிக்க சென்ற கோயில் பெருமாள் கோயில்தான். நானும் தரிசனத்துக்குத் தான் போகிறேன் வாருங்கள் என அழைத்ததும், “என்னவேதியரே, பெருமாள் கோயில் மதிலில் எது ரிஷபம்? தப்புதண்டா பண்ணி என்னை சிவன் கோயிலுக்கு இழுத்துக் கொண்டு போகாதேயும்”. வேதியர் மேலும் வற்புறுத்தி அழைக்கவே, புண்டரீகர் ஒரு நிபந்தனை போடுகிறார். என் கண்ணை கட்டிவிட்டு கோயில் உள்ளே அழைத்துச் செல்லும் பிறகு தாங்கள், அங்கு இருப்பவர் பெருமாள்தானா என்ற நிச்சயப்படுத்திக் கொண்ட பிறகு நானும் அம்மூர்த்தியை என் கைகளினால் தடவிப்பார்த்து தெரிந்துக் கொண்டதும், என் கண்கட்டை அவிழ்த்து விடவும் என்று சொல்ல, அதன்படி உள்ளே அழைத்துச் சென்று, நாராயணனே தன் வேதியர் உருவத்தை மாற்றிக் கொண்டு அங்கிருத் ஆவுடையார் மேல் நின்று இப்பொழுது பாரும் என்று சொன்னதும், கண் கட்டை அவிழ்த்து பார்த்ததும்,

வெங்கடேசனாக கண்டதும், தன்னோடு வந்த வேதியரை திரும்பிப் பார்க்கையில் காணவில்லை. இத்திருவுருவத்தைக் கண்டதும் இது காறும் புறக்கண்ணால் தொழுத இறைவனை அகக்கண் திறக்கப்பட்டு உளம் பூரித்தார். அன்றிலிருந்தே துவேஷம் அறவே நீங்கி விட்டது.

இந்த வரலாற்றை விளக்கிக் கொண்டே இன்னும் திருப்பாற்கடல் என்ற ஊரிலே பிரசன்ன வெங்கடேசனை தரிசிப்போம். இங்கு தூஷணேசுரர் எனும் பழைய கோயில் எப்படி மாறிவிட்டிருக்கிறதை இன்றும் காணலாம். பக்கத்திலேயே கோயில் கொண்டிருக்கும் திருப்பாற்கடல் ரங்கநாதனையும், ரங்கநாயகியையும் வணங்க வேணும். இப்படித் தனக்கு ஒரு கோயில் இருந்தும், இந்த திருப்பாற்கடல்நாதன், தன் கோயிலையும் ஆக்ரமித்திக் கொள்ள, அந்த பழைய பரமசிவன் விட்டு விடுகிறார். இதன் பின் தன் துணைவி, அபீதபாலகுஜாம்பாளுடன் வாலீசர் எனும் பெயரில் ஊரின் ஒதுக்கு புறத்தில் இடம் பிடித்து நின்று கொண்டிருக்கிறார் இன்றும். இப்பொழுது உங்கள் யாவர்க்கும் ஒருவிதத்தில் மனச்சாந்தி ஏற்பட்டபோதிலும், இதற்குமாறாக ஒரு எதிர்க்கதையும் உண்டு. இக்கதையில் பெருமாள் கோயில் சிவன் கோயிலாக மாறி பிரசித்தி அடைகிறது. இவ்வரலாறு நிகழ்ந்த இடம்தான் திருக்குற்றாலம். இனி நாம் யாவரும் திருக்குற்றாலத்துக்கே பயணத்தைத் தொடங்குவோம். திருக்குற்றாலத்து வரலாற்றினை முதலில் தெரிந்துக் கொள்வோம்.

இமயத்தில் நடக்கிறது இறைவனது திருமணம். அதைக்காண முப்பத்துமுக்கோடி தேவர்கள், முனிவர்கள், ஞானிகள் போன்றோர் அங்கு ஒன்று சேரவே வடப்பாகம் பாரம் தாங்காது தாழவும், தென்பாகம் உயரவும் விளங்கிடக்கண்ட எம்பெருமான், அகத்தியரை அழைத்து தென் திசை செல்ல உத்திரவிட்டு தன் திருமணம் முடிந்ததும் தானும் துணைவியும் திருமண கோலத்திலே

காட்சிக் கொடுப்பதாய் கூறினார். அதே போன்று தென் திசை வந்த அகத்தியர் பொதியமலை வந்து தங்கினதும் திரிகூடமலைப்பக்கம் செல்கிறார். அங்குள்ள கோயில் பெருமாள் கோயில் எனத் தெரிந்தும், இவருக்குத்தான் சைவ வைணவதுவேஷம் இல்லாததால் ஆலயத்துள் நுழைகிறார். அப்பொழுது அங்குள்ளோர் இவரது சிவச்சின்னத்தைக் கண்டு உள்ளே அனுமதிக்க மறுத்தனர். இக்கோயிலுக்கு அருகாமையில் உள்ள இலஞ்சி எனும் முருகன் கோயிலுக்கு சென்று மனம் உருகி தொழுதார். உடனே முருகனே இவருக்கு வழிச் சொல்கிறார். மறுநாள் காலை குளித்து துவாதசநாமம் தரித்து பெரிய வைணவவேடத்தோடு பெருமாள் சன்னிதிக்கு சென்றதும், இவரை அனுமதித்தனர், உள்ளே சென்றவர் பட்டாச்சாரியர்களிடம் தான் ஏகாந்த சேவை செய்யவேணும், அதனால் கர்ப்ப கிரகத்தில் உள்ளே செல்ல அனுமதிக்கவும் என்று சொன்னதின்பேரில் இவர் சிறந்த ஆழ்வாரைப்போல் தோன்றுவதால் அனுமதிப்போம் என்று நினைத்து, அவரது இசைவுக்கு இசைந்தனர். அகத்தியர் உள்ளே சென்று கதவைத் தாளிட்டு பெருமாள் தலையில் கை வைத்து, அமுக்கி "குற்றாலா குறுகுக, குற்றாலா குறுகுக" என்று மந்திர உச்சாடனம் பண்ணுகிறார். அவ்வளவுதான், நீண்டு உயர்ந்து நின்ற வண்ணத்தில் இருந்த நெடுமால் கூனிக்குறுகி சிவலிங்கவடிவில் அமைந்து விடுகிறார். உடனே கதவைத் திறந்து பெருமானைக் காட்டி இங்கு வைணவ அர்ச்சகர்களுக்கு இடமில்லை என்று அனுப்பி விடுகிறார். அந்த பெருமாளும் திரிகூடமலைக் கோயிலைவிட்டு, வெளியே சென்று சங்க நெடு வீதியில் நன்னகரப்பெருமாள் என்ற பெயரோடு சேவை சாதிக்கிறார். இப்படி திரிகூடமலையில் குறுகிய பெருமாள் குறும்பலா அடியிலே குற்றால நாதராக தன் துணைவி குழல்வாய் மொழியாளுடன் காட்சி தருகிறார். திருப்பாற்கடல், திருக்குற்றாலம் வரலாறுகள் நமக்கு எதைக் குறிக்கின்றன? நாட்டிலே

அன்று நிலவியிருந்த சைவ, வைணவ வேற்றுமைகளையே. இந்த வேற்றுமைகளை களையவே கவிஞனும், கலைஞனும் சைவ வைணவ ஒற்றுமையை நிலைநாட்டக் கருதி வழிவகுத்திருக்கிறார்கள். அந்த சைவ வைணவ ஒற்றுமையை உருவகித்து காட்ட எழுந்த மூர்த்தமே சங்கர நாராயணமூர்த்தம். இனி நமது அடுத்த புனித பயணத்தை அந்த சங்கர நாராயணர் கோயிலுக்கே தொடங்குவோம்.

தமிழ் மக்களால் வணங்கப் பெறும் ஒப்பற்ற மூர்த்திகள் இருவர் ஒருவன் தமிழ் மக்களுக்கே உரித்தான கடவுள் முருகன், மற்றொருவன் தடந்தோள் வீரனான இராமன். இவர்கள் இருவரும் ஒப்பற்ற மூர்த்திகள் என்றாலும் இவர்களுக்கிடையே எத்தனை எத்தனையோ வேற்றுமைகள். முருகன் சைவச் சார்புடையவன் தென்னாட்டுக்காரன் ஒன்றுக்கு இரண்டு மனைவியரை வைத்துக் கொள்ள வழிகாட்டியவன். அவன் ஏந்தியிருக்கும் ஆயுதமோ ஞானவேல்.

ஆனால் ராமன் முழுக்க முழுக்க விஷ்ணுவின் அம்சம் வடநாட்டான். ஏகபத்தினி விரதன். அவன் ஏந்தி இருப்பதோ கோதண்டம். இத்தனை அடிப்படை வேற்றுமைகள் இருந்தாலும் இந்த இருவருமே தமிழ் மக்களால் போற்றி வணங்கப்படுகின்ற தெய்வங்கள் ஆவர். இந்த இருவரும் தனித்தனியாக இருப்பதை விட இணைத்துப் பாக்கவே கலைஞன் விரும்பினான். ஆதலால் வேலேந்தியவனை வில்லேந்த வைத்திருக்கிறார்கள். வில்லேந்தியவனை வேலேந்த வைத்திருக்கிறார்கள். அவனை தனுஷ் சுப்ரமணியன் என பெயரிட்டு அழைத்தனர். மேலும் அழகாபுத்தூரில் முருகன் கைகளில் சங்கு சக்கரம் ஏந்தி அருள்பாலிக்கிறார். வில்லேந்திய வேலன் கல்லிலே வடித்து நிறுத்தியிருக்கிறார்கள். திருவையாற்றிலும் திருவண்ணா மலையிலும் செப்புச் சிலையாக வடித்திருக்கிறார்கள். சாய்க்காடு எனும் சாயாவனத்திலே ராமனையும் முருகனையும்

பின்னிப் பிணைந்து நிற்கும் கோலம் எத்தனை அழகு. இந்த பிணைப்புகளுக்கெல்லாம் மூலாதாரம் என்ன? உயிர்கள் அனைத்தையும் ஒன்றோடு ஒன்று இணைக்கும் வலியுடையது அன்பு தானே, "அன்பெனும் பிடியில் அகப்படும் மலையே" என்று வள்ளலார் பாடியுள்ளாரே. அன்பெனும் பிணைப்பில்தானே உலகமே. இதனை முன்னமேயே திருமூலர்

"பொன்னைக்கடந்து இலங்கும் புலித்தோலினன்
மின்னிக் கிடந்து மிளிரும் இளம்
பிறை துன்னிக் கிடந்த சுடுபொடியாடிக்கு
பின்னிக் கிடந்தது என் பேரன்பு தானே"

என்று பாடியிருக்கிறார். இவற்றினை கருத்தில் கொண்டு தாயுமானவரும்,

"அன்பைப் பெருக்கி என் ஆருயிரைக்காக்க வந்த
இன்பப்பெருக்கே, இறையே பராபரமே"

எனப் பாடியுள்ளார்.

பெரும்மைய்புனத்தில் சிற்றெனல் காக்கின்றபேதை கொங்கை
விரும்பும் குமரனை மெய்யன்பினால் மெல்ல மெல்ல உள்ள
அரும்பும் தனிப்ரமானந்தம் தித்திருத்தறித்த வன்றே
கரும்பும் துவர்த்து செந்தேனும் புளித்தறக்கைத்ததுவே

என அருணகிரியார் கந்தர் அலங்காரம் பாடலில் பாடியுள்ளது மிகவும் சிந்தனைக்குரியது.

தெய்வ வடிவங்களையே ஒன்றோடு ஒன்ற பின்னிப் பிணைந்து உயிர்கள் பால் வைத்த பேரன்பை வெளிப்படுத்தவே கவிஞர்களும், கலைஞர்களும், அரிய பணிகளைச் செய்துள்ளனர். ஆலயத்துக்கு செல்லுமுன்பே அந்ததிருவுருவம் எப்படி தோன்றியது என்பதை அறிந்து கொண்டு போவதுதான் சிறப்பு.

சங்கன், பதுமன் என்ற இரண்டு நாகர்கள். சங்கன் சிவபக்தன். பதுமன் விஷ்ணு பக்தன். இவர்களுக்கு ஒரு விவாதம் சிவன் பெரியவரா? விஷ்ணு பெரியவரா? என்று. இதே சந்தேகம் அன்னை பார்வதிக்குமே வந்து விடுகிறது. "இருவரும் ஒருவர்தாமா? வேறு வேறு நபர்கள் தாமா? என்றே சிவனிடம் கேட்டு விடுகிறாள். அவர் என்ன அவ்வளவு எளிதில் விளக்கம் கொடுத்தா விடுவார். பார்வதியை நோக்கி மண்ணுலகில் புன்னைவனத்தில் சென்று தவமிருக்கச் சொல்லி, அங்கு இதற்கு பதில் கிடைக்கும் என்றதும், உமையவள் தவம் செய்து வரும் சமயம், ஆடி மாத பௌர்ணமி அன்று சங்கரனார் சங்கர நாராயணர் உருவில் வந்து அம்மைக்கு காட்சி கொடுக்கிறார். இதனால் அரி, அரன் இவர்கள் ஒருவரே என்றும், அரியும் அரனார் திருவுருவில் அடங்கினவரே என்ற உண்மை நிலை பெற்று விடுகிறது. சங்கனும் பதுமனும் இச்சங்கர நாராயணன் காட்சியைக் கண்டு உண்மைப் பொருளை உணர்கின்றனர். இந்த அரியும் அரனும் பின்னி பிணைந்து நிற்பதிலே ஒரு உண்மையை கலைஞர்கள் நமக்கு உணர்த்தியிருக்கிறார்கள். இதைப்பற்றி பொய்கை ஆழ்வார்,

"அரன் நாரணன் நாமம் ஆன்விடை புள் ஊர்தி
உரை நூல்மறை உறையும் கோயில் - வரை நீர்
கருமம் அழிப்பு அளிப்பு
கையது வேல் நேமி உருவம் கார்மேனி ஒன்று"

எனப் பாடியுள்ளதை கவனிக்கலாம். இரண்டு பெயர்கள், இருவாகனங்கள், இரு இருப்பிடங்கள், இரு தொழில்கள், இரு ஆயுதங்கள், இருவண்ணங்கள் இவை எல்லாம் ஒரே கடவுளுக்கு என்று கூறுவதன் மூலம் சங்கரநாராயணர் உருவத்தை தம்முன் நிறுத்தி விடுகிறார்.

புண்டரீகருக்கும், அகத்தியருக்கும் இடையே இந்த வேற்றுமை வளர்ந்தாலும் அந்த அரனையும் இந்த

அரியையும் பின்னி பிணைத்து அணைந்தே நிற்க வைத்து விடுகிறான் கலைஞன்.

இந்த பின்னலும், பிணைப்பும் சங்கரநாராயணருடன் நின்று விடவில்லை. அன்னையும் அத்தனையும் இணைத்தே பிணைத்திருக்கிறார்கள் கவிஞனும் கலைஞனும். எங்கும் நிறைந்த எம்பெருமானை சிவன் என்றும், எல்லாம் வல்ல அன்னையைச் சக்திச் சொரூபம் எனவும் உருவகப்படுத்துகிறார்கள். இந்தச் சக்தியும் சிவமும் தனித்தனியே இருந்து தொழில்படுவதில்லை என்பதை அறிந்திருக்கிறார்கள். இந்த ஆணும் பெண்ணும் சேர்ந்து இணைவதிலேதான் உலக வளர்ச்சியே இருக்கிறது என்பதை உணர்ந்துள்ளனர். ஒரே உருவில் அம்மையும், அப்பனையும் இணைக்கிறார்கள். அந்த மூர்த்தியே "அர்த்த நாரி" என்றும் "மாதிருக்கும் பாதியன்" என்றெல்லாம் பாடி பரவுகிறார்கள். காதல் மடப்பிடியோடு களிறு வருவதைக் கண்டு, வரிக்குயில் பேடையோடு ஆடி வருவதைக்கண்டு, பேடை மயிலோடும் கூடிப் பிணைந்து வருவதைக் கண்டு, "கண்டேன் அவர் திருப்பாதம் கண்டிறியாதன கண்டேன்" என்று உளக்களிப்பினால் அப்பர் பாடுவதைக் கவனிக்கலாம். இந்த அம்மை அப்பனையும் இணைந்து பிணைந்து நிற்கும் திருக்கோலமே அந்த திருசெங்கோட்டு மலை மேல் ஏறி நிற்கிறது. அந்த செங்கோடனின் வடிவு அமைப்பின் அழகிலே மயங்கி தன் வயம் இழந்த அருணகிரியார் கையாண்ட விதத்தினை அவரது கந்தர் அலங்காரப்பாடலில் பார்ப்போம். முருகனது அழகுணர்ச்சி அவருக்குக் கருவிலே வாய்த்த திருவாக அமைந்திருக்கிறது. மலைமீதேறி அர்த்தநாரியையும், வேலனையும் தரிசித்து பாடிய கந்தர்அலங்காரப்பாடலே "மாலோன் மருகனை" என்பதாகும். அருணகிரி, கடற்கரையிலுள்ள செந்தூர் ஷண்முகனையும் தரிசித்திருக்கிறார். திருச்செங்கோட்டு வேலனையும்

தரிசித்துள்ளார். கடைசியாக திருத்தணி சென்று அவனது தணிந்த கோலத்தையும் தரிசித்ததும் தாம் பாடிய கந்தரலங்காரப்பாடலில், ஏனோ தன்னை படைத்த பிரம்மன்மேல் இத்தனை கோபம். செந்தூர் சென்றால் அங்கு பிரமன் எழுதிய தலையெழுத்து முருகனது கால்பட்டு அழியும் என்கிறார். அடுத்தபடியாக செங்கோடனைக் கண்டு தொழநாலாயிரம் கண் படைக்காமல் போய் விட்டானே அந்தப் பாவிப்பயல். தன்னை தணிகைக்கு அழைக்காத குறைக்கு அந்த பிரமன் பேரிலேயே பழியைப் போடுகிறார். இவ்வாறு எல்லாம் பிரம்மனைச் சாடுகிறார். என்னதான் பண்ணுவான்? அவனோ முன்னமே குட்டுப்பட்டவன். இனியாவது இப்படிக் கவிஞர் களிடத்தும், கலைஞர்களிடத்தும் குட்டுப்படாமல் தப்பித்துக் கொள்ள வேண்டும். எல்லோர்க்கும் தலை எழுத்தை நிர்ணயிக்கிற பிரம்மன் தலைவிதி எப்படி இருக்கிறதோ யார் கண்டார்கள்?

திருச்செங்கோட்டில் உள்ள வடிவம் மிகவும் தொன்மையானதுதான். இந்த வடிவினைத்தானே சிலப்பதிகாரம் இயற்றிய இளங்கோ "கங்கை முடிக் கணிந்த கண்ணுதலோன் பாகத்து மங்கை உருவாய் மறை ஏத்த நிற்கும்" என்பர். இந்த அம்மை அப்பன் உருவில் எத்தனை அழகை கலைஞன் வடித்திருக்கிறான். அதி அற்புதமான சிற்பக்கலைக் கூடமான மாமல்லபுரத்திலேயும், அர்த்தநாரிக்கு ஒருஇடம் ஒதுக்க சிற்பிகள் மறக்கவில்லை. பஞ்சபாண்டவர் ரதங்கள் எனும் 5 கல்ரதங்களிலே கம்பீரமாக உயர்ந்திருப்பது தருமரது ரதம் அந்த ரதத்தின் பின்புறச்சுவரிலே ஒரு அர்த்த நாரியின் வடிவத்தைச் செதுக்கி வைத்துள்ளனர். சக்தியும் சிவமும் தனித்தனியே நிற்பவை அல்ல என்றும் பின்னிக்கிடந்தே அருள்புரிய வல்லது என்றும் அல்லவா எனக் கலைஞர்கள் கற்பனை பண்ணியிருக்கிறார்கள். திருச்செங்கோடு அர்த்தநாரியை

தரிசித்த உங்கள் மனச்சாந்திக்கு இதே போன்று மற்றோர் இணைப்பையும் பிணைப்பையும் கண்டு களிக்க சாய்க்காடு எனும் தலத்திற்கே செல்வோம். வாருங்கள்.

இதுகாறும் கலைஞனாலும், கவிஞனாலும் இறை தத்துவங்களை உருவத்தாலும், அருட்கவிகளாலும் மக்களுக்கு உணர்த்தின போதிலும், இவ்விருவர்களையும் விஞ்சிவிடுகிறார் திருநின்றவூரில் வாழ்ந்த பூசலார் நாயனார். காஞ்சியில் கைலாசநாதர் ஆலயம் எழும்பிய ராஜசிம்மனாலும் இவரது பக்தியின் பெருமையை சைவ பெருமக்களால் உணரப்படுகிறது. கவிஞனாலும், கலைஞனாலும் நிறைவேற்றப்படாத ஓர் அரிய இறை தத்துவத்தை, 63 நாயன்மார்களில் ஒருவ்ரான பூசலார் நாயனார். தன் இருதயத்தையே கோயிலாக அமைத்து அன்பெனும் பிடியில் இறைவனை உள்ளத்திலேயே எழுந்தருளச் செய்து பக்தியின் சிறப்பினை, அண்மையில் வாழ்ந்த வள்ளலாரும் ஒரு பாடலில் 'அன்பெனும் பிடியில் அகப்படும் மலையே' என பாடிப் போந்துள்ளது மிகவும் கவனிக்கத் தக்கது. அவ்வற்புத நிகழ்ச்சி கலைஞனையும், கவிஞனையும் வியப்பில் ஆழ்த்தியது ஆச்சரியம் ஒன்றும் இல்லை.

இதுபற்றி சுவாரஸ்யமான வரலாற்றினை அறிய நாம் யாவரும் காஞ்சி சென்று கைலாசநாதர் கோயிலையும், திண்ணனூர் என இன்று வழங்கப்பெறும் திருநின்றவூரிலுள்ள இருதயகமலீஸ்வரர் ஆலயத்தினையும் கண்டு தரிசிக்க புறப்படுவோம் வாருங்கள். புறப்படுவதற்குமுன், இதன் சம்பந்தமாக என் தந்தையாருக்கு நேர்ந்த ஓர் அரிய சந்தர்ப்பத்தை இங்கு உங்கள் கவனத்திற்கு கொண்டுவருவது அவசியமென தோன்றுகிறது.

சில வருடங்களுக்கு முன்பு, மேல் நாட்டு ஆன்மீக அறிஞர்கள் பலர் கூடிச் சமய உண்மைகளை, எல்லாம் அலசி ஆராய்ந்து கொண்டிருக்கும் நேரத்தில், என் தந்தையாருக்கும்

இக்கூட்டத்தில் கலந்துகொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. ஒரு மேல்நாட்டு அறிஞர் என் தந்தையாரை விளித்து, இறை சம்பந்தமான சில அனுபவ கருத்துக்களை கூறும்படி கேட்ட நேரத்தில், சிறிதும் எதிர்பாராத என் தந்தையாருக்கு. அந்த நேரத்தில் நினைவு வந்த திருநின்றவூர் பூசலார் எனும் அடியார் மனத்தினாலே அமைத்த உளக் கோயிலைப் பற்றி, உள்ளதை உள்ளபடியே சேக்கிழாரால் கூறப்பட்டுள்ளதை கூறினார். உடனே அந்த அறிஞர், "நண்பரே, இவ்வளவும் உண்மையில் நடந்ததா? எனக் கேட்டதும், சேக்கிழார் பொய்யே கனவிலும் நினைவிலாச் சிந்தையுடையவராயிற்றே. அவர் நிகழ்ந்ததை எல்லாம் உள்ளபடியே கூறும் புலவர் அல்லவா? அதனால் அல்லவோ அவரால் இயற்றப்பட்ட நூலுக்கு வெறும் அடியார் புராணம் எனப் பெயரிடாது, பெரிய புராணம் என்றே உணர்வாக போற்றப்பட்டது. அவரால் கூறப்பட்ட நிகழ்ச்சிகளை எல்லாம் உறுதிப்படுத்தும் விதத்திலே, காஞ்சியில்கைலாசநாதர் கோயிலும், திருநின்றவூரில் இருக்கும் கோயிலில் இருப்பவர் இருதயகமலீஸ்வரர் எனும் திருநாமத்தோடு ஓர் ஆலயமும், கண்கூடாக இன்றும் நிலைத்து நிற்கிறதே. ஆதலால் இதுகாறும் சொன்னது அத்தனையும் அப்படியே நடந்திருக்க வேண்டும் என உறுதியாக நான் நம்புகிறேன் என்றே என் தந்தையார் பதில் அளித்தார். அதற்கு அந்த அறிஞர், அன்பரே! இப்படி எல்லாம் நடந்து, அதையே உங்கள் சேக்கிழாருக்கு மட்டுமே உரியவர் என்றே கருதலாம். அவ்வாறு நடவாதிருந்து, அத்தனை விஷயத்தையும் கற்பனை செய்து, கதை சொல்லியிருந்தால், இதுபோன்ற அரிய கற்பனைக்கு மேலே, ஒரு கற்பனை உலக இலக்கியத்திலேயே கிடையாது. உள்ளத்தில் இறைவன் இருக்கிறான் எனும் தத்துவத்தை எல்லா நாடு சமயவாதிகளும் ஏற்றுக் கொணடபோதிலும் அந்த உண்மையில் அழுத்தமான நம்பிக்கை இல்லாமலேயே. அப்படி இருக்க, இந்த உண்மையை விளக்க இப்படி ஒரு சரித்திர வரலாற்றினை உங்கள் சேக்கிழார் உருவாக்கி

இருந்தால் உலகமே அவருக்கு தலைவணங்கி நிற்க வேண்டுமே! என்றார் உண்மைதானே.

இத்தத்துவத்தைத் தானே "இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்கா தான் தாள் வாழ்க" எனப்பாடிய மணிவாசகரையும், "மனத்தகத்தான, தலைமேலான்" என்றெல்லாம் பாடிய அப்பர் பெருமானையும் அல்லவா விஞ்சிவிடுகிறார் இந்த பூசலார் நாயனார். உள்ளத்திலேயே கோயில் கட்டி, தனது திடபக்திக்குள்ள ஆற்றலை உலகம் உள்ளளவும், சைவசமயத்துக்கு ஒரு கலங்கரை விளக்கமாக திகழும் வண்ணம் அமைந்துள்ளது பெரிதும் போற்றத்தக்கது.

இறை சம்பந்தமான தத்துவங்களை விளக்க முற்படும்போது தேவையான சாரமுள்ள கருத்துக்களையும், அதனை விளக்கும் திறமையும், அடியேனுக்கு தோன்றாத்துணையாய் இருந்து அருளுபவன் இறைவனேயாகும். சான்றோர் பெருமக்கள் இதுகாறும் விளக்கிய செய்திகளில், பல கருத்து வேறுபாடுகள் காணலாம். அதில் ஒன்றும் வியப்பில்லை. வேறுபாடுகளை நீக்கி, அடியேனுடைய கருத்தினால் உண்டான பலனைப் பாராட்டுவதானால் அதுவே எனக்கு மனநிறைவு அளிக்கும்.





திருப்புகழ்மாமணி மு அருணகிரி

**நூலாசிரியர்**

இந்நூலாசிரியர் திருப்புகழ் மாமணி மு. அருணகிரி, வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகளின் சீடர். வள்ளிமலை திருப்புகழ் ஆசிரமத்தில் குருகுலம் பயின்றவர். அருணகிரியாரின் பாடல்களினால் மனம் ஈர்க்கப்பட்டு, திருப்புகழைக் குருநாதர் பயிற்றுவித்த இசையிலேயே பாடியும் பரப்பியும் வருகிறார்.

**இந்நூலைப்பற்றி.....**

திருப்புகழ் முத்திக்கொரு வித்து

வேலின் பிரபாவத்தை விரிவாகக் கூறும் பாடலை வள்ளிமலை திருப்புகழ் சுவாமிகளின் முயற்சியால் வேல் மாறல் எனும் தலைப்பில் தொடங்குகிறது. இந்நூல் அருணகிரியார் மனமாகிய தாமரையைக் குஞ்சமாக்கி, அன்பெனும் நூலைக் கொண்டு நாவினாலே சித்திரமாகக் கட்டிய திருப்புகழ் பாமாலை ஞான மணம் வீசும் என விளக்குகிறது.

இறவாத இன்ப நிலையைத் தந்துதவும் திருப்புகழுடன் வாடாமலர் மாலையாகிய கந்தரலங்காரம், மேல்நோக்கில் காடு முரடானாலும் தேனினுமினிய கருத்துக்களையுடைய கந்தரந்தாதி, எளிய நடையுடைய கந்தரனுபூதி, முருகன் எனதுரையைத் தனதுரையாக்கிய திருவகுப்பு சேர்ந்து முருகனுக்கு அருணகிரியார் பஞ்சரத்னமதாணியாகக் கழுத்தில் அணிந்து மகிழும் அழகே அழகு. அனுஷ்டானத் திருப்புகழ் தொகுப்பில், நித்திரை கலைந்தது முதல் நித்திரை செல்லும்வரையிலும், பல சந்தர்பங்களுக்கேற்பவும் ஓதவேண்டிய திருப்புகழ் பாடல்கள் உள்ளன.

சமயக்குரவர்கள் நால்வரது வாழ்க்கையினையொட்டி, அருணகிரியார் சம்பந்தரது புத்திரபாசத்தையும், நாவுக்கரசரது தாசமார்க்கத்தையும், சுந்தரரது தோழமை மார்க்கத்தையும், மணிவாசகரது ஞானமார்க்கத்தையும் ஒருசேர வாழ்ந்து காட்டியதை உணர்த்துகிறது. வழக்கிலுள்ள பிறமொழிக் கலப்பை ஏற்று, சமரச நோக்கில் அருணகிரியார் தமது பாடல்களில் தெலுங்கு, ஆங்கிலம், முகலாய மொழி, வடமொழி முதலானவைகளை அரவணைத்துப் பாடியதோடு தைப்பூசம், மாசிமகம், பங்குனி உத்திரம் போன்ற விழாக்களையும் குறித்து கூறியுள்ளது பாராட்டத்தக்கது.